## கண்ணனுடன் கலக்கும் நான்

எளியனேன் யான்எனலை எப்போது
    போக்கிடுவாய் இறைவனே! இவ்
வளியிலே பறவையிலே மரத்தினிலே
    முகிலினிலே, வரம்பில் வான
வெளியிலே கடலிடையே மண்ணகத்தே
    வீதியிலே வீட்டி லெல்லாம்
களியிலே, கோவிந்தா! நினைக்கண்டு
    நின்னொடுநாடுநான் கலப்ப தென்றோ![1]

—பாரதியார்

---

1. பா. க.: தோ. பா. கோவிந்தன்பாட்டு

# அர்த்த பஞ்சகம்

(ஆசிரியரின் 79-ஆம் அகவை நினைவாக)


விளக்கம் :

'அருங்கலைக்கோன்' 'ஸ்ரீசடகோபன் பொன்னடி'
'தமிழ்ச் செம்மல்'

**பேராசிரியர் டாக்டர் ந. சுப்புரெட்டியார்**

முன்னாள் : பேராசிரியர் - தமிழ்த்துறைத் தலைவர்
திருவேங்கடவன் பல்கலைக் கழகம்
திருப்பதி-517 502

இந்நாள் : தகுநிலைப் பேராசிரியர் (கண்ணியப் பொறுப்பு), தமிழ் இலக்கியத் துறை,
சென்னைப் பல்கலைக் கழகம்,
மெரீனா வளாகம், சென்னை-600 005.



விற்பனை உரிமை :

**பாரி நிலையம்**
184, பிராட்வே, சென்னை-600108

முதற்பதிப்பு : ஜூலை-1994


(ஆசிரியரின் இளையமகன்)
AD-13, (மனை எண்-3354)
அண்ணா நகர், சென்னை-600 040.
தொ. பே. 62 11 583

பக்கம் : xxiv + 155 = 179

விலை : ரூ. 22-00

**ARTHA PANCHAKAM**

அச்சிட்டோர் :
ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம்,
7/40, கிழக்குச் செட்டித் தெரு,
பரங்கிமலை, சென்னை-16

தொண்டே செய்து என்றும் தொழுது வழியொழுகப்
பண்டே பரமன் பணித்த பணிவகையே
—நம்மாழ்வார் (திருவாய் 10-4:9)



கைங்கரியச் செல்வர்
திரு. ஆ. இராமச்சந்திரரெட்டியார்
தேசூர்-604 501
பிறப்பு : 5-6-1924

## அன்புப் படையல்

சந்தமார் செயலால் வைணவம் பேணும்
சால்புறு மாண்பினன்; இனிக்கும்
செந்தமிழ் நாத முனிதிருச் சபையைச்
சிறப்புறப் புரந்திடும் செம்மல்;
சுந்தர மாயன் இசைந்தவேய்ங் குழல்போல்
துலக்குறும் இனியபண் புள்ளோன்;
சிந்தைவாழ் இராமச் சந்திர நம்பி
திருவடிக் குரிய திந் நூலே.

## இறைவனின் தன்மை

ஒன்றே யென்னின் ஒன்றேயாம்;
பலவென்று உரைக்கில் பலவேயாம்;
அன்றே யென்னின் அன்றேயாம்;
ஆமென்று உரைக்கில் ஆமேயாம்;
இன்றே யென்னின் இன்றேயாம்;
உளதென்று உரைக்கில் உளதேயாம்;
நன்றே நம்பி குடிவாழ்க்கை
நமக்கிங்கு என்னோ பிழைப்பம் மா

2. கம்பரா. யுத்த-கடவுள் வாழ்த்து

## சிறப்புப்பாயிரப் பாமாலை

**புலவர் வீர. அரங்கனார்**
*தமிழாசிரியர் - தலைமையாசிரியர் (ஓய்வு)*
*நாராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளி,*
*விழுப்புரம்*

1. **உலகு** புகழ் **வேங்கடத்துள்**
   ஓங்குபுகழ் தமிழ்த்துறைக்கு
   அலகில்புகழ் சேர்த்தவராம்
   ஆற்றல்மிகு தமிழ்த்தலைமை
   நிலவிடவே முதல்வராய்
   நிறுவனத்தின் தோன்றலவர்
   குலவிடவே நம்சுப்பு
   ரெட்டியார் சென்றார்கள்.

2. சென்றார்நம் வேங்கடவன்
   பல்கலையின் கழகத்துள்,
   நன்றாகும் **தமிழ்த்துறையின்**
   **துரையாகி** நலஞ்சேர்த்து
   குன்றாத கொள்கையெனக்
   குலமனித நேயத்தால்
   மன்றம்புகழ் மதிநலத்தால்
   மாமனிசர் ஆனார்கள்.

3. மாமனிசர் இவரென்றால்
மாநிலந்தான் போற்றுகின்ற
சேமஞ்சேர் மலைக்கோடு
பெற்றதெனத் தமிழகத்தின்
மாமய்யம் **திருச்சிமா**
**வட்டத்தின் துறையூரார்**
நாமுயர்ந்தோம் என்றுரைக்கும்
**நல்லாசான்** பொறுப்பேற்றார்.

4. நல்லாசான் நலஞ்சேர்க்கும்
**துறையூரில்** முதன்முதலில்
எல்லாரும் மகிழ்ந்திடவே
**எங்கள் ஜமீன் துரையமைத்த**
நல்லார்கள் போற்றிடவே
**உயர்பள்ளி** நண்ணியவர்
வல்லவராய் மிக உயர்ந்தோர்
வளங்கண்டார் மாண்புற்றார்.

5. வளங்கண்டு மாண்புற்றார்
வாழ்வுக்கு ஏற்றதென
உளங்கொண்டு **ஆங்கிலத்தின்**
**உயர்பட்ட தாரிஇவர்**
களங்கண்டார் **நற்றலைமை**
**ஆசிரியர்** ஆனாலும்
களம்காணும் **கம்பன்கவி**
நயத்தினையும் சுவைத்தளித்தார்.

6. கம்பன்கவி நலங்கண்டு
துடிக்குமந்நாள் தனிலாங்கோர்
**கம்பன்அடிப் பொடியெனவே**
**தனைக்கூறி** வாழ்ந்திட்ட

நம்பன் அவர் **கணேசனார்**
காரைக்குடி நகர்சிறக்க
அம்புவியோர் தாம்போற்ற
**கல்லூரி** அங்கமைத்தார்

7. அங்கமைத்த அழகப்பா
**கல்லூரி முதல்வரிவர்**
தங்குபுகழ் செந்தமிழின்
திறந்தேர்ந்து ஆங்கிலமும்
பங்குபெறப் பயிற்றுவிக்கும்
பாவலராய்ப் பலநூல்கள்
சிங்காமல் எடுத்தெழுதிச்
சிந்திக்கும் பணியேற்றார்.

8. பணியேற்ற பண்பாளர்
பார்புகழ வளர்கின்றார்
மணிவண்ண மாதவனார்
**மாமலையாம் வேங்கடத்தின்**
அணிசேர்க்க அழைத்தனால்
**வாழ்வின்முடி** யதுவெனவே
துணிந்தங்கே **பல்கலையின்**
**தமிழ்த்தலைமை** யோற்றிட்டார்.

9. தமிழ்த்தலைமைத் தொண்டர்தாம்
தந்தநூல் பலவாகும்
தமிழகத்துள் இவர்போன்று
நாளெல்லாம் ஆய்வெழுதிச்
சிமிழ்க்காமல் செப்புகின்றார்
சிலருளரோ எனக்கேட்டுக்
கமழ்கின்ற மணங்கண்டு
களிப்புறுவோம் நாமிங்கே.

10. களிப்புறுவோம் நாமிங்கே
காண்கின்றோம் களிவோடு
சுளிக்கின்றோம் இவரகவை
எண்பதெனச் சொன்னாலும்
அளிக்கின்றார் தாத்தாவாய்
ஆழ்வார்கள் அநுபவத்தை
விளக்கமாய் அர்த்தபஞ்
சகத்தில் ஆழ்த்திவிட்டார்.

11. ஆழ்வார்கள் ஆழங்கால்
பட்டதெல்லாம் அளந்துரைக்கும்
வாழ்வாக அருங்கலைக்கோன்
வந்துதித்தார் வாழ்க! எனச்
சூழ்வோம் அவர்புகழைச்
சொல்வோம் சுவைத்திடுவோம்
வாழ்வோம் ஆயிரத்தில்
இவரொருவர் தாம்என்றே!

12. ஆயிரத்தில் ஒருவராய்த்
தோன்றினார் அவருடைய
பாயிரத்தைப் பகர்கின்றேன்
பாமாலை சூட்டுகின்றேன்
தாயிரக்கம் பெற்றவர் தம்
தகைமையிது ஆதலினால்
நீவிரெலாம் கேட்டிடுவீர்
எனநினைந்து நீட்டுகின்றேன்

13. நீட்டுகின்றேன் வைணவத்தின்
நிகழ்விங்கு நிலவிடவே
கேட்டுவக்க வந்துள்ளோம்
கிளரிளமை செழித்திடவே

நாட்டமுடன் நாமுகந்து
நலம்பெற்று வாழ்த்திடுவோம்
தேட்டமுறு வைணவத்தின்
பிரபந்தம் போக்கியமே.

14. வைணவத்தின் போக்கியமே
வரலாற்றின் வாய்ப்பாகும்
வைணவம்தான் நிறைவாக
விரவியதாம் பரவியதாம்
வைணவம் விஷ்ணுமயம்
என்றுரைத்தால் வயமதுவே
வைணவமே வையம்நிறை
பொருளாக வளர்ந்திடுமே.

15. வளர்ந்தேற்றம் பெற்றிடவே
வண்டமிழால் வேங்கடத்தெம்
உளந்தோய்ந்து உவந்திடவே
நூலொன்றை வெளியிட்டுக்
களங்காணும் அண்ணல்நம்
கலைமுதல்வர் வேங்கடத்தான்
தளர்ந்தோர்க்கு மனம்தேற்றும்
பஞ்சகத்தைத் தந்திட்டார்.

16. பஞ்சகத்துள் மனமிருத்தி
பரிந்துரைத்த வரிகளெலாம்
நெஞ்சகத்துட் கொள்வதற்கே
நேர்பட்டார் தம்நூலில்
எஞ்சகத்தார் ஏன்றுகொள
அருத்த பஞ்சத்தை
செஞ்சுவையில் செப்பியவை
சேமத்தின் நிலைக்களமே.

17. நிலைத்திடுவோம் நீணிலத்துள்
நிலவுகின்ற உயிர்களெலாம்
குலையாமல் இன்புற்று
வாழ்வதற்கே கூறியுளார்
மலைமீது விளக்காகி
மனிதரெலாம் மனங்கொளவே
கலையுரைத்து வைத்தவர்நம்
**கவிமணியாம் டாக்டரிவர்.**

18. **கவிமணிநம் டாக்டர் தாம்**
மனந்திறந்து உணர்த்தியவை
செவிமணக்க **மெய்ஞ்ஞானம்**
**சிந்திக்க விஞ்ஞானம்**
செவியாரச் செப்புமித்
திருமகனை நாமெல்லாம்
குவிந்திங்கே கூடிடுவோம்
வாழ்ந்திடுவோம் வாழியநீர்.

20. வாழ்த்திடவே வாரீர்!
எனவணங்கிக் கூறுகின்றேன்
ஆழ்ந்தமன அன்போடும்
அருளோடும் அறிவுரைத்து
ஆழ்வார்கள் வாழ்வார்கள்
அதுவேநம் விழைவென்போம்
வாழ்த்துதுமே பல்லாண்டு
எனக்கூறி வாழத்துமே.

‘தமிழ் இல்லம்’
2, நவாப் தோப்புத் தெரு
விழுப்புரம்
18—6—1994

— **வீர. அரங்கன்**

## அணிந்துரை

**பேராசிரியர் டாக்டர் இராம. மகாதேவன்**
*முன்னாள் துணைவேந்தர்*
*இராஷ்டிரிய சமஸ்கிருத வித்யாபீடம்*
*திருப்பதி - 517 507*

*ஊண், உறக்கம், அச்சம், இனப்பெருக்கம் இவை மனிதர்கட்கும் விலங்கினங்கட்கும் பொதுவானவை. தர்மம் என்பது மனிதர்கட்கு விசேஷமானது. அதில்லாதவர்கள் மிருகங்கள்.*

*விவாகத்துக்காகப் பெண் எடுக்கப் போகையில் கூட, ''தர்மத்தின் பொருட்டுப் பிரஜா பாலனத்திற்காகத் தங்கள் பெண்ணைத் தரவேண்டும்'' என்று கேட்பது சாஸ்திர மரபு. அதுவும் பிதிர்க் கடனைத் தீர்ப்பதற்காக. ஆக, சிற்றின்பத்திலேயே பேரின்பத்தைத் தேடுவது மனிதன் பிறவி கடைத்தேற வழி.*

*இரண்டு கால் மிருகமான மனிதன் தன்னுடைய மிருகத்தனத்தை விட்டு (அதாவது மிருகத்திற்கே இயல்பான கீழ்தரமான குணங்களை விட்டு) புலனடக்கத்துடன் ஈகை தயை முதலிய நற்குணங்கள் நிரம்பப்பெற்று பிறர் நலம் கருதி வாழ்ந்து, தேவனாக உயர்ந்து நிற்கின்றான். அப்படிப்பட்டவர்களைப் பகவான் கைகொடுத்துத் தன்னிடம் வருமாறு தூக்கிவிட்டுக் கொள்கின்றான். அப்படி ஒரு சிலரைத்தான் தூக்கி விடமுடியும். சமூகம் முழுவதையும் கடைத் தேற்ற முடியாது. அப்படித்தானே மக்களாக உயர முடியாதவர்கள் மாக்களாகவே வாணாளை வீணாக்குகிறார்கள்!*

அப்படியே சமூகம் முழுவதையும் காக்கும் பொறுப் பேற்கும் போது இறைவன் அவதரிக்கின்றான். அதாவது மனிதர்களிடையே இறங்கி வருகின்றான்.

மனிதன் தன் நலத்தையே சரிவரத் தெரிந்து கொள்ளாத போது, கருதாத போது, அவன் பிறர்நலத்தை எப்படிக் கருதமுடியும்? இவ்வளவு ஆசாபாசங்களுடன், காமக் குரோதாதிகளுடன் அவன் எப்படிப் பொறுக்க முடியும்? ஒரு கதை நினைவுக்கு வருகின்றது. கடவுள் ஒரு பக்தன் முன் தோன்றி, ''பக்தனே! உன் தவத்தை மெச்சினேன்; என்ன வரம் வேண்டுமோ, கேள்; தருகிறேன். ஆனால் ஒன்று, உனக்களிக்கும் பலனில் இரண்டு மடங்கு உன் பக்கத்து வீட்டுக்காரனுக்குக் கொடுப்பேன். யோசித்துச் சொல்'' என்றார். ''தனக்கு ஒரு பொருள் கிடைப்பதை விட, பிறருக்கு அது கிடைக்க வொட்டாமல் செய்வ தல்லவா முக்கியம்?'' என்று யோசித்து, கடைசியில் ஒரு வரம் கேட்டான், ''கடவுளே! எனது ஒரு கண்ணைப் போக்கி விடுக'' என்று. தனது ஒரு கண்ணை இழந்தாவது மற்றவனுடைய இரண்டு கண்களையும் போக்கி இன்புறும் நல்லெண்ணம்! மற்றும் புண்ணிய பாவங்களைப் பற்றி யெல்லாம் நிறையக் கேட்டறிகின்றோம். ஆனால் நடை முறையில்!'' மாந்தர்கள் புண்ணியத்தை விரும்புகிறார்கள்; அதனை அடைய வழிகோலும் செயல்களைச் செய்ய விரும்புவதில்லை. அதாவது முதலீடும் உழைப்பும் இல்லாமலே இலாபம் வேண்டும்! அதேபோல் பாவத்தை விரும்புவதில்லை; ஆனால் பாவச் செயல்களை விலக்கு கிறார்களில்லை.''

பதினெண் புராணங்களில் சிவன், விஷ்ணு, சூரியன் என்றிப்படிக் கடவுளர்களைப் பற்றி வருணிக்கப் பெற்றி ருக்கின்றது. அவற்றுள் ஒன்றான கருட புராணத்தில் இறந்த மனிதனுடைய ஆவி எங்கெங்குச் செல்லுகிறது? அவனது புண்ணிய பாவங்களுக்கேற்ப என்னென்ன கதியை அடைகின்றது? என்றெல்லாம் விவரிக்கப் பெற்

றுள்ளது. இறந்த வீட்டில் முதல் பத்து நாட்களில் இதை வாசித்து எல்லாரையும் கேட்கச் செய்வர், இதைக் கேட்டாவது அவர்கள் திருந்தட்டுய் என்று. இந்தக் கருட புராணத்தை எழுத ஆரம்பித்ததன் நோக்கம் என்ன? ஒரு சுலோகம்; "நாராயணன் என்னும் சொல் இருக்கிறது. அதைச் சொன்னால் உய்யும் வழி என்றும் தெரிகின்றது. நம்மவர்க்கும் நம் சொற்படி வார்த்தைகளை உச்சரிக்க வல்லது (வியாதி முதலியவைகளால் நலிவுறாமல்)· ஆனாலும், மாந்தர்கள் நரகத்தில் உழலுகின்றார்கள். என்ன விசித்திரம்!" என்கிறது. உபாயங்கள் தெரிந்தும் அவற்றில் ஈடுபாடு இல்லாமல் சோம்பல், மற்றக் கவைக் குதவாத விஷயங்களில் கவனம்.

இவற்றையெல்லாம் நீக்க மனிதன் பகுத்தறிவு உள்ள வனாக, அதாவது விவேகம் உள்ளவனாகத் தன்னையும் மற்றவர்களையும் வாழ்வித்து, உய்வித்து உயரும் வகையில் கடைத்தேற ஆறு வழிகள் "ஷண் மதங்கள்" என்ற பெயருடன் சங்கராசாரிய சுவாமிகள் ஸ்தாபித்தார்கள். அதில் வழிபடு கடவுளர் அறுவர்; கணபதி, சூரியன், சக்தி, சிவன், குமரன், விஷ்ணு என்பவர்கள்.

இப்படி விஷ்ணுவைப் பரமான தெய்வமாகக் கருதி வழிபடும் வைணவ சமயத்தில்தான் இந்நூலில் விரிவாக உரைக்கப்படும் **'அர்த்த பஞ்சகம்'** வருணிக்கப்பெறு கின்றது. அந்தந்த சம்பிரதாயங்களையும் தத்துவங் களையும் நன்கு அறிந்து அவற்றின்படி வழிபடுவோமே யானால், இறைவன் பதமாகிய முக்தி எளிதில் கிட்டும். ஈண்டு ஒரு வரலாறு நினைவு கூரத் தக்கது,

திரௌபதி, மான சம்ரட்சணத்துக்குப் பின்னர், ஒரு சமயம் கிருஷ்ண பகவானிடம் மிகவும் கோபமாக, "கண்ணா! நீ மிகவும் பொல்லாதவன். துச்சாதனனிடம் சிக்கித் தவித்து உன்னைத் துதித்தால் நீ மிகவும் தாமதமாக வந்து என்னை மிகவும் சோதித்து விட்டாய்." என்கிறாள்.

கண்ணன் தனக்கே உரிய மாயச் சிரிப்புடன், "திரௌபதி! நான் அங்கேயே இருந்தேன். 'கிருஷ்ணா!' என்றோ நீ அழைத்திருந்தால், அங்கேயே உனக்கு உடன் உதவி செய்திருக்க முடியும். ஆனால் நீயோ 'துவாரக வாசா!' என்று கூவி அழைத்தாய். ஆகவே, உனக்காக ஒருமுறை துவாரகை சென்று திரும்ப வேண்டிய நிர்ப்பந்தத்தில் சிறிது கால தாமதமாய் விட்டது" என்கின்றான். பரம பாகவதையான திரௌபதியின் கதியே இப்படி என்றால் நம் போன்றவர்களின் கதி என்னாவது? ஆகவே, அந்தந்த தத்துவங்களைச் சரிவர நன்கு புரிந்து கொண்டு அவ்விதமே அநுட்டித்தால் விரைவில் பலன் கை கூடும் என்பது முக்காலும் உண்மை.

இந்நூலில் நுவலப்படும் '**அர்த்தபஞ்சக ஞானம்**' என்பது சம்சாரியான சேதநன் தத்துவஞானம் பிறந்து உய்யும்போது தோன்றுவதாம். இது (1) ஈசுவரனது இயல்பு, (2) ஆன்மாவின் இயல்பு, (3) ஆன்மா அடையும் பயன், (4) அப்பயனை அடைவதற்குரிய வழிகள், மற்றும் (5) அப்பயனை அடைய வொட்டாமல் தடுக்கும் இடையூறுகள் இவை ஆகும். இவற்றைப் பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் இந்நூலில் மிக விரிவாக, ஆழ்வார்களின் பக்திப் பாசுரங்களிலிருந்து தெளிவான மேற்கோள்களுடன் விளக்கியுள்ளார்கள்.

திங்கட் கிழமையன்று அமாவாசை வந்தால் அன்று அரசமரத்துக்கு (அசுவத்த நாராயணனுக்கு) விசேஷ பூசை செய்வர். தின்பண்டங்களையோ பழங்களையோ மற்றும் சீப்பு, கண்ணாடி முதலிய உபயோகமான பொருள்களில் 108 கணக்கிட்டு வைத்துக் கொண்டு, ஒவ்வொரு முறை அரசை வலம் வந்ததும், மேற்கூறிய பொருள்களில் ஒன்றை எண்ணிக்கைக்காக உபயோகித்து 108 உம் முடிந்ததும் அந்தப் பொருள்களைப் பூசையில் படைத்துப் பிறகு அவற்றை மற்றவர்கட்கு இலவசமாக விநியோகித்து மகிழ்வர்.

பேராசிரியர் ரெட்டியார் அவர்கள் வேறு பொருள்கள் எவையும் சமைக்காமல், அல்லது வாங்காமல் தம் உள்ளக் கருத்தான நூல்களையே (தம் உள்ளத்தையே) சீமந் நாராயணனுக்கு (அமாவாசைக்காகக் காத்திராமல்) சமர்ப்பித்து வருகின்றார்கள். ஆசிரியம், இலக்கியம், திற னாய்வு. சமயம்-தத்துவம், அறிவியல், ஆராய்ச்சி, வாழ்க்கை வரலாறு- தன் வரலாறு என்றிப்படி அந்த விதத்தில் கிட்டத்தட்ட 108 ஐ நெருங்கியும் விட்டார்கள். இந்தப் பூசை முடிந்ததும் வேறு பூசைகள் என்றிவ்வாறு பேராசிரியர் டாக்டர் ரெட்டியாரவர்களின் நூற்றொண் டான அரச பிரதட்சணம் பன்னெடுங்காலம் தழைத் தோங்கவும், அதனால் வாசகர் உலகம் பயன் பெற்று உய்யவும் அருள் புரியுமாறு அருள்மிகு பதுமாவதித் தாயாரையும் அருள்மிகு திருவேங்கடவாணனையும் இறைஞ்சி நிற்கின்றோம்.

> ''நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
> நாராயணா என்னும் நாமம்''

*திருப்பதி*
*7-6-1994*

**— இராம. மகாதேவன்**

## நூல் முகம்

கருமுகில் அனைய வடிவமும் செய்ய
கண்மலர்க் கருணையின் எழிலும்
திருவளர் மார்பும் பங்கயக் கரமும்
திருநடம் புரியும்இங் கிதமும்
மருவளர் வெண்ணெய் அருந்திய வாயும்
மகிழ்ந்திடு முறுவலின் இயல்பும்,
இருபொழு தின்னும்என் இதயம்உற்று ஆளும்
தாளும்,எந் நாளும்நான் மறவேன்.[3]

— **வில்லிபுத்தூராழ்வார்**

**'சிலப்பதிகாரம்'**, 'மணிமேகலை' என்றவை 'இரட்டைக் **காப்பியங்கள்'**. இவை ஒரே காலத்தில் இரண்டு பெரிய நல்லிசைப் புலவர்களால் இயற்றப் பெற்றன. இவற்றைப் போலவே ஒரே காலத்தில் (1993-1994) பிள்ளை உலக ஆசிரியர் அருளிச் செய்த மணிப் பிரவாள நடையிலுள்ள **'நவவிதசம்பந்தம்'**, **'அர்த்தப் பஞ்சகம்'** என்ற இரண்டு இரகசியங்கட்கும் சிற்றறிவுடையேனான அடியேன் **ஒருவனால் விளக்கம்** எழுதப்பெற்று வெளியிடப் பெற்றன. 'நவவிதசம்பந்தம்' எழுதப் பெற்றமைக்கு ஒரு சிறு வரலாறு உண்டு. அந்த வரலாற்று நிகழ்ச்சி எம்பெருமான் ஏழுமலையானால் ஏற்படுத்தப் பெற்றது.[4] அந்த நூல் முற்றுப் பெற்ற நிலையில் **'அர்த்த பஞ்சகம்'** என்பதன் விளக்கத்தையும் எழுதுமாறு ஏழுமலையப்பன் பணித்த தாகச் சிரமேற்கொண்டு எழுதி முடித்து வெளியிடு

---

3. வி. பா : கீசகவதைச் சருக்கம். ஏட்டுப் படி ஒன்றில் காப்பாக உள்ளது.

4. நவவிதசம்பந்தம் — நூல் முகம் காண்க.

கின்றேன். இதனை எழுதி முடிப்பதற்கும் ஏறக்குறைய நாற்பது நாட்கள் (நாள்தோறும் பத்து மணிப் பணி) ஆயின. இந்த நூலுக்கும் ஏழுமலையான் கடைக் கண் நோக்காகவே மானியம் கிடைத்தது. சற்றுக் குறைவாகவே கிடைத்தது. முட்டுவழிச் செலவில் மூன்றில் இரண்டு பங்கிற்குச் சற்றுக் குறைவாகவே உதவியது. மீதிப் பணம் அடியேனின் கையைக் கடித்தது. ஒருவாறு நூலும் அச்சு வடிவம் பெற்றது. மானியம் வழங்கிய திருமலை-திருப்பதி தேவஸ்தானத்திற்கு என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.

இந்நூலைச் செவ்விய முறையில் அச்சிட்டு உதவிய திரு முனிசாமி (மேலாளர், ஸ்ரீவேங்கடேசுவரா அச்சகம்) அவர்கட்கும் அட்டை ஓவியம் வரைந்து அச்சுக் கட்டைகள் தயாரித்தும், அட்டையை மூன்று வண்ணங்களில் அச்சிட்டும், அதற்குக் காப்புரை (Lamination) அமைத்தும் உதவிய ஓவிய மன்னர் திரு.P.N. ஆனந்தன் அவர்கட்கும், இதற்கு நன்முறையில் கட்டமைத்துக் கற்போர் கரங்களில் கவினுறத் தவழச் செய்த திரு. V. திருநாவுக்கரசுக்கும் என் உளங்கனிந்த நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன்.

புலவர் வீர. அரங்கனார் எம் குலத் தோன்றல். ரெட்டி குலத்தைச் சொல்லவில்லை; புலவர் குலத்தைச் சொல்லு கின்றேன். தெலுங்கு பேசும் எம் பக்கத்து ரெட்டி குல இளைஞர்கள்—இளமையில் ஆங்கிலக் கல்வி பெறும்வாய்ப் பிழந்தவர்கள் - வீறுசால் தமிழை- 'தமிழ், தமிழ்' என்று சொல்லுந்தோறும் நாவுக்கு 'அமிழ்தம்' என இனிக்கும் இனிய தமிழின்மேல் எல்லையற்ற காதல் கொண்டு திருவையாறு சென்று அங்குள்ள அரசர் கல்லூரியில் ஐந்தாண்டுகள் பயின்று வித்துவான்பட்டம் பெற்றார்கள். அவர்களுள் ஒருவர் வீர. அரங்கனார். எங்கட்கெல்லாம் முன்னோடியாகத் திகழ்ந்தவர். சேலம் மாவட்டம் நாமக்கல் வட்டத்திலுள்ள வரகூர், பவித்திரம், நாவலடிப் பட்டி சிற்றூர்கள் ரெட்டியார் பாகவதர்கள் அதிக

எண்ணிக்கையுள்ளவை. அங்ஙனமே, வரகூர் திருவை யாற்றில் படித்த அதிக எண்ணிக்கையுள்ள புலவர்கள் கொண்டது. அந்த ஊரைச் சார்ந்தவர் திரு விர. அரங்க னார். இவ்வளவு எண்ணிக்கையில் உள்ள புலவர்கட் கெல்லாம் வழிகாட்டியாக இருந்து நெறிப்படுத்தியவர் **திரு. பு. ரா. புருடோத்தம நாயுடு** அவர்கள். இவர்கட் கெல்லாய் கலங்கரை விளக்காகத் திகழ்ந்தவர் மயிலை முனிவர் பன்மொழிப் புலவர் **திரு. வே. வேங்கடராஜுலு ரெட்டியார்** அவர்கள்.

இவர்களில் பெரும்பாலோர் ஊர்ப் பக்கங்களிலேயே தமிழாசிரியர்களாகப் பணியாற்றி தம் ஊர் களிலேயே அடங்கிப் போனவர்கள். நால்வர் பல இடங் களில் பணியாற்றி ஓய்வுபெற்று நற்புகழுடன் வேற்றூரில் குடியேறி நிலையாக வாழ்பவர்கள். திரு. வீர அரங்கனார் விழுப்புரத்தில் தமிழாசிரியராகப் பணியாற்றி அப்பக்கத் திலுள்ள ஒரு பெண்ணை மணந்து கொண்டு இல்லம் அமைத்துக்கொண்டு விழுப்புரத்தில் தங்கியுள்ளவர். படித்த காலத்தில் துடிப்புள்ள புலமை மிக்க இளைஞர்; பணியாற்றிய காலத்தில் 'நல்லாசான்' என்ற புகழுடன் திகழ்ந்தவர்; நற்பழக்கங் கள் உள்ளவர்; சமூக உறவுகள் அதிகம் கொண்டவர். கடுமையாக உழைப்பவர். புலவர்களில் உயர்நிலைப்பள்ளி முதல் தலைமையாசிரியராக உயர்ந்து புகழ் பெற்றவர். இவர், என் முதல் மகன்பொருட்டு என்னுடன் பெண் தேடி தென் ஆர்க்காட்டு மாவட்டத்தில் அலையும் போது எனக்கு உறுதுணையாக இருந்தவர். பழகுவதற்கு இனியர்; பண்பாடு மிக்கவர். 'பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்' என்ற பொன்மொழிக்கு இலக்கிய மாகத் திகழ்பவர். இத்தகை பண்பாளர் இந்த நூலுக்கு சிறப்புப் பாயிரப் பாமாலை நல்கியது இந்நூலின் பேறு; அடியேனின் பேறுமாகும். இதனை நல்கிய என் உடன் பிறவாச் சோதரர் திரு வீர. அரங்கனாருக்கு என் உளங் கனிந்த நன்றி உரித்தாகும்.

இந்த நூலுக்கு அணிந்துரை நல்கிய பேராசிரியர் டாக்டர் **இராம. மகாதேவன்** தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலிச் சீமையைச் சேர்ந்தவர். ஆலைக்கொம்பன் அரிசிச் சோறு உண்டு தண்பொருநையாற்று நீரைப் பருகிய தால் அறிவுக் கூர்மையுள்ள வடமொழிப் புலவர். சென்னைப் பல்கலைக் கழகத்தில் வடமொழியில் எம்.ஏ., (1957), பூனா டெக்கான் கல்லூரியில் (1964) பி.எச்.டி (மொழியியல்) பட்டங்கள் பெற்றவர். பூனா கல்லூரியில் மொழியியலில் முதுநிலை படடங்கள் (1959, 61) பெற்றவர். புதுக்கோட்டை அரசர் கல்லூரி முஸ்ஸவுரி, திருப்பதி வடமொழி வித்தியா பீடம் முதலிய பல இடங் களில் பேராசிரியராகப் பணியாற்றியவர். ஆய்வு அநுபவம் இவருக்கு நிறைய உண்டு. டெக்கான் கல்லூரி மைசூர் இந்திய மொழிகளின் ஆய்வு மையம் ஆகிய இடங்களில் (1959, 1961, 1965, 1968, 1976) பல் வேறு ஆய்வுகளை மேற்கொண்டு பல் புகழ் ஈட்டியவர். நான்கு ஆய்வுநூல் கலையும் பத்துக்கு மேற்பட்ட அகழ் ஆய்வுக்கட்டுரை களையும் வெளியிட்டு ஆய்வுலக அறிஞர் களின் கவனத்தை ஈர்த்தவர். இறைவன் இங்ஙனம் பல் வேறு அநுபவங்களையும் அளித்ததோடு துன்பங்களையும் தொல்லைகளையும் இடைஇடையே வழங்கினான். இவற்றையெல்லாம் டாக்டர் மகாதேவன் நுகர்வினை (பிராரத்தம்) எனப் பொறுமையுடன் தாங்கி மகிழ் ந்தவர். துன்பத்திலும் இன்பங்காணும் பண்பை இவருக்கு இறைவன் வழங்கியுள்ளான்.

பழகுவதற்கு இனியவர்; அடக்கம் இவரது அணிகலன்; நிறைகுடம் தளும்பாதல்லவா? அடியேன் திருப்பதியில் ஓய்வு பெறுவதற்கு முன்பே(அக்டோபர்-1977) இவர் வடமொழி வித்யாபீடத்தில் துணைப் பேராசிரியராகப் பதவி ஏற்றிருந்தாலும் (நவம்பர் 1976) நெருங்கிப்பழகும் வாய்ப்பு ஏற்படவில்லை. இந்த ஆண்டு அவர் இராஸ்டிரிய வித்யாபிடத்தின் (Deemed University) துணை

வேந்தராக இருந்தபோது (மார்ச்சு-1994) அடியேன் அங்கு தேர்வாளராகச் சென்றபோது ஒருநாள் பழகும் வாய்ப்பு ஏற்பட்டது. எங்கள் இதயங்கள் பேசின ஒரு நாள் பழகினும் பெரியோர் கேண்மை இருநிலம் பிளக்க வேர்வீழ்க்குமல்லவா? எங்கள் உறவு அப்படியாகிவிட்டது. இந்தநூலுக்கு அரியதோர் அணிந்துரை பெறவும் வாய்ப்பளித்தான் ஏழுமலையப்பன். அணிந்துரை பெற்றது இந்தநூலின் நற்பேறு; அடியேனின் பேறுமாகும். அணிந்துரை வழங்கிய அன்பர் மகாதேவனுக்கு அடியேனின் நன்றி என்றும் உரியது.

திருவாளர் A. இராமச்சந்திர ரெட்டியார் வடஆர்க்காடு மாவட்டம் வந்தவாசி வட்டம் தேசூரைச் சேர்ந்தவர்; வழி வழி வைணவ மரபினர்; நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்த நிலக்கிழார்; ஏழை எளியோர்க்கு இரங்கும் இயல்பினர். திருமால்பால் பக்தி நிறைந்த பண்பினர். ரெட்டி குலத்தினரிடம் இயல்பாகக் காணப்பெறும் விருந்தோம்பும் பண்பு இவரிடம் நிறைய உண்டு. எவருடனும் இன்முகத்துடன் பழகி இன்சொல் உதிர்க்கும் பெருமகனார்.

கடந்த பத்தாண்டுகளாக இவரும் இவரோடு ஒத்துழைக்கும் சில வைணவப் பெருமக்கள் சிலரும் வந்தவாசி நகரில் ஸ்ரீமந் நாதமுனிசுவாமிகள் வைணவ சபையைத் தோற்றுவித்து அதன் தலைவராக நின்று அரும்பணிகள் ஆற்றி வைணவத்தைக் குன்றாது பாதுகாப்பவர். ஆண்டு தோறும் சூலைத் திங்களில் (ஆடித்திங்கள் முதல் அல்லது இரண்டாவது சனி, ஞாயிறு) ஆண்டு-விழாவைணவமாநாடுநடத்தி அறிஞர்களைக்கொண்டு சொற்பொழிவுகள் நிகழச் செய்துத்தீபாராதனை நடத்தியும்பெருந்தொண்டு ஆற்றிவருபவர். கடந்த எட்டு ஆண்டுகளாக ஞாயிறு தோறும் பிற்பகல் 2 மணி அளவில் பகவத் விஷயகாலட்சேபம் நடைபெறச் செய்துவருபவர்.

இப்பெருமகனாரை முன்வைத்து இரெட்டியார் சமூகம் ஆண்டுதோறும் ஆறு ஆண்டுகளாக ஸ்ரீ பெரும் புதூரில் உடையவர் ஊர்வலத்தில் (47 தேரடித்தெருவில்— ஸ்ரீராமாநுஜ கைங் காயசபை, என்ற பெயரில்) ஆறுநாள் ததியாராதனை நடத்திவருகின்றது இங்ஙனமே காஞ்சி யில் வரதராசர் பெருவிழாவில் (வைகாசியில்) ஆறு ஆண்டு களாக கருட சேவையிலிருந்து எட்டுநாள் (82 மலையாளத் தெரு, விஷ்ணுகாஞ்சி) 'பேரருளாளர் பெருமாள் சபை' என்ற பெயரில் ததியாராதனை நடத்தி வருகின்றது. சாதி வேறுபாடு இன்றி எல்லோருக்கும் ததியாராதனை உண்டு. இங்ஙனம் பல்வேறுவகையில் கைங்கரியத்தைப் பிறவிப் பேறாக நடத்திவரும் இப் பெருமகனாருக்கு இந் நூலை அன்புப் படையலாக்கி என்வாழ்க்கையைப் புனித மாக்கிக் கொள்ளுகின்றேன். சிறந்த வைணவ அடியாரா கிய இவர் ஆசியால் என் வைணவப்பணி மேலும் மேலும் வளர்ந்தோங்கும் என்ற நம்பிக்கை என்பால் உண்டு.

''என்றைக்கும் என்னை உய்யக் கொண்டு போகிய, அன்றைக்கு அன்று என்னைத் தன்னாக்கி, (திருவாய்7.9:1) என்னுளே நின்று இந்நூலை எழுத வழி காட்டினான் ஏழுமலையப்பன். அந்தப் பெருமான் 'வேங்கடம் மேவிய விளக்காக' என்னுள்ளே நிரந்தரமாக எழுந்தருளியிருந்து கொண்டு புகல் ஒன்று இல்லா அடியேனுக்கு எல்லா நலன்களையும் ஈந்தும் இந்நூல் வெளிவரவும் ஓரளவு அப்பெருமான் பொருளுதவிமாசெய்தும் உதவினான். திருவடிகளைப் போற்றிச் சரண் அடைகின்றேன்.

> தேடிய அகலிகை சாபம் தீர்த்ததாள்;
> நீடிய உலகுஎலாம் அளந்து நீண்டதாள்;
> ஓடிய சகடுஇற உழைத்து, பாம்பின்மேல்
> ஆடியும் சிவந்ததாள்; என்னை ஆண்டதாள்.[5]

— **வில்லிபுத்தூராழ்வார்**

வேங்கடம்
AD—13 (மனை எண் 3354)
அண்ணா நகர்,
சென்னை-600 040
17-7-1994

**ந. சுப்புரெட்டியார்**

---

5. வில்லிபந்தம் : நான்காம் போர்ச் சருக்கம் காப்பு.

# உள்ளுறை



## பின்னிணைப்புகள்

# 1. அர்த்த பஞ்சகம்

**ஓர்** ஆற்றங்கரை. அந்தக் கரையில் படகோட்டி ஒருவன் வழிப்போக்கர்களை இக்கரையிலிருந்து அக்கரைக்கும், அக்கரையிலிருந்து இக்கரைக்கும் கடத்தி அந்த வருவாயைக் கொண்டு தன் வாழ்க்கையை நடத்தி வந்தான். ஒரு சமயம் "கற்றறி வித்தகன்" என்று தன்னைக் கருதிக் கொண்டு அகந்தையுடன் இருக்கும் ஒருவனுக்கு இக்கரையிலிருந்து அக்கரைக்குப் போகும் வாய்ப்பு நேர்ந்தது. அறிஞன் படகில் ஏறிக்கொண்டான். இருவருக்கும் இடையே அடியில் கண்டவாறு உரையாடல் நிகழ்ந்தது.

**அறிஞன்** : படகுக்காரனை நோக்கி "நீ பகலத் கீதை படித்திருக்கிறாயா?" என்கின்றான்.

**படகோட்டி** : "சுவாமி! அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது. அந்தப் பக்கத்தில் தலைவைத்துக் கூடப்படுப்பதில்லை." என்கிறான்.

**அறிஞன்** : "அப்படியானால் உன் வாழ்க்கையில் பாதி வீணாகிவிட்டது" என்கிறான்.

**அறிஞன்** : "உனக்கு வேதம், உபநிடதங்கள் தெரியுமா?" என்கின்றான்.

**படகுக்காரன்**: "சுவாமி! இவையெல்லாம் என் வாழ்க்கைக்குப் பயன்படாதவை. ஆகவே, இவைபற்றித் தெரிந்துக்கொள்ள எனக்குச் சிறிதும் ஆசை இல்லை" என்கிறான்.

**அறிஞன் :** "அப்படியானால் உன்வாழ்க்கையில் இன்னும் கால்பங்கு வீணாகிவிட்டது" என்கின்றான்.

படகுக்காரன் ஆற்றைக் கடப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தானாதலால் தன் பணியிலேயே மூழ்கிக் கிடந்தான். தனக்குத் தெரியாத விஷயங்களில் எல்லாம் அறிஞன் இப்படிப் பேச்சுக்கொடுத்ததை அவன் சிறிதும் விரும்பவில்லை. ஆனால் அறிஞன் கேட்டவற்றை பாதிக் கேட்டு, பாதிக்கேட்கமால் ஏதோபதில் சொல்லி வந்தான். ஒரு நிலையில் அறிஞனின் பேச்சு படகுக்காரனுக்கு எரிச்சலை ஊட்டியது. அவன் அறிஞனைக் நோக்கி "ஐயா! உமக்கு நீந்தத் தெரியுமா?" என்ற வினாவை எழுப்பினான். அறிஞன் "தனக்குத் தெரியாது?" என்றான். "அப்படியானால் உங்களது வாழ்க்கை முழுவதும் வீணாகிவிட்டது. ஏனெனில், படகுஓட்டை ஆகிவிட்டது. அதன் வழியே நீர் வேகமாக புகத் தொடங்கிவிட்டது. இன்னும் சிறிது நேரத்தில் படகு மூழ்கிவிடும். இத்தனைக் கலைகளைக் கற்றதாக நினைத்துக் கொண்டு இருக்கும் தாங்கள் அன்றாட வாழ்க்கைக்குப்பயன்படும் நீச்சல் கலையைக் கல்லாததால் உங்கள் வாழ்க்கை முழுதும் வீணாகிவிட்டதே!" என்று கூறிவிட்டுப் படகுக்காரன் ஆற்றில் குதித்து நீந்தத் தொடங்கிவிட்டான். கலைஞன் நிலை என்ன ஆகியிருக்கும் என்பதை நாம் எடுத்துக் கூறவா வேண்டும்! அவன் நீரோடு போய் இருப்பான்.

அந்தக் 'கற்றறிவித்தகனை'ப்போல வேதங்கள், உபநிடதங்கள் முதலிய அனைத்துக் கலைகளைக் கற்றாலும் ஒருவன் ஈடேற இயலாது. அந்தக் கலைகளுக்கு எல்லாம் உயிர் போன்றது "**அர்த்த பஞ்சக ஞானம்**". இந்த ஞானம் பெற்றவனே பிறவிப் பெருங்கடலை நீந்துவான். நீந்தத் தெரியாமல் பல கலைகள் கற்றறிந்தும் அந்த கற்றறிவித்தவனுக்குக் கலைகளால் ஏதும் பயன் இல்லாமல் போனதன்றோ?, அதைப்போலவே இன்றியமையாது

அறிய வேண்டிய 'அர்த்த பஞ்சக ஞானம்' இல்லாமல் எவ்வளவு கற்றாலும் அக்கரையைச் சேர ஒருவராலும் இயலாது என்பது உறுதி. இதுவே வைணசமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும்.[1]

இந்தச் சிறிய கற்பனைக் கதையை என்றும் சிந்தித்துக் கொண்டே இருந்தால் உண்மை நிலை ஒருவாறு புரியும்.

* * *

சம்சாரிகள் பகவானுக்கு அடிமைப்பட்டு இருத்தலையே (சேஷப்பட்டு இருத்தலையே) இலட்சணமாக உடைவர்கள். இவர்களுக்குப் பகவான் **'நிருபாதிக சேஷியாக'**[2] உள்ளவன். இந்த இரண்டு நிலைகளையும் சம்சாரிகள் **மறந்தார்கள்**. இங்ஙனம் அவர்கள் மறந்ததனால் பகவானுக்குத் தாங்கள் புரிய வேண்டிய கைங்கரியமாக (அடிமை செய்தல் ஆகிற) சிறந்த பலத்தையும் (புருஷார்த்ததையும்) **இழந்தார்கள்**; இந்த முறையில் "ஈசுவானுடைய தொண்டிற்கெனவே தோன்றிய நாம் எம்பெருமான் கைங்கரியத்தை இழந்துவிட்டோமே!" என்னும் கிலேசம் சிறிதும் இன்றியே சம்சாரம் என்னும் பெருங்கடலிலே விழுந்து **ஆத்யாத்மிகம்**[3], **ஆதிபௌதிகம்**[4], **ஆதிதைவிகம்**[5]

1. இந்தச் சிறு வரலாற்றை எனது அரிய, நண்பர் அரங்க சீநிவாசன் எழுதிய '**அறிய வேண்டிய ஐம்பொருள்**' என்ற நூலில் கண்டது. பக்கம் 11 முதல் பக்கம் 13.
2. **நிருபாதிக சேஷி** — ஒரு காரணமும் இல்லாமல் ஆட்கொள்பவன். அஃதாவது, உயிர்களுக்கு இயற்கை வழியினாலேயே தலைமை பெற்றவன்
3. **ஆத்யாத்மிகம்** : நம் உடலையும் மனத்தையும் பற்றிவரும் துன்பங்கள். இது **சரீர ஆத்யாத்மிகம், மன ஆத்யாத்மிகம்** என இருவகைப்படும். முன்னது உலகைப்பற்றிக் கொண்டுவரும்.

என்னும் மூவகைத் துன்பங்களால் உழன்று கொண்டு இருந்தார்கள்.

அறிவுடைய சேதநர் இங்ஙனம் வினைகளால் சுழன்று கொண்டு தம் காலத்தைப் பயனற்ற வழியில் கழித்தல் பரமகருணா நிதியாகிய பகவானுக்குப் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. ஆதலின் அநாதியாய் எல்லாப் பொருள்களோடும் இரட்சகன் — இரட்சியன் என்னும் சம்பந்தம் உடைய பகவான், இச்சேதநர்கள் தங்கள் நிலையையும், தன்னுடைய நிலையையும் அறிந்து, தானாகிற (பகவானாகிற) மரக்கலத்தைக் கொண்டு தங்கள் பிறவியாகிய பெருங்கடலைக் கடந்து வீடாகிய அக்கரையை அடைதலுக்கேற்ற அறிவைத் தருவதற்காகத் தானே சீடனுமாகவும் ஆசாரியனுமாகவும் நின்று அநாதியானதும் அர்த்த பஞ்சகத்தைச் சுருக்கமாய்த் தெரிவிப்பதுமான **திருமந்திரத்தை** வெளியிட்டு அருளினான்.

இந்தச் சம்சாரிகள் யாவர்? அநாதிகாலமாய் ஏற்பட்டு இருக்கும் உடல் தொடர்பினால் பொருளில் வேறுபட்டு இருப்பினும் முன்பிருந்த பெயரோடும், **உருவத்தோடும்** வருகின்ற **அவித்தியை**[6] **கருமம்**[7], **வாசனை**[8],

---

தலைவலி, காய்ச்சல், குட்டம், இருமல் முதலிய பிணிகள்; பின்னது காமம், குரோதம், பொறாமை முதலிய குணங்கள்.

4. **ஆதிபௌதிகம்** — பிசாசம், தீய பிராணிகள், மனிதர், இராக்கதர் முதலியவர்களால் நேரிடும் துன்பங்கள்.

5. **ஆதிதைவிகம்** — காற்று, மழை, வெயில், இடி, மின்னல் முதலியவற்றால் தெய்வ சங்கற்பமாய் உண்டாகும் துன்பங்கள்.

6. **அவித்திலை** — அஞ்ஞானம். உடலையே ஆன்மா என்று எண்ணும் நினைவும், தான் ஈசுவரனுக்குச் சேஷப்பட்டவன் அல்லன், தனக்காகவே இருப்பவன் என்னும் அபிமானமும் ஆகும்.

ருசி[9] இவற்றிற்கு வசப்பட்டு பிறப்பு, இறப்பு முதலிய துன்பங்களில் உழழ்கின்றவர்கள்.

**அர்த்த பஞ்சகம்** : சம்சாரியான சேதநன் தத்துவ ஞானம்பிறந்து உய்யும்போது தோன்றுவது அர்த்தபஞ்சக ஞானம். இஃது (1) ஈசுவரனது இயல்பு, (2) ஆன்மாவின் இயல்பு, (3) ஆன்மா அடையும் பயன், (4) அப்பயனை அடைதற்குரிய வழிகள் (உபாயம்) (5) அப்பயனை அடைவதற்குத் தடையாய் உள்ளவைகள் ஆகும். இவற்றில் ஒவ்வொரு பொருளும் **ஐந்து வகைப்பட்டிருக்கும்.**

1. **ஈசுவரனின் இயல்பு** என்பது ரத்துவம், வியூகம், விபவம் (அவதாரங்கள்), அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் என்று ஐந்து.

2. **ஆன்மாவின் இயல்பு** என்பது நித்தியர், முக்தர், பத்தர் (தளைப்பட்டிருப்பவர்), கேவலர், முமுட்சுகள் என்று **ஐந்து.**

3. **ஆன்மா அடையும் பயன்** என்பது புருஷார்த்தம்; புருஷனால் (ஆன்மாவால்) அடையப்படுவது. அதுதான் **அறம்**(தர்மம்), **பொருள்** (அர்த்தம்), **இன்பம்** (காமம்) **ஆன்மாநுபவம், பகவதநுபவம்** என்று **ஐந்து.**

---

7. **கருமம்** : மேல் குறித்த அபிமானத்தினால் விளையும் புண்ணிய பாவங்கள்.

8. **வாசனை** : இஃது அவித்தியை வாசனை, கரும வாசனை என இருவகைப்படும் **அவித்திகை வாசனை** - அரவம் முதலியவற்றைக் காணுங்கால் அஞ்சுதல், முதலியவற்றுக்குக் காரணமான அஞ்ஞான வாசனை; **கருமவாசனை** துரும்பு முதலியவற்றைக் கிள்ளுவதற்குக் காரணமாய் உள்ள கருமவாசனை.

9. **ருசி** : பாவச் செயல்களையோ, புண்ணியச் செயல்களையோ அறிந்தே செய்வதற்குக் காரணமாய் உள்ள சுவை.

**4. ஆன்மா அப்பயனை அடைவதற்குரிய வழிகள்** என்பன: **கர்மம், ஞானம், பக்தி, பிரபத்தி, ஆசார்ய, அபிமானம்** என்று **ஐந்து.**

**5. அப்பயனை அடைவதற்குரிய தடையாய்** (விரோதி களாய்) **உள்ளவைகள்** என்பன: அவை **சொரூபவிரோதி பரத்துவ விரோதி, புருஷார்த்த விரோதி, உபாய விரோதி, பிராப்தி விரோதி** என்ற **ஐந்து.**

பராசரபட்டர் என்ற ஆசாரியப் பெருமகனார்,

**மிக்க இறைநிலையும்**
**மெய்யாம் உயிர்நிலையும்**
**தக்க நெறியும்**
**தடையாகித் — தொக்கியலும்**
**ஊழ்வினையும் வாழ்வினையும்**
**ஓதும் குருகையர்கோன்**
**யாழின் இசை வேதத்து**
**இயல்.**

—திருவாய்மொழி தனியவன்

என்று விளக்குபவர். இதில் மிக்க இறைநிலை என்பது ஈசுவரனின் இயல்பு, (2) மெய்யாம் உயர் நிலை என்பது, ஆன்மசொரூபம், (3) தக்கநெறி என்பது உபாய சொரூபம், (4) தடையாகின்ற தொக்கியலும் ஊழ் வினையும் என்பது விரோதி சொரூபம்,(5) வாழ்வினையும் என்பது வீடுபேற்றின் தன்மை. ஆக, இத்தனியன் அர்த்த பஞ்சகத்தைக் கூறுவதாகின்றது.

இதனைச் சற்று விளக்கிக் கூறுவோம். ஸ்ரீமன் நாராயணனே அறப் பெரிய முதல்வன்; ஆன்மாவிற்குச் சொரூபம் அடியேன் என்பதே; சரணா கதி இறைவனைப் பெறுவதற்கு உரிய வழி: 'பொய்ந்நின்ற ஞானமும்

பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் (திரு.விருத். 1) ஆகிய இவையே விரோதிகள்; ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதுவே பரம புருஷார்த்தம் என்னும் இவ்வைந்து பொருள்களுமே திருவாய்மொழியில் சொல்லப் பெறுகின்றன.

1. நம்முடைய ஆசாரியப் பெருமக்கள் இறைவனின் இயல்பு திருவாய்மொழியிலுள்ள 'உயர்வற' (1.1) 'திண்ணன் வீடு' (2.2) 'அணைவது' (2.8) 'ஒன்றும் தேவும்' (4.10) ஆகிய நான்கு திருப்பதிகங்களிலும் நுவல்வதாகச் சுட்டிப் போயினர்.

2. ஆன்மாவின் இயல்பு திருவாய்மொழியிலுள்ள 'பயிலும் சுடர் ஒளி' (7.3), 'ஏறாளும் இறையோனும்' (4.8), 'கண்கள் சிவந்து' (8.8), 'கருமாணிக்கம்' (8.9) என்ற நான்கு திருப்பதிகங்களிலும் சொல்லப் பெற்றுள்ள தாகக் குறித்துப் போயினர்.

3. ஆன்மா அடையும் பலன் திருவாய்மொழியி லுள்ள 'எம்மாவீடு' (2.9), 'ஒழிவில் காலம்எல்லாம்' (3.8) 'நெடுமாற்கு அடிமை' (8.10), 'வேய் மரு' (10-3) என்ற நான்கு திருப்பதிகங்களிலும் சொல்லப்பெற்றுள்ளதாக எடுத்துக் காட்டியுள்ளனர்.

4. பயனை அடையதற்குத் தடையாக உள்ளவைகள் திருவாய்மொழியிலுள்ள 'விடுமின் முற்றவும்' (1.2) 'சொன்னால் விரோதம் இது' (3.9), 'ஒரு நாயகமாய்' (4.1), 'கொண்ட பெண்டிர் (9.1) என்ற நான்கு திருப்பதி கங்களிலும் நுவலப் பெற்றுள்ளனவாக மொழிந்து சென்றனர்.

5. பயனை அடையும் வழிகள் திருவாய்மொழியி லுள்ள 'நோற்ற நோன்பும்' (5.7) 'ஆரா அமுதே' (5.8)

'மானேய் நோக்கு' (5.9), 'பிறந்தவாறும்' (5.10) என்ற நான்கு திருப்பதிகங்களிலும் கூறப்பெற்றுள்ளனவாகக் குறிப்பிட்டுள்ளனர். திருப்பாவையிலும் அர்த்த பஞ்சகம் இருப்பதாக நம்பூருவர்கள் குறிப்பிட்டுள்ளனர். அதனையும் ஆங்காங்கு உரிய இடங்களில் எடுத்துக் காட்டுவேன்.

இந்த ஐந்து பொருள்களும் அடுத்து வரும் இயல்களில் தெளிவாக விளக்கப் பெறும்.

# 2. ஈசுவரனின் இயல்பு

**ஈசுவரன்** எல்லாக் குற்றங்கட்கும் எதிர்த்தட்டாய் இருப்பவன். அஃதாவது இருளுக்கு ஒளி போலவும், பாம்புக்குக் கருடனைப் போலவும் திகழ்பவன். மூன்று வித அசித்தினுடைய[1] பரிணாம ரூபமான வேறுபாட்டின் குறைகள் (விகார தோஷங்கள்) தட்டாதவன். பக்தரு டைய அஞ்ஞான துக்கங்களுக்கும், முக்தருடைய சம்சார சம்பந்தத்திலிருந்து விடப்பெற்ற ஆகாரத்திற்கும், நித்தியருடைய அளவுபட்ட சொரூபத்துவ, பார தந்தியங்களாகின்ற தோஷங்களுக்கும் மாறாக இருப் பவன். அல்லது தன்னை அடைந்தாருடைய தோஷங் களை நசிப்பிப்பவன்.

இடத்தாலும் காலத்தாலும் பொருளாலும் அளவு படுத்தப் பெறாதவன். 'அந்தமில் ஆதி அம் பகவன்' (திருவாய் 3:8). எங்கும் நிறைந்திருப்பவன். அஃதாவது இன்ன காலத்தில் உள்ளான், இன்ன காலத்தில் இல்லான் என்கிற கால அளவு இல்லாத நித்தியன்; இன்ன இடத்தில் உள்ளான் இன்ன இடத்தில் இல்லான் என்கின்ற இடஅளவு இல்லாமல் எல்லா சேதந அசேதநங்கட்கும் வியாபகனாய் இருப்பவன்; எல்லாவற்றிற்கும் உள்ளிருப் பவனாய் தனக்குள் ஒன்று இருப்பதொன்றின்றி இருப்பத னால் இன்ன பொருளைப் போல் இருப்பான் என்று கூற முடியாமல் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாக இருப் பவன். 'உடல்மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்'

---

1. சுத்த சத்துவம், மிச்ர தத்துவம், சத்துவசூனியம் என்ற மூன்று.

(திருவாய். 1.1:7), சீவான்மா உடலினுள்ளிருந்து அதனை நிர்வகித்து வந்தாலும், அந்த உடலுக்குள்ள இளமை முதுமை முதலிய வேறுபாடுகள் அந்தச் சீவான்மாவைத் தொடமாட்டா. அதுபோலவே, எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாகவுள்ள ஈசுவரனுக்கு அந்தச் சேதந அசேதநங்கட்குள்ள குற்றங்கள் வாரா.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு வகைப் பொருள்களையும் உயிர்கட்குத் தந்து அவற்றின் புகலிடமாக இருப்பவன். தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன்.

**தனிமாப் புகழே எஞ்ஞான்றும்**
**நிற்கும் படியாய்த் தான்தோன்றி**
**முனிமாப் பிரம்ம முதல்வித்தாய்**
**உலகம் மூன்றும் முளைப்பித்த**
**தனிமாத் தெய்வம்**

— திருவாய் 8·10:7

என்று பேசுவர் நம்மாழ்வார்.

எம்பெருமானுடைய குணங்களுக்கு அளவில்லை. ஒரு பொருளுக்கு உளதாகக் கூறப்பெறும் குணமானது தன்னைப் பெற்றிருக்கும் பொருளுக்கு மற்றொரு பொருளைக் காட்டிலும் ஒரு வேற்றுமையைக் காட்டுவதால் அக்குணம் **விசேஷணம்** எனப்படும். இத்தகைய விசேஷணம் **சொரூப நிரூபிக விசேஷணம்** என்றும், **நிரூபித சொரூப விசேஷணம்** என்றும் இரு வகைப் படும். ஒரு பொருளின் சொரூபத்தை எந்தக் குணத்தை யுடையதாகக் கூறிய விளக்கினாலன்றி அந்தப் பொருளின் சொரூபத்தை அறிய முடியாதோ அந்தக் குணம் 'சொரூப நிரூபிக விசேஷணம்' எனப்படும். ஒரு பொருளின் சொரூபத்தை விளக்கியபின் அதன் பெருமை புலப்படு வதற்கு எந்தக் குணங்கள் வெளியிடப்பெறுகின்றனவோ

அவை 'நிரூபித சொரூப விசேஷணம் எனப்படும். (எ-டு) மலருக்கு மணம்சொரூப நிரூபக விசேஷணம். அதிலுள்ள நிறம் முதலியன நிரூபித சொரூப விசேஷணம்.

எம்பெருமானுடைய சொரூபத்தை சத்தியத்துவம், ஞானத்துவம், அநந்தத்துவம், ஆநந்தத்துவம், அமலத்துவம் என்ற ஐந்து குணங்களைக் கொண்டே விளக்க வேண்டும். ஆதலின் இவ்வைந்தும் சொரூப நிரூபக விசேஷணமாகும்.

1. **சத்தியத்துவம்:** எப்பொழுதும் மாறுபடாத தன்மை.

2 **ஞானத்துவம்:** எப்பொழுதும் குறைவுபடாத ஞான சொரூபனாம் தன்மை.

3. **அநந்தத்துவம்:** 'இங்குத்தான் இருக்கின்றான்' என்று தேசத்தாலும், 'இப்பொழுதுதான் இருக்கின்றான்' என்று காலத்தாலும் 'இந்தப் பொருளின் சொரூபமாகத்தான் இருக்கின்றான்' என்று பொருளினாலும் அளவிடமுடியாதபடி எவ்விடத்திலும் எக்காலத்திலும் எந்தப் பொருளின் சொரூபமாகவும் நிற்கும் தன்மை.

4. **ஆநந்தத்துவம் :** ஆநந்த சொரூபனாய் நிற்கை.

5. **அமலத்துவம் :** குற்றங்கள் இல்லாத தன்மை.

இந்த ஐந்து குணங்களால் எம்பெருமானது சொருபத்தை ஒருவாறு அறிந்தபின் சௌலப்பியம், சௌசீல்யம், வாத்சல்யம், காருண்யம் முதலிய எண்ணற்ற திருக்கல்யாண குணங்கள் அவன் பெருமையைக் காட்டுகின்றன. இவை நிரூபித சொரூப விசேஷணமாகும். இத்தகைய சொரூபம் திருக்கல்யாண குணம் முதலியவற்றைக் கொண்ட எம்பெருமான் பிரகிருதி மண்டலமாகிய லீலா விபூதியையும், வைகுண்டமாகிய நித்திய

விபூதியையும் தேவிமார் மூவருடன் இருந்து கொண்டு அரசாள்கின்றான் என்பர்.

**திருக்குணங்களின் ஊற்றுவாய் :** மேற்சுட்டப்பெற்ற எம்பெருமானின் திருக்குணங்கட்கு ஊற்றுவாயாக இருப்பவை **ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜசு** என்பனவாகும்.

1. **ஞானம் :** எல்லாவற்றையும் எல்லாக் காலத்தும் அறியப் பயன்படுபவை.
2. **சக்தி :** அகடிதகடினா சாமர்த்தியம்; செயற்கரிய செயல்களையெல்லாம் செய்விப்பது
3. **பலம் :** எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டிருக்கும் ஆற்றல்.
4. **ஐசுவரியம் :** உள்ளிருந்து நியமிப்பது; எல்லாவற்றையும் ஏவும் ஆண்மை.
5. **வீரியம் :** நிலைமையில் வேறுபாடுகள் தட்டாமல் ஒரே பாங்காக இருப்பது.
6. **தேஜசு :** பிறர் நெருங்க இயலாத தன்மை.

இந்த ஆறு ஊற்றுவாய்களாலும் அவன் (எம்பெருமான்) அலங்கரிக்கப் பெற்றிருப்பவன். இவை அவனிடம் ஆதல், அழித்தல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இவை தவிர சௌரியாதி பராக்கிரமங்கள் முதலியனவுமான எண்ணற்ற கல்யாண குணங்களையும் உடையவன். இவை ஒவ்வொன்றும் முடிவற்று எல்லை காண வொண்ணாதவை; தாழ்ந்த பண்புகள் இல்லாதவை. இவற்றுள் வாத்சல்யம் முதலியவை தன்னை அடைந்தவர்கட்குப் பயன்படுபவை. சௌரியாதி பராக்கிரமங்கள் தன்னை அடைந்தவர்களின்

விரோதிகளின் பொருட்டுப் பயன்படுபவை. மற்றும் ஞானம் முதலியவை எல்லோருக்கும் பயன்படுபவை.

**திவ்விய மங்கள விக்கிரகம் :** இறைவனுக்கு உருவம் உண்டு. அந்த உருவம் ஈடும் எடுப்புமற்ற பேரொளியினையுடையது; பேரழகு வாய்ந்து; கண்டாரை ஈர்ப்பது யோகியரின் தியானத்திற்கு ஏற்றது. இந்தத் திருமேனியின் வைலட்சண்யம் சொற்களால் விளக்க வொண்ணாதது. இதற்கு உற்பத்தியாதல், நசித்தல், வளர்தல், குறைதல் முதலிய விகாரங்கள் இல்லை. இஃது இராஜச தாமச குண சம்பந்தம் இல்லாத சுத்த சத்துவ குணத்திற்கு இடமாயுள்ள அப்ராக்ருத திரவியமே வடிவாய்க் கொண்டது. ஞானமயமான, அதாவது ஒளி வடிவமான, சொரூபத்தை வெளியில் தோன்றாதபடி மறைக்காமல் திவ்வியாத்தும சொரூபத்திற்கு விளக்கமாய் இருப்பது. மின்மினியைக் காட்டிலும் சூரியனது ஒளி மிக்கிருத்தல் போல, நித்திய முக்தர்களின் திருமேனியின் ஒளியைக் காட்டிலும் எல்லையற்ற பேரொளி வடிவாய் இருப்பது. சௌகுமார்யம், சௌந்தர்யம், லாவண்யம், சௌகந்தியம், யௌவனம் முதலான கல்யாண குணக் கூட்டத்திற்கு கொள்கலமாய் இருப்பது. எப்போதும் பரமயோகியரின் தியானத்திற்கு உரியதாய் இருப்பது; அவர்களால் தியானிக்கப்படுவது. ஞானி, அஞ்ஞானி என்ற வேறுபாடின்றி எல்லாரையும் தன் அழகாலே பிச்சேற்ற வல்லது. தன் அழகைக் கண்டவர்கட்கு மற்றைய நுகர்ச்சியில் ஆசையின்மையை விளைவிக்கக் கடவது[2]. நித்தியராலும் முக்தராலும் அநுபவிக்கப்படுவது. திவ்விய அவயவங்களும் திருமேனியுமான சேர்த்தியாலே தாமரை பூத்துப் பரிமளம்

2. மேல்கோட்டையில் (கர்நாடக மாநிலம்) இருக்கும் செல்வப்பிள்ளையை நினைப்பது. இதன் அழகைக் கண்டுதான் தில்லித் துருக்க அரசரின் மகள் இதனைக் கவர்ந்து சென்றாள். இராமாநுசர் காலத்தில் அது மீட்கப்பட்டது.

நிற்பதொரு பெருநீர் நிலைபோல் இருப்பதால் தன்னைக் கிட்டினவர்கட்கு எல்லாத் தாபங்களையும் போக்கவல்ல தாய் இருப்பது. பலபல அவதாரங்கட்கும் மூலக்கிழங் காய் இருப்பது. செல்வத்தை விரும்புவோர் (ஐசுவர் யார்த்திகள்), ஆன்மா அநுபவத்தை விரும்புவோர் (கேவலர்), கர்மஞான பக்திகளால் பகவானை அடை வோர் (உபாசகர்). பிரபத்தியில் பகவானை அடைவோர் (பிரபந்நர்), நித்தியர், முக்தர் ஆகிய எல்லோருக்கும் காப்பாய் இருப்பது. நித்திய விபூதி, லீலா விபூதியிலுள் ளார்க்கும் அடையத்தக்கதாய் இருப்பது. திவ்வியாயுதங் களாலும் திவ்விய ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றிருப்பது.

**ஐந்து நிலைகள் :** எப்பெருமானின் திருமேனி பரத் துவம் என்றும், வியூகம் என்றும், விபவம் என்றும், அந்தர்யாமித்துவம் என்றும், அர்ச்சாவதாரம் என்றும் **ஐந்து** வகையோடு கூடிவிருக்கும்.

1 **பரத்துவம் :** பரத்துவம் என்பது, காலம் நடை யாடாததும், ஆனந்தம் அளவிறந்து ஒப்பற்றதாயும் உள்ள பரமபதத்தில் (நித்திய விபூதியில்) அயர்வறும் அமரர்கள் என்று வழங்கப்பெறும் அனந்தன், கருடன், விஷ்வக்சேனர் (சேனை முதலியார்) முதலிய நித்தியசூரிகளும், இந்த உலகத் தளைகளினின்றும் விடுபட்ட முத்தரும் அநுபவித் தற்கு உரியனாய் இருக்கும் இருப்பு.

**கண்கள் சிவந்து பெரியவாய்**
**வாயும் சிவந்து கனிந்துள்ளே**
**வெண்பல் இலகு சுடர் இலகு**
**விலகு மகர குண்டலத்தன்**
**கொண்டல் வண்ணன் சுடர்முடியன்**
**நான்கு தோளன் குனிசார்ங்கன்**
**ஒண்சங்கு கதைவாள் ஆழியான்**
**ஒருவன்** (திருவாய் 8-8:7)

என்ற திருவாய்மொழிப் பாசுரப் பகுதியில் இத்திவ்விய மங்கள உருவம் காட்டப் பெற்றுள்ளது. மற்றும் ஓர் திருவாய்மொழியில் (2-5:1 முதல் 7 பாரசுத்தில்) அவ னுடைய உருவம் முழுவதும் வருணிக்கப்பெற்றுள்ளது. இந்த விவரங்கள் யாவும் 'பாஞ்சராத்திரம்' போன்ற வைணவ ஆகமங்களில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளன.

இந்த லீலாவிபூதிக்கு[3] மேலானது நித்திய விபூதி[4] பூ மண்டலத்தை விட மூன்று மடங்கு பெரிது. ஆதலால் அது '**திரிபாத் விபூதி**'[5] என வழங்கப்படும். அது '**விரஜை**' என்னும் அமுத ஆற்றுக்கு அக்கரையிலுள்ளது. உருத்திரன் நான்முகன் ஆகியோருக்கும் எட்டாதது; சனகாதி முனிவர்களுக்கும் நெஞ்சால் நினைப்பதற்கும் நிலமல்லா தது காலம் என்ற தத்துவம் அங்கு நடையாடாது; அது சுத்தசத்துவமயமானது.

பலகோடி சூரியர் ஒரே காலத்தில் உதித்தாற் போன்ற பேரொளியுடையது. அங்கு இந்த உலகில் உள்ள பஞ்ச பூதத் தொடர்பில்லாத மலர்கள் நிறைத்த சோலைகளும், கற்பகப் பொழில்களும் சூழ்ந்திருக்கும் தன்மையது. அந்த மலர்களில் வெள்ளமிடும் திவ்வியமான தேனைத் தெய்வ வண்டுகள் மட்டுமே படிந்துண்ணும்.

அந்தத்திவ்விய தேசம் பற்பல மதில்களால் சூழப்பட்டு விளங்கும். அங்குத் திவ்வியமான திருமாமணி மண்டபம் ஒன்றுள்ளது. இரு விபூதியிலுள்ள அனைவரும் ஒருங்கு

---

3. லீலாவிபூதி—இந்த உலகம்; அதாவது இறைவன் விளையாடுமிடம்.

4. நித்தியவிபூதி-பரமபதம், விபூதி-செல்வம்; இருப் பிடம்.

5. திரிபாதம்—மூன்று கால் பங்கு. விபூதி—இறைவ னுக்கு உரிமையாக உள்ள இடம்.

திரண்டாலும் அந்த மண்டபத்தின் ஒரு மூலைக்கே போதாது என்னும்படி விரிவானது அது; அந்த திருமா மணி மண்டபத்திலே அற்புதமான கோப்புடைய சீரிய சிங்காசனம் ஒன்றுண்டு. அதன்மேல் பன்னிரண்டு இதழ் களையுடைய, நானாசக்தி மயமான திவ்யபொற் றாமரை ஒன்று அமைக்கப்பெற்றிருக்கும். அதன் பொகுட்டிலே (நடு இடத்திலே) விசித்திரமான அற்புத கட்டில் ஒன்றுண்டு. அந்த கட்டிலின்மேல் பல்லாயிரம் பனிமதிகளை உருக்கி வார்த்தாற் போன்ற குளிந்த புகரை யுடைய திருமேனியினான அனந்தன் மெல்லணையாகச் செயற்பட்டு வருபவன்.

முடிவில்லாத அனந்த கல்யாண குணங்களைப் பெற்றுள்ளமையால் அவனை அனந்தன் என்று வழங்குவர். இறைவனுக்குத் தொண்டு புரிவதனாலும் - சேஷனாகி இருப்பதாலும்—**சேஷன்** என்ற பெயரையுடையவன். எம் பெருமான் உண்ட மிச்சிலை (சேஷப்பட்டப் பொருளை) உண்ணுதலால் சேஷன் என்ற திருநாமத்தைப் பெற்றுள்ள தாகவும் கொள்வர். இவன் எல்லாக் காலங்களிலும் எல்லா விதமான அடிமைகளையும் செய்வனாக இருப்பதைப் பொய்கையாழ்வார்;

> **சென்றால் குடையாம்; இருந்தால் சிங்காசனம்ஆம்;**
> **நின்றால் மரவடிஆம்; நீள்கடலுள் என்றும்**
> **புணைஆம்; மணிவிளக்குஆம்; பூம்பட்டுஆம்; புல்கும்**
> **அணைஆம் - திருமாற்கு அரவு [6]**

என்ற பாசுரத்தால் விளக்குவர். எம்பெருமான் உலாவி யருளும்போது மழை வெயில் படாதபடி குடையாகி வடிவெடுப்பான்; அவன் எழுந்தருளியிருக்கும் காலத்தில் திவ்விய சிம்மாசன வடிவமாகயிருப்பான், அவன் நின்று

6. முதல் திருவந். — 53

கொண்டிருக்க நேரிடும்போது பாதுகையாகி இருந்து பணியாற்றுவான்; திருப்பாற்கடலில் திருக்கண் வளர் தருளும்போது திருப்பள்ளி மெத்தையாகயிருப்பான்; ஏதேனும் ஒன்றை விளக்குக்கொண்டு காண அவன் விரும்பும்போது அவன் திருவிளக்காகச் செயல்படுவான்; சாத்திக்கொள்ளும்படி விரும்பினபோது அவன் திருப்பரி வட்டமாகச் செயற்படுவான்; சாய்ந்தருளும்போது தழு விக்கொள்ளுவதற்குக் தலையாணையாகவும் இருப்பான். இறையநுவம் பெறுவதற்குப் பல வாய்களையும், பல தலை களையுமுடையவன். குளிர்ச்சி மென்மை, நறுமணம் முதலியவற்றுக்குக் கொள்கலம் ஆனவன்.

அந்த ஆதிசேடனாகிய அரவணையில், வெள்ளிமலை யின் உச்சியில் பலகோடி சூரியர்கள் உதித்தாற்போல் விளங்குகின்ற ஆயிரம் பணா மண்டலமாகிய சோதி மண்டலத்தின் அடியிலேயே இறைவன் இருப்பான். வலப் பக்கம் அருள் தேவியாரான பெரிய பிராட்டியாரும், இடப்பக்கம் புறை தேவியாரான பூமிபிராட்டியாரும், அவர்களுக்குடையே இன்ப தேவியரான நீளா தேவியாரும் இருப்பர். அவர்களுடனே மூன்று மின்னல் கொடி களோடு கூடிய கார்முகில் தாமரை காடு பூத்து ஒரு வெள்ளிமலைமேல் படிந்ததுபோல் திவ்விய படைக் கலன்கள், திவ்விய அணிகலன்கள் பூண்டு, அழகும், இளமையும் ''மனம் கமழ் தெய்வத்து இளம் நலம் விளங்க'' அடியார்களின் அனைத்துத் தாபங்களும் ஆறும் படியாகச் சுழிப்பட்டோடும் சுடர் சோதி வெள்ளத்துத் தோன்றும் ஆதியம்சோதி கரியகோல திருவுருவத் தோடு நித்தியர், முத்தர், அநுபவிக்கும்படியாக எழுந் தருளியிருக்கும் பரவாசுதேவன் நிலையே பரத்துவநிலை யாகும்.

2. **வியூகம் :** இந்த உலகில் (லீலா விபூதியில்) அதன் படைப்பு, அளிப்பு, அழிப்பு இவற்றை நடைபெறச் செய்வ

தற்காகவும், சம்சாரிகட்கு வேண்டியவற்றை ஈந்து வேண்டாதவற்றைப் போக்கி அவர்களைக் காத்தற் பொருட்டும், மோட்சத்தை விரும்பி, தன்னை இடை யறாது நினைப்பவர்கட்கு (உபாசிப்பவர்கட்கு) அவர்தம் தளைகளைப் போக்கித் தன்னை வந்து அடைவதற்குக் காரணமான பேரருளைச் சுரப்பதற்காகவும், **வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்தியும்னன், அநிருத்தன்** என்ற பெயர் களுடன் இருக்கும் நிலையாகும். இந்நிலையைத் திருமழிசையாழ்வார்,

> **'ஏக மூர்த்தி மூன்று மூர்த்தி**
> **நாலுமூர்த்தி நன்மைசேர்**
> **போகமூர்த்தி புண்ணியத்தின்**
> **மூர்த்திஎண்ணில் மூர்த்தியாய்**
> **நாகமூர்த்தி சயனமாய்**
> **தலங்கடற் கிடந்துமேல்**
> **ஆக மூர்த்தி யாயவண்ணம்**
> **என்கொலாதி தேவனே**
>
> — திருச்சந்த-17

என்ற பாசுரத்தில் குறிப்பிடுவர். இதில் ஏகமூர்த்தி என்பது, பரவாசுதேவனை. மூன்று மூர்த்தி என்பது, சங்கர்ஷணன், பிரத்தியுமனன், அநிருத்தன் ஆகிய அவ தாரங்களைக் குறிப்பிடுவது. நாலு மூர்த்தி என்பது பிரதானம், புருடன் (சீவான்மா) அவ்யக்தம் (நுண்நிலை) காலம் என்ற தத்துவங்களாகும். போகமூர்த்தி என்பது, போகத்திற்குத் தகுதியாகயுள்ள (அர்ஹமான) வடிவம். புண்ணியத்தின்மூர்த்தி என்பது, புண்ணியமே வடிவு கொண்ட ஓர் உருவம். நாகமூர்த்தி என்பது அனந்தமீது 'உறங்கு வான்போல் யோகு செய்யும் பெருமான்' (திருவாய் 5-4:11).

இதனைத் திருமங்கையாழ்வாரும்,

**தன்னாலே தன் உருவம்**
**பயந்த தானாய்த்**
**தயங்குஒளிசேர் மூவுலகும்**
**தானாய் வானாய்**
**தன்னாலே தன்னுருவில்**
**மூர்த்தி மூன்றாய்த்**
**தான்ஆயன் ஆயினான்**

— பெரி, திரு. 6-6:9

என்று குறிப்பிடுவார். நம்மாழ்வாரும்,

**ஏக மூர்த்தி இருமூர்த்தி**
**மூன்று மூர்த்தி பலமூர்த்தி**
**ஆகி ஐந்து பூதமாய்**
**இரண்டு சுடராய் அருவாகி**
**நாகம் ஏறி நடுக்கடலுள்**
**துயின்ற நாரா யணனே!**

— திருவாய் 4. 3:3

என்றும் போற்றி மகிழ்வார்.

இவற்றுள், வாசுதேவ ரூபமான பரத்துவத்தில் ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் என்ற ஆறு குணங்களும் நிறைந்திருக்கும். ஏனைய மூன்றில் அவரவர் மேற்கொண்ட செயலுக்குத் தக்கவாறு ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு குணங்கள் விளக்கமாக இருக்கும்.

**சங்கர்ஷணரானவர்** ஞானம், பலம் என்ற இரண்டு குணங்களோடு கூடியிருப்பார். இவர் பிரகிருதிக்குள் (மூலப் பகுதிக்குள்) உருமாய்ந்து கிடக்கும் உயிர்த் தத்துவத்திற்குத் தலைவனாக நின்று (அதிட்டித்து) அவனைப் பிரகிருதியினின்றும் வேறாக்கி பிரத்தியும்ன நிலையையும் அடைந்து வேதம் முதலிய சாத்திரங்களை வெளியிடுவதையும் உலக அழிப்பையும் செய்பவராக

இருப்பார். மதுகைடவர் என்ற அசுரர்கள் நான் முகனிடமிருந்து வேதங்களைப் பறித்துக்கொண்டு கடலில் மூழ்கி மறைந்துவிட, ஞான ஒளியைத் தரும் பெருவிளக் கான நான்மறைகள் ஒழிந்தமை காரணமாக உலகெங்கும் பேரிருள் மூடி நலியா நின்றது. அவ்வமயம் சங்கர்ஷணன் கடலில் புகுந்து அவ்வசுரர்களைத் தேடிக் கண்டறிந்து கொன்று வேதங்களை மீட்டுக் கொணர்ந்து அன்ன உருவ மாய் நான்முகனுக்கு உபதேசித்தருளினன். இவ்வர லாற்றைத் திருமங்கை மன்னன்,

**முன்இவ்ஏழ் உலகுணர்வு இன்றி இருள்மிக**
**உம்பர்கள் தொழுதேத்த**
**அன்னம் ஆகிஅன்று அருமறை பயந்தவனே**

—பெரி. திரு 5.3:8

என்று குறிப்பிடுவர். உலக அழிப்பினைப் பேயாழ்வார்,

**பாலகனாய் ஆலிலைமேல்**
**பைய உலகெல்லாம்**
**மேல்ஒருநாள் உண்டவனே**

—மூன். திருவந். 33

என்று பேசுவர். நம்மாழ்வாரும்,

**அடியார்தம் வையமுண்டு ஆலிலை**
**அன்ன வசஞ்செய்யும்**
**படியாதும் இல்குழ விப்படி**
**எந்தைபி ரான்தனக்கு**

— திருவாய் 4. 3:10

என்று குறிப்பிட்டு மகிழ்வர்.

**பிரத்தியும்னரானவர்** ஐசுவரியம், வீரியம் என்ற இரண்டு குணங்கள் பொருந்தி இருப்பவர். இவர் ஞானத்திற்கு ஊற்றுவாயான மனம் என்ற தத்துவத்திற்குத் தலை

வனாக நின்று சாத்திர முறைப்படி ஒழுகவேண்டிய தர்மோபதேசத்தையும் சுத்தவர்க்க சிருஷ்டியையும் செய்பவராக இருப்பார்.

**அநிருத்தனரானவர்** சக்தி, தேஜஸ் என்ற இரண்டு குணங்களோடுகூடினவர். இவர் உலகப் பாதுகாப்பிற்கும்; உயிர்கள் ஈடேறுவதற்குத் தகுதியான தத்துவ ஞானங் களைக் கொடுத்தற்கும் காலப் படைப்பிற்ம், மிச்ரவர்க்க சிருஷ்டிக்கும் உரியவராக இருப்பார்.

**வியூக வாசுதேவர்**, படைக்கப் பெற்ற சேதநர்களைக் காத்தற் பொருட்டு,தேவர் முனிவர்கட்கு ஆபத்து நேரிட்ட காலத்துச் சென்று அறிவிக்கலாம்படி அவதாரங்கட் கெல்லாம் நாற்றங்காலான திருப்பாற்கடலில் திருவனந் தாழ்வான்மீது உலகப் பாதுகாப்பில் சிந்தை செலுத்தி உறங்குவான்போல் யோகத்தில் ஆழ்ந்து கிடப்பார். இந்த வியூகாவதாரங்கள்பற்றிய விவரங்களை ஆழ்வார் பாசுரங்களில் காணலாம்; விரிவஞ்சி அவை காட்டப் பெறவில்லை.

**கிளை வியூகங்கள்** : மேற்கூறிய நான்கு வியூகங்களும் ஒவ்வொன்றும் மும்மூன்றாகப் பன்னிரண்டு கிளை வியூகங் களாகப் பிரியும். வியூக வாசுதேவனிடத்து கேசவன், நாராயணன், மாதவன் என்ற கிளைகளும்: சங்கர்ஷண னிடமிருந்து கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன் என்ற கிளைகளும்; பிரத்தியும்நனிடத்து திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன் என்பவைகளும், அநிருத்தனிடத்து இருடிகேசன், பதுமநாபன்: தாமோதரன் என்பவைகளும் தோன்றி அவ்வப் பெயர்களைப்பெறும்.[3] இவை யாவும் பன்னிருதிங்களின் தலைவர்களாக இருக்கும். இவற்றின்

3. திருவாய். 2.7 (பன்னிரு திருநாமப் பாட்டு)

அறிகுறியாக வைணவர்கள் தம் உடலில் துவாதசமாகத் திருமண் காப்பிட்டுக் கொள்வர்.

இந்தப் பன்னிரு திருமண்காப்பும் வைணவர் திருமேனியில் மேற்சொன்ன பன்னிருவரும் அதிட்டித்திருக்கும் இடங்களைக் குறிக்கும். **நெற்றியில்** கேசவன் பொன்மயமாய் நான்கு புயங்களிலும் நான்கு திருவாழிகளைத் தரித்துக் கொண்டு பெரிய பிராட்டியாருடன சேவை தந்து நிற்பன். **வயிற்றில்** நாராயணன் நீலமேக சாமளனாய் நான்கு சங்கங்களைக் கொண்டு அம்ருதோத்பவை பிராட்டியாருடன் சேவை பாலிப்பன். **மார்பில்** மாதவன் இந்திர நீல இரத்தினநிறமுடன் நான்கு கதைகளைக் கொண்டு கமலைப் பிராட்டியாரோடு சேவை தருவன். **கண்டத்தில்** கோவிந்தன் சந்திரகாந்தியோடு நான்கு சார்ங்கங்களைக் கொண்டு சாதுதேவி (சந்திரசோப நீ) பிராட்டியாருடன் காத்தருள்வன். **வலப்புற வயிற்றில்** விஷ்ணு தாமரைப் பூந்தாதின் காந்தியோடு நான்கு ஹலாயுதங்களைப் பிடித்தவனாய் விஷ்ணு பத்தினிப் பிராட்டியாரோடு சேவை சாதிப்பன். **வலப்புயத்தில்** மதுசூதனன் தாமரைப்பூவின் காந்தியோடு நான்கு முசலங்களைக் கொண்டு வைணவப் பிராட்டியாரோடு சேவை தந்தருள்வன். **வலப்புறக் கழுத்தில்** திரிவிக்கிரமன் அக்நிகாந்தியோடு நான்கு கட்கங்களைக் கொண்டு வராரோஹினிப் பிராட்டியாரோடு சேவை தந்தருள்வன். **இடப்புற வயிற்றில்** வாமனன் இளஞாயிற்றின் நிறத்தோடு நான்கு வச்சிராயுதங்களைக் கொண்டு அரிப்பிரியைப் பிராட்டியாரோடு கருணை செய்வன். **இடப்புயத்தில்** சிரீதரன் தாமரையின் காந்தியோடு நான்கு வாள்களைக் கொண்டு சார்ங்கினிப் பிராட்டியாரோடு கிருபை செய்தருள்வன், **இடப்புறக் கழுத்தில்** இருடிகேசன் மின்னற் காந்தியோடு நான்கு உழலைத் தடிகளைக் கொண்டவனாய் தேவதேவிப் பிராட்டியாரோடு தயை செய்தருளிப்பொலிவன். **முதுகடியில்** பதுமநாபன் சூரிய ஒளியுடன் நான்கு பஞ்சாயுதங்களைக் கொண்டு

மகா இலக்குமிப் பிராட்டியாருடன் குளிர நோக்கி வாழ்வன். பீடரியில் தாமோதரன் இந்திர கோபம் போன்ற ஒளியுடன் நான்கு கைகளில் பாசாயுதபாணியாய் சர்வ லோக சுந்தரிப் (சர்வாங்க சுந்தரி) பிராட்டியாரோடு எழுந்தளியிருந்து காத்தருள்வன்.

3. **விபவம் :** விபவ அவதாரங்கள் எண்ணிறந்தவை. அவை முக்கிய அவதாரம் அல்லது சாட்சாத் அவதாரம் என்றும், கௌணாவதாரம் அல்லது ஆவேசாவதாரம் என்றும் இரண்டு வகையாகப் பிரிவுபடும். முக்கிய அவதாரம் தேவ, மனித, விலங்கு (திர்யக்கு) என்று உட்பிரிவுகளாகும். தேவதாவதாரங்களில் விஷ்ணு, உபேந்திரன், திரிவிக்கிரமன் என்பனவும் இன்னும் பலவும் அடங்கும். மனிதாவதாரங்கள் என்பன நாராயண, இராம, கிருட்டிணாவதாரங்களாகும். விலங்கு (திர்யக்கு) அவதாரங்களில் அயக்ரீவம், மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம் முதலியவை அடங்கும். தாவர அவதாரம் நைமிசாரணியத்தில் குட்டை மாமரமாய் (குபஜாம்பரம்) அவதரித்ததாகும். இவை யாவும் பகவானது இச்சையாலே வந்தவை. இவை 'ஆதி அம் சோதி உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்த'[4] வை யாதலின், பிறப்பு இறப்பு அற்றவனான இறைவனது தன்மைகளைக் கொண்டவை. ஆகவே இவை முமுட்சுகளுக்கு உபாசிக்கத் தக்கவை. எனவே இவ்வவதாரம் ஒரு செயல்நிமித்தம் ஆன்மாக்களிடத்து ஆவேசித்ததாகும். அது சொரூப ஆவேசம், சக்தி ஆவேசம் என்று இரு வகைப்படும். முதல் வகையில் பரசுராம, பலராம அவதாரங்களும், இரண்டாவது வகையில் நான்முகன், சிவன், அக்கினி, வியாசன், குபேரன் முதலான ஆன்மாக்களில் சக்தியை அதிட்டிப்பித்து நிற்கின்ற அவதாரங்களும்அடங்கும். இவை முமுட்சுகளுக்கு உபதேசிக்கத் தகாதவை. ஆனால், போகத்தில் இச்சையுடைய புபூட்சுகளுக்கு

4. திருவாய். 3.5:6

உபாசிக்கத் தக்கவை. இன்னும் பல கருத்துகள் அவதார இரகசியங்களாகவே உள்ளன. இவ்வவதாரங்கள் யாவும், சேதநர்கள் உய்யும் பொருட்டு ஈசுவரனின் இச்சை காரண மாக ஏற்பட்டவை. ஆகவே, நம்மாழ்வார் இறைவனைக் குறிப்பிடமிடத்து 'பிறப்புஇல் பல்பிறவிப் பெருமான்'[5] என்றும், திருமங்கையாழ்வார் 'பிறப்பிலி'[6] என்றும் பேசு வர். இவ்வவதாரங்களின் பலன் அடைந்தாரைக் காத்த லும், அவர்களின் விரோதிகளைப் போக்குதல், வைதிக தர்மத்தை நிலை நிறுத்துதலும் ஆகும்.[7]

இந்த அவதாரங்கள் யாவும் ஆழ்வார் பாசுரங்களில் குறிப்பிடப்பெறுகின்றன. இவற்றுள் இராம கிருஷ்ண அவதாரங்கள் அதிகமாகவும், வாமனம், நரசிம்மம், வரா கம் முதலியவை அவற்றுக்கு அடுத்துக் குறைவாகவும் குறிப்பிடப் பெற்றுள்ளன. முன்னவை மக்களிடையே தோன்றி அதிகக் கால அளவு பழகினமையே இதற்குக் காரணமாகக் கொள்ளலாம். இதன் காரணமாக இறை வனின் மங்கள குணங்களை மக்கள் அநுபவிப்பதற்கு வாய்ப்புகள் மிக்கு இருந்தன. ஆகவே, ஆழ்வார்களும் அவற்றில் அதிகமாக ஈடுபட்டுப் பேசுகின்றனர்.

4. **அந்தர்யாமித்துவம் :** சேதநர்களின் உள்ளே புக்கிருந்து எல்லாச் செயல்கட்கும் தான் ஏவுபவனாக இருப்பதோடன்றி, அவர்கட்குத் தியான ருசி[8] பிறந்த போது தியானத்திற்கு உரியவனாதற்காகவும் அவர்களைக் காப்பதற்காகவும் அழகே வடிவெடுத்தாற் போன்ற மங்

5. திருவாய் 2.9:5
6. பெரி. திரு. 3.7:8
7. கீதை. 4:8
8. ருசி — பாவச் செயல்களையோ புண்ணியச் செயல் களையோ அறிந்தே செய்வதற்குக் காரணமாயுள்ள சுவை.

களகரமான திருமேனியுடன் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றவனாய், பெரிய பிராட்டியாரோடு கட்டைவிரல் அளவாக ஒவ்வொருவர் இதய கமலத்துக் குள்ளே எழுந்தருளி யிருக்கும் இருப்பே இந்நிலையாகும். இந்நிலையை ஆழ்வார்,

**யான்ஒட்டி என்னுள்**
**இருத்துவன் என்றிலன்**
**தான்ஒட்டி வந்துஎன்**
**தனிநெஞ்சை வஞ்சித்து**
**ஊன்ஒட்டி நின்றுஎன்**
**உயிரில் கலந்து**

— திருவாய் 1.7:7

என்றும்,

**யாது அவங்களும் சேர்கொடேன் என்று**
**என்னுள் புகுந்திருந்து**
**தீதுஅவம் கெடுக்கும் அமுதம்**

— ஷை 2.7:1

என்றும்,

**வெள்ளைச் சுரிசங்கொடு ஆழிஏந்தி**
**தாமரைக் கண்ணன் என் நெஞ்சினூடே**
**புள்ளைக் கடாகின்ற ஆற்றைக்**
**காணீர்**

— ஷை 7.3:1

என்றும் தம் பாசுரங்களில் குறிப்பிடுவர். இவற்றிற் கெல்லாம் முத்தாய்ப்பு வைத்தாற்போல்,

**கல்லும் கனைகடலும் வைகுந்த வான்நாடும்**
**புல்லென்று ஒழிந்தனகொல் ஏபாவம் - வெவல**
**நெடியான் நிறங்கரியான் உள்புகுந்து நீங்கான்**
**அடியேனது உள்ளத்து அகம்.**

— பெரி.திருவந். 68

என்று பின்னும் பேசுவர்.

5. **அர்ச்சாவதாரம்:** அர்ச்சாவதாரம் என்பது, 'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்' (முதல். திருவந் 44) என்ற பொய்கையாழ்வார் பாசுரப்படி அன்பர்கள் எதைத் தனக்குத் திருமேனியாகக் கொள்ளுகின்றனரோ அதனையே இறைவன் தனக்கு வடிவமாகக் கொண்டுள்ள நிலையாகும். இந்நிலையில் இறைவன் இன்ன இடத்தில் இன்ன காலத்தில் இன்னாரிடத்தில் தோன்றி சந்நிதி பண்ணி நீராட்டம், தளிகை, இருப்பு முதலிய எல்லாச் செயல்களையும் ஏற்றுக் கொண்டு திவ்விய தேசங்களிலும், அன்பர்களின் திருமாளிகைகளிலும் எழுந்தருளியிருப் பான். உலகியலில் மண்டியிருப்போருக்குத் தன் பக்கல் ருசி உண்டாக்குதலும், ருசி பிறந்த பிறகு தன்னைத் துதிப்பவர்களுடைய கண்ணுக்கும் நெஞ்சுக்கும் இனிதாம் படி போக்கியத்திற்கு இடமாயிருத்தலும், தன்னை உபாய மாகப் பற்றும் அளவில் எல்லா உலகினரும் உபாயமாகப் பற்றுதற்குத் தகுதியாயிருத்தலும் பரமபதத்தில் போய் அநுபவிக்க வேண்டாமல்,

> **அண்டர்கோன் அணி அரங்கன்**
> **என்அமுதினைக்**
> **கண்டகண்கள் மற்றொன்றினைக்**
> **காணாவே**

— அமலனாதி-10

என்று திருப்பாணாழ்வார் அநுபவித்தவாறு அநுபவிக்கத் தக்கதாக இருத்தலும் இந்த அர்ச்சாவதாரத்தில்தான் முற்றுப் பெற்றிருக்கும்.

எல்லா ஆழ்வார்களும் இந்த அவதாரத்தில்தான் அதிகமாக ஈடுபட்டுப் பேசுவர். சுருங்கக் கூறினால் நாலாயிரத்தின் பாசுரங்கள் யாவும் இந்த அர்ச்சாவ தாரத்தைப் பற்றியனவே. திரு அரங்கத்தில் அழகிய

மணவாளனின் திருமேனியில் ஈடுபட்ட தொண்டரடிப் பொடிகள்,

**இச்சுவை தவிர யான்போய்**
**இந்திர லோகம் ஆளும்**
**அச்சுவை பெறினும் வேண்டேன்**

— திருமாலை-2

என்று கூறிப்போந்தார்[9]. பக்திசாரர் என வழங்கப்பெறும் திருமழிசையாழ்வார் திருக்குடந்தை ஆராவமுதனின் ஓர் உரையாடலையே நிகழ்த்துகின்றார். எம்பெருமானின் சயனத் திருக்கோலத்தில் ஈடுபட்டு,

**நடந்த கால்கள் நொந்தவோ**
**நடுங்க ஞாலம் ஏனமாய்**
**இடந்த மெய்கு லுங்கவோ?**
**விலங்கு மால்வ ரைச்சுரம்**
**கடந்த கால்ப ரந்தகா**
**விரிக்க ரைக்கு டந்தையுள்**
**கிடந்தவாறு எழுந்து இருந்து**
**பேசு வாழி**

— திருச்சந்த-16

என்று சயனத்திருப்பதற்குக் காரணம் வினவுகின்றார். இவரது பக்திப் பெருக்கில் திளைத்த எம் பெருமானும் இருவருக்கு மறுமொழி தருவான்போல் எழுந்திருக்க முயல அந்த அழகில் ''சிறுமாமனிசரின்'' (திருவாய் 8 . 10 : 3) கண் எச்சில் படும் என்று அஞ்சிய ஆழ்வார்

9. இந்த இடத்தில் தில்லைச் சிற்றம்பலவனின் திருமேனி அழகினைக் காணப்பெற்றால் ''மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' (4. 81 : 4) என்ற அப்பர்பெருமானின் திருவாக்கை நினைவு கூரச் செய்கின்றது.

உடனே "வாழி, கேசவனே!" என்று கூற பெருமாளும் தலையைத் தூக்கியபடியே இருந்து அவருக்குச் சேவை சாதித்தானாம். அந்நிலையிலேயே இன்றும்சேவைசாதித்து வருகின்றான். திருக்குறுங்குடி நம்பியின் பேரழகினைக் கண்டு பாராங்குச நாயகி பரகால நாயகி இவர்களின் நெஞ்சு பறிபோனதை அவ்வவ்வாழ்வாரின் பதிகம் நன்கு விளக்குகின்றது. இந்த அச்சாவதாரத்தை மங்களா சாசனம் செய்வதற்காகவே அவதரித்த திருமங்கையாழ் வார் நூற்றெட்டு திவ்விய தேசங்களில் வடச்பேதரியி லிருந்து தெற்கே திருக்குறுங்குடி வரையிலுள்ள எண்பத்தாறு திவ்விய தேசங்களில் சேவை சாதிக்கும் எம்பெருமான்களின்மீது மங்களாசாசனம் செய்துள்ளார்.

## திருவாய் மொழி

திருவாய்மொழியில் இறைவனது இயல்பு 'உயர்வற' (1.2) 'திண்ணன் வீடு' (2.2) 'அணைவது' (2.8): 'ஒன்றும் தேவும்' (4 10) என்ற நான்கு திருப்பதிகங்களில் நுவலப்பட்டிருப்பதாகவும் முன்னர்ச் சுட்டியுரைத்தோம். அதனை ஈண்டு விளக்குவோம்.

(1) **ஆன்ம உபதேசம்** : (உயர்வற'(1.1) என்ற திருவாய் மொழியில் இறைவனது இயல்புபற்றி தம் மனத்திற்கு உபதேசிக்கின்றார் ஆழ்வார்.

தேவர்கள் முதலியமற்றையோருடைய மேன்மைகள் முழுவதும் இல்லையென்று கூறும்படி மேன்மேல் உயர்ந்து கொண்டே செல்லுகின்ற நற்குணங்களையுடையவன் எவனோ, அவன் என்னிடத்திலுள்ள அறியாமை யாவும் நீங்குமாறு பத்திநிலையை அடைந்த அறிவை நல்கினான்; அந்த அறிவைத் தந்தவன் எவனோ அவன் மறதி என்பது சிறிதுமில்லாத நித்தியசூரிகட்குத் தலைவன்; அந்த நித்திய சூரிகட்குத் தலைவன் எவனோ அவனுடைய எல்லாத்

துன்பங்களையும் நீக்குகின்ற ஒளி பொருந்திய திருவடிகளைத் தொழுது பிறவிப் பெருங்கடலின்று எழுவாய். (1)

மனத்தின் குற்றங்களனெல்லாம் நீங்க, பின்பு மலர்ந்து மேலே எழுகின்ற மனத்தின் யோக ஞானத்தால் அறியப்படுகின்ற ஆன்மாவின் தன்மையினை உடையவன் அல்லன்; இந்திரியங்களால் அறியப்படுகின்ற உலகத்துப் பொருள்களின் தன்மையினையுடையவன் அல்லன்; எதிர்வு நிகழ்வு இறப்பு என்னும் முக்காலங்களிலும் தனக்கு ஒத்தாரை இல்லாதவன்; மிக்காரையும் இல்லாதவன்; ஞான ஆனந்தமயமாக இருப்பவன்; இத்தகைய இறைவன் என்னுடைய சிறந்த உயிராவான். (2)

'அதனை இல்லாதவன்' 'இதனையுடையவன்' என்ற இருதன்மையாலும் நினைக்க முடியாதவன்; காணப்படுகின்ற இந்த உலகமும், ஆகாயத்திலுள்ள தெய்வலோகங்களும் முதலாக எல்லா உலகங்களிலுமுள்ள உயிரில் பொருள்களையெல்லாம் உடையவன்; உயிர்ப் பொருள்களையெல்லாம் உடையவன்; காணப்படுகின்ற எல்லா பொருள்களும் தானாக இருப்பவன். அவ்வாறு இருப்பினும் அப்பொருளின் குணங்களும் குற்றங்களும் தன்னைச் சாராமல் இருப்பவன்; இவ்வகையில் எல்லாப் பொருள்களையும் விட்டு நீங்காதவனாகி எங்கும் பரந்திருக்கின்ற அந்நற்குணங்களையுடைய ஒப்பற்ற இறைவனை நாம் சேர்கின்றோம். (3)

நாம் என்ற பெயர்ப்பொருளும், அவன் இவன் உவன் என்னும் ஆண்பாற் பெயர்ப் பொருள்களும், அவள் இவள் உவள் என்னும் பெண்பாற் பெயர்ப் பொருள்களும் தாம் அவர் இவர் உவர் என்னும் பலர்பாற் பெயர்ப் பொருள்களும் அது இது உது எது என்னும் ஒன்றன்பாற்பெயர்ப் பொருள்களும், அழிகின்ற பொருள்களும், இவை உவை அவை என்னும் பலவின்பாற் பெயர்ப் பெருள்களும், நல்ல பொருள்களும் தீய பொருள்களும் உண்டாகும்

பொருள்களும், உண்டான பொருள்களும் ஆகி நின்ற எல்லாப்பொருள்களும் அவ்விறைவரேயாவர்.[10] (4)

முக்குணங்களின் வசப்பட்ட உலக மக்கள் தாம் தாம் அறிந்த அறிந்த வகைகளாலே, அந்த அந்தத் தேவர்களே இறைவர்ஆவர் என்று நினைந்து, அவர் அவர்களுடைய பாதங்களையே பற்றுக் கோடாக அடைவார்கள்; அவர்களால்அடையப்படுகின்ற அவ்வத் தேவர்களும், இறைவர் என்று கூறப் பெறுவதற்கு யாதொருகுறையும் இல்லாதவர்களாகவே இருக்கின்றார்கள்; காரணம் யாது? எனின்: அத்தேவர்கள் தங்களுடைய ஆகமங்களில் விதித்து வைத்த வழியால் அவர்களை வணங்குகின்ற மக்கள் தாம் தாம் விரும்பிய பலனைப் பெறும் படியாக, அத்தேவர்களுடைய உயிருக்குள் உயிராக நின்று திருமகள் கேள்வனான நாராயணன் திருவருள் புரிகின்றான் ஆதலால். (5)

நிற்றல்—நில்லாமை; இருத்தல்—இராமை; கிடத்தல்—கிடவாமை; திரிதல்—திரியாமை என ஒன்றற்கொன்று மாறுபட்ட தொழில்களையுடையவர் ஆதலால், எப்பொழுதும் ஒரே தன்மைகளையுடையவர் என நினைத்தற்கு அரியவர்; அப்படி நினைப்பதற்கு அரியவர் என்னும் தன்மை எப்பொழுதும் மாறுபடாமல் ஒரே நிலையோடு கூடியிருக்கின்றவர்; வேதங்களால் பரம்பொருள் இவரே என்று உறுதி செய்யப்பட்ட திடத்தையுடையவர்; அவர் என் தலைவர். (6)

உலகங்களையெல்லாம் முடிவுக் காலத்தில் அழியச் செய்த இறைவன், திடமான ஆகாயமும் நெருப்பும் காற்றும் நீரும் நிலமும் ஆகிய இவற்றைக் காரணமாகக்

10. இங்குக் கூறப்பெறாத யாம் நான் யான் என்னும் பெயர்ப் பொருள்களையும், எவன் எவர் எவை என்னும் பெயர்ப் பொருள்களையும் உபலட்சணத்தாற் கொள்க.

கொண்டு படர்ந்த எல்லாப் பொருள்களும் தானே யாகி, அவ்வப் பொருள்கள்தோறும் உடலுக்குள் இருக்கின்ற உயிரைப் போன்று மறைந்து, எங்கும் பரந்தவனாய் ஒளி மிக்க வேதத்துள் தோன்றுகின்றவன் ஆவான்.[11] (7)

பிரமன் முதல் தேவர்களாலும் அறிவரிதான நிலையினையுடைய மூலப்பகுதி தொடக்கமாகவுள்ள எல்லாவற்றுக்கும் சிறந்த காரணமாகி, பின் அவற்றையெல்லாம் அழித்த பராபரன், சிவனாக இருந்து ஒப்பற்ற முப்புரங்களையும் எரித்தழித்துப் பின் உலகங்களையெல்லாம் அழித்தும், பிரமனாக இருந்து தேவர்கட்கு ஞானத்தை உபதேசித்துப் பின் ஒரு காலத்தில் உலகத்தையெல்லாம் படைத்தும், அவ்விருவருடைய உயிர்களுக்குள் உயிராகத் தங்கியிருக்கின்றான். (8)

இறைவன் உளன் என்றால் உள்ளவன் ஆவான்; அப்பொழுது உருவத்தோடு இருக்கும் இப்பொருள்களெல்லாம் அவனுடைய தூல சரீரமாகும். இறைவன் இலன் என்றாலும் உள்ளவனேயாவான்; அப்பொழுது உருவம் இல்லானவாய் இருக்கும் இப்பொருள்கள் எல்லாம் அவனுடைய சூக்கும சரீரமாகும்; ஆதலால், உளன் என்றும் இலனென்றும் கூறப்படும் இவற்றைக் குணமாக உடைமையின், உருவமும் அருவமுமான தூல சூக்குமப் பொருள்களையுடையவனாய் எங்கும் ஒழிவில்லாதவனாகிப் பரந்து இருக்கின்றவனேயாவான். (9)

உலகங்களையெல்லாம் கற்பாந்த காலத்து உண்டு காத்த தலைவன், பரந்திருக்கின்ற குளிர்ந்த மாக் கடலிலுள்ள ஒவ்வொரு நீர் அணுக்கள்தோறும் பரந்திருக்கின்ற அண்டம் இது என்று கூறும்படி பரந்திருக்கின்றான்; அவ்வாறே பூமி ஆகாயம் இவற்றிலும் எங்கும் பரந்து நிறைந்திருக்கின்றான்; மிகவும் சூக்குமமான உடல்கள்

11. இதில் 'சரீர-சரீரி பாவனை' தோற்றுகின்றது.

தோறும் அவ்வுடலில் வசிக்கின்ற உயிர்கள்தோறும் கண்களுக்குத் தெரியாதவாறு மறைந்து பரந்திருக்கின்றான்.

(10)

பலசுருதிப் பாசுரத்திலும் (திருக் கடைக் காப்புச் செய்யுளிலும்) "திடமான ஆகாயமும், நெருப்பும், காற்றும், நீரும், மண்ணும் என்னும் இவற்றின் தன்மைகளான சிறந்த ஒலியும், தெறலும் (திறலும்), வலியும் தண்ணளியும், பொறுத்தலும் ஆகிய இவையாகி நின்ற இறைவன்" என்று குறிப்பிடுகின்றார்.

ஆக, **முதற்பாசுரத்தில்** இறைவன் நற்குணங்களை யுடையவனாக இருத்தல், அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினையுடையவனாயிருத்தல் வேறுபட்ட திருமேனியை யுடைய வனாயிருந்தல் ஆகிய இவற்றை அருளிச் செய்தார். **இரண்டாம் பாசுரத்தில்** மேற்கூறப்பட்டனவற்றிற் கெல்லாம் பற்றுக்கோடாகவுள்ள இறைவன், உயிர்ப் பொருள் உயிரில் பொருள் ஆகிய இவற்றின் தன்மைக்கு வேறுபட்டவன் என்று அருளிச் செய்தார். **மூன்றாம் பாசுரத்தில்** மோட்ச உலகத்தைப் போன்றே அவனுக்கு உரிமைப் பட்ட தன்மையால் அந்தரங்கமாய்த் தோற்றுகின்ற லீலா விபூதி யோகத்தை அநுபவித்தார். **நான்காம் பாசுரத்தில்** அந்த லீலா விபூதியிலுள்ள பொருள்களனைத்தும் அவனுக்கு அதீனம் (உரிமை) என்றார். **ஐந்தாம் பாசுத்தில்** அவற்றை அளித்தலும் அவன் அதீனம் என்றார். **ஆறாம் பாசுத்தில்** தொழில் செய்தலும் செய்யாமையும் அவன் அதீனம் என்றார். **ஏழாம் பாசுரத்தில்** உடலுக்கும் உயிருக்குமுள்ள இலக்கணம் உலகிற்கும் இறைவனுக்கும் உண்டாகையாலே உலகிற்கும் அவனுக்கும் சொன்ன ஐக்கியத்திற்குக் காரணம் **சரீர—ஆன்மபாவனை** என்றார். **எட்டாம் பாசுரத்தில்** குத்ருஷ்டிகளை மறுத்தார். **ஒன்பதாம் பாசுரத்தில்** சூனியவாதியை மறுத்தார். **பத்தாம் பாசுரத்தில்** வியாப்திசௌகர்யத்தை

அருளிச் செய்தார். இந்த விளக்கத்தாலே எம்பெருமானுடைய பரத்துவத்தை உறுதிப்படுத்தினவாய்நின்றார் என்பது அறியத்தக்கது.

**(2) பரத்துவத்தை அவதாரத்தில் காட்டல்** : *'திண்ணன் வீடு' (2.2) என்ற திருவாய்மொழியில் இது காட்டப் பெறுகின்றது.*

*என்றும் அழியாத பரமபதம் முதலான எல்லா உலகங்கட்கும் உரியவனாய், எல்லை யற்ற நற்குணங்களை யுடையவனாய், அக்குணங்களைக் காட்டி என்னை அடிமை கொண்டவனாய், இவ்வுலகம், தெய்வ வுலகம் முதலிய எல்லா உலகங்களையும் ஒரு சேர உண்டவனாயுள்ள நம் கண்ணபிரானே உலகத்திற்கெல்லாம் களைகண்; அவனையல்லது களைகண் ஆவார் ஒருவரும் இலர். (1)*

*பிரமனது தலையனைக் கிள்ளியதனால் உண்டான பெரிய தீவினையானது விட்டு நீங்கும்படி, சிவனுக்குப் பிச்சையினைப் பெய்து அவனைக் காப்பாற்றிய கோகுலத்திற் பிறந்தார்க்கெல்லாம் வலிய ஆண் சிங்கத்தினை யொத்த கண்ணனையன்றி உலகங்கள் ஏழிலுமுள்ள அவ்வவ் உயிர்கள் செய்த தீவினைகளையெல்லாம் போக்கி அவற்றை அருளோடு காப்பாற்றுகின்றவர் வேறு யாவர்? ஐயோ! பாவம்! இவ்வுண்மையினைக் கூறல் நம்மைச் சார்ந்ததாவதே? (2)*

*இடப வாகனத்தையுடைய சிவனையும், தாமரைப் பூவில் பிறந்த பிரமனையும், தாமரைப் பூவில் வீற்றிருக்கின்ற பெரிய பிராட்டியாரையும் வேறுபாடு இன்றி, அயர்வறும் அமரர்கள் தொழும்படி தனது திருமேனியில் வைத்து மேலேயுள்ள உலகங்களுக்கெல்லாம் மேலே செல்லும்படி வளர்ந்து உலகத்தை அளந்து கொண்ட அறப் பெரிய தெய்வத்தைக் காட்டிலும் உயர்ந்ததாகக் கூறத்தக்க வேறு தெய்வமும் உண்டோ? இல்லை. (3)*

தேவர்களையும் மற்றை எல்லாப் பொருள்களையும் உண்டாக்குதற்குத் தனது திருவுருந்தித் தாமரையினின்றும் நான்கு முகங்களையுடைய பிரமனைப் படைத்த ஒளியினையுடையவனான எம்பெருமானுக்கல்லாமல் ஏனையோர்க்கு மலர்களும் மலர்களால் அருச்சித்து வணங்கும் வணக்கமும் தகுவ ஆகுமோ? ஆகா. (4)

படைத்தல் முதலிய தொழில்களுக்குத் தக்க ஞானம் சக்தி முதலிய குணங்களையுடையவன், தன்னுடைதாகித் தனித்த காரணமான மூலப் பகுதியினுள்ளே மேலான தேவர்களையும் மற்றெப் பொருள்களையும் படைக்கத் தகுதியான அழகியதாமரை மலர் போன்ற திருக்கண்களையுடையவன், என்னை அடிமை கொண்டவன், பேரொளியுருவன் ஆன எம்பெருமானுக்கு மேம்பட்ட ஓர் இறைவன் உளன் என்று அறிகின்றவர்கள் யாவர்? ஒருவரும் இலர். (5)

உயர்திணையும் அஃறிணையுமான எல்லாப் பொருளும் ஒன்றோடொன்று நெருக்குண்ணாதவாறு தன் வயிற்றில் ஒடுங்கும்படி நின்ற, பரந்து விரிந்த ஞான வெள்ளத்தினையுடைய ஒளிமிகுந்த திருமேனியையுடையவர்யாவர்? அவர்தாம் எமக்காகத் திருப்பாற்கடலில் அறிதுயிலில் ஆழ்ந்து கிடக்கின்றவர். (6)

ஆலந்தளிராகிய படுக்கையில் சயனித்திருக்கின்ற, வள்ளல் தன்மையும் வலிமையும் பொருந்திய வயிற்றையுடைய பெருமான்; ஒருவர்க்கும் தோன்றாத ஆச்சரியமான, உள்ளே உள்ளே செல்லுகின்ற, அவனுடைய மனத்தின் எண்ணத்தை அறிய வல்லவர் எவர் தாம்? ஒருவரும் இலர். (7)

தன் நினைவினாலேயே எல்லாத் தேவர்களையும் எல்லாப் பொருள்களையும் உண்டாக்கின ஆச்சரியமான செயல்களையுடைய வனையல்லாமல், இம்மூன்று உலகங்

களையும் திருந்தச் செய்து, தனது திருவுள்ளத்தே வைத்து, ஒருநோவும் வாராதபடி காத்து நோக்குகின்ற இயல்பினை யுடையவர் யாவர்? ஒருவரும் இலர். (8)

எல்லா உயிர்களையும் பாதுகாத்தலையே தனக்கு இயல்பாக உடையவன்; கண்ணபிரானாகிய எம் இறைவன்; அவன், அழிக்கும் காலம் வந்தவாறே, எல்லா உயிர்களையும் தன திருமேனியில் சேரச் செய்து, பின்னர், தனது திருநாபிக் கமலத்திலே, எல்லாக் குணங்களும் பொருந்திய நான்முகனையும், இந்திரனையும், தேவர் களையும், தேவர்களுக்குரிய உலகங்களையும உண்டாக் கினான். (9)

வெண்மை நிறம் பொருந்திய இடபத்தை வாகன மாகவுடைய சிவனும் பிரமனும் இந்திரனும் மற்றைத் தேவர்களும், 'கள்வனே! எங்களையும் மற்றை உலகங் களையும் நின்னிடத்தில் நின்றும், தோன்றச் செய்த இறை வனே!' என்று, கருட வாகனத்தையுடைய இறைவ னுடைய திருவடிகளை வணங்கித் துதிப்பார்கள். (10)

பலச்சுருதிப் பாசுரத்திலும் ''ஏழுலகங்களிலும் உள்ள வர்கள் எல்லாரும் ஏத்த, எல்லா உலகங்களையும் தன் திருவடியில் அளந்து கொண்ட அழகு பொருந்திய கூத்தன்'' என்று குறிப்பிடுகின்றார்.

**(3) எம்பெருமான் மோட்சம் அளிக்கும் தன்மை.** இஃது 'அணைவது' (2.8) என்ற திருவாய் மொழியில் விளக்கப் பெறுகின்றது.

திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே சேர்வது; தாமரைப் பூவில் வீற்றிருக்கின்ற பெரிய பிராட்டியின் திருமேனியைக் கலப்பது; பிரசித்தராக விளங்குகின்ற அந்தப் பிரமன் சிவன் இருவர்கட்கும் தானே காரண முமாவான்; எல்லாப் பொருள்கட்கும் ஒத்த பிறவியை

யுடையவன்; மோட்சத்திற்குக் காரணமானவன்; பிறவி யாகின்ற கடலை நீந்த வேண்டும் என்றிருப்பவர்கட்குத் தெப்பமாக இருப்பவன். (1)

பூக்களையுடைய குளிர்ந்த தண்ணீர் நிறைந்த பொய்கையிலே கஜேந்திரன் அடைந்த துன்பத்தைப் போக்கிய, அழகிய குளிர்ந்த திருத்துழாய் மாலையைத் தரித்த, எனது ஒப்பற்ற தலைவனுடைய சம்பந்தமானது நீந்தப்படுகின்ற துன்பத்தையுடைய பிறப்பு முதலாக வுள்ள மற்றெல்லாத துன்பங்களையும் போக்கும்.; துன்ப மில்லாத வீட்டுலகிற்கும் காரணமாகும். (2)

தன்னை உண்டாக்கிய உந்தியோடு பொருந்தி உலகத் தையெல்லாம் படைக்கின்ற பிரமனுமாவான்; திருமேனி யின் வலப் பாகத்தில் பொருந்தி உலகங்களை யெல்லாம் அழிக்கின்ற சிவனுமாவான்; தனது திருமார்பில் சேர்க்கப் பெற்ற பெரிய பிராட்டியாரை உடையவனாய்த் தனக்குத் தகுதியான செயலையுடையவனாயிருக்கிற எம்பெருமா னுடைய பெரிய காரியங்கள் எங்கும் காணக் கூடியனவாக இருக்கும். (3)

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்து புலன் களிலும் மேய்கின்ற ஐம்பொறிகட்கும் வசப்பட்டிருத் தலைத் தவிர்த்து ஆனந்தம் முடிவில்லாததாய் ஒப்பற்ற தாயுள்ள வீட்டுலகின்கண் செல்ல இருக்கின்றவர்களே! மனம் சுழன்று அழியும்படி அசுரர்களை அழித்தவனுடைய பலம் முற்பட்டிருக்கின்றவனுடைய நற்குணங்களில் இடைவிடாமல் மூழ்குங்கள். (4)

ஹயக்கிரீவனாகி ஆமையாகி மீனாகி இராமன் கிருட் டிணன் முதலிய மனித வடிவமும் ஆன தேவர்கட்கும் தேவர்களான நித்தியசூரிகட்குத் தலைவனாகிய என் தீர்த்தன், இடைவிடாத துன்பத்தையுடைய பிறப்பு முத லாக மற்றுமுள்ள எல்லாவற்றுக்கும் சோம்புதலில்லாத

தனித்த காரணனாகி மூன்று உலகங்களையும் பாதுகாக்கின்றவன். (5)

அருச்சுனன் தீர்த்தனுடைய உலகங்களை அளந்த செம்மை பொருந்திய திருவடிகளின்மேல் அழகிய மாலையினை அணிந்து, அணிந்த அம்மாலையினையே சிவனுடைய சடையின் மேலே தானே நேரில் கண்டு கண்ணபிரானே இறைவனாவான் என்று தெளிந்து அறுதியிட்ட பசிய திருத்துழாய் அணிந்த கண்ணபிரானுடைய பெருமை இப்பொழுது கண்டு மீண்டும் ஒருவரால் ஆராய வேண்டும்படி இருக்கின்றதோ? இல்லை. (6)

அறப்பெரிய இறைவன் பூமிப் பிராட்டியை, கடற்கரையில் வழிவேண்டிக் கிடந்தான்; சித்திர கூடமலையில் முனிவர்களோடு இருந்தான்; இராவணனைக் கொன்ற பின்னர் வீர இலக்குமியோடு நின்றான்; மூன்றடிகளால் அளந்தான்; வராகமாகிக் கீழேபுக்கு இடந்து மேலே கொண்டு வந்தான்; பிரளய காலத்தில் தன்னுள் மறைத்தான்; மீண்டும் உமிழ்ந்தான்; வலிய பெரிய தோள்கள் இன்பத்தால் பூரிக்கும்படித் தழுவினான். ஆதலால் பூமிப் பிராட்டி விஷயமாகச் செய்கின்ற அன்பு நிறைந்த காரியங்களைக் காண்பார் யாவர்? (7)

எம் ஈசனாகிய கண்ணனை அறிய வல்லவர் யாவர்? காணும் விதந்தான் யாங்ஙனம்? அவனுடை உணவினைப் பேசின் எல்லா உலகங்களும் ஒரு கவளத்துக்கும் போதமாட்டா; தங்கியிருக்கும் வீடோ எல்லா உலகங்கட்கும் அப்பாற்பட்டது; அவனோ தன்னையொழிந்த மற்றை எல்லாப் பொருள்கட்கும் அந்தர்யாமியாக இருந்து கொண்டு எல்லாத் திக்குகளிலும் ஒன்றையும் விடாதவனாகி எல்லா இடங்களிலும் பரந்திருக்கின்றான் ஆதலின். (8)

கண்ணன் எல்லாவிடத்திலும் இருக்கின்றான் என்று கூறிய மகன் பிரகலாதனைத் தந்தையாகிய இரணியன்

''நீ கூறுகின்ற கண்ணன் இவ்விடத்தில் இல்லாதவனோ யாவன்'' என்று தூணை அடிக்க அத்தூணில் அப் பொழுதே அவ்விரணியன் மாயும் படியாகத் தோன்றிய, என் சிங்கப் பிரானுடைய பெருமை ஆராய்தற்குரிய தன்மையதோ? (9)

சிறப்பினைக் கொண்டுள்ள பரமபதம் சுவர்க்கம் நரகம் முடிவாக, அன்பினைக் கொண்டுள்ள தேவர்கள் நடுவாக, மற்றும் உண்டான எல்லாப் பொருள்கட்கும் வேராகி முதலாகி வித்தாகிப் பரந்து தனித்து நின்ற கார் காலத்து மேகத்தைப் போன்ற வண்ணத்தையுடையவ னான என் கண்ண பிரானை நான் கண்டேன். (10)

**(4) எம்பெருமான் எல்லாத் தேவதைகட்கும் மேம்பட்ட வன் :** இஃது 'ஒன்றும் தேவும்' (4.10)[12] என்னும் திரு வாய்மொழியால் பெறப்படுகின்றது.

தேவர்களும் தேவர்கள் தங்கியிருக்கின்ற உலகங்களும் மக்கள் முதலான உயிர்களும் மகத்து முதலான தத்துவங் களும் மற்றும் எல்லாப் பொருள்களும் ஒன்றும் இல்லாத அந்தக் காலத்தில் நான்கு முகங்களையுடைய பிரமனோடு கூட தேவர்களையும் அவர்கள் தங்கியிருக்கின்ற உலகங் களையும் மற்றை உயிர்க் கூட்டங்களையும் படைத்தவன், திருக்குருகூரில் நின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக் கின்ற ஆதிப்பிரான் இருக்க மற்றைத் தெய்வங்களைத் தேடுகின்றீர்களே! (1)

பலவகைப்பட்ட நாடுகளிலும் நகரங்களிலும் உள்ள வர்களே! நீங்கள் விரும்பி வணங்குகின்ற தெய்வங்களை யும் ஆதிகாலத்திலேயே படைத்தான், அழிதல் இல்லாத

12. இப் பதிகத்தில் திருமந்திரத்தின் பொருள் சொல்லப் படுவதாக ஈட்டாசிரியர் குறிப்பிடுவர்.

கல்யாணகுணங்களையும் புகழையும் உடைய ஆதிப் பிரான், எழுந்தருளியிருக்கின்ற திருக்குருகூர் என்னும் திவ்விய தேசத்தைப் பாடி ஆடித் துதித்துப் பரந்து செல்லுங்கள். (2)

பரந்திருக்கின்ற தெய்வங்களையும் அவர்கட்கு உறைவிடமான பலவகைப்பட்ட உலகங்களையும் படைத்தும், பிரளயம் வந்த காலத்தில் அவற்றை உடனே விழுங்கியும், பிரளயம் அறியாதவாறு மறைத்தும், பின்னர் வெளிநாடு காண உமிழ்ந்தும், திரிவிக்கிரமாவதாரத்தில் இரண்டு அடிகளால் அளந்தும், வராக அவதாரத்தில் பிரளயத்திலிருந்து எடுத்தும் செய்துபோன காரியங்களைப் பார்த்திருந்தும் அவனே பரன், அவனுக்கே உரியது உலகம் என்பதைத் தெளிய கில்லீர்; தேவர்கள் தலைகளாலே வணங்குகின்ற திருக்குருகூர் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானுக்குச் சரீரமாயல்லது சுதந்திரத்தோடுகூடியிருக்கின்ற வேறு தெய்வம் இல்லை; இருக்குமேயாயின், பலவகைப்பட்ட உலகத்திலுள்ளவர்களே! என்னோடு வந்து பேசுங்கள். (3)

பேசப்படுகின்ற சிவபெருமானுக்கும் பிரமனுக்கும் மற்றைத் தேவர்கட்கும் தலைவன் அவனே யாவான்; இதனைக் கபாலம் விடுபட்ட சரிதையாலே கண்டு கொள்ளுங்கள்; திருக்குருகூரில் எழுந்தளியிருக்கின்ற எம்பெருமான் விஷயத்தில் பயனில்லாத வார்த்தைகளை ஏற்றிப் பேசுதல் அநுமானத்தைப் பிரமாணமாக உடையவர்கட்கு என்ன பயனைத் தருவதாம்? (4)

இலிங்கபுராணத்தைப் பிரமாணமாகவுடைய நீங்களும் சமணர்களும் பௌத்தர்களும் மேலும் மேலிட்டு வாதுகின்றவர்களானவைசேடிகர்களான நீங்களும், நீங்கள் வணக்குகின்ற தெய்வங்களும் ஆகி நிற்கின்றவன், திருக்குருகூரில் எல்லாக் குணங்களோடும் பொலிந்து

நிற்கின்ற திருக்கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற பிரானே யாவன்; ஆதலால் நான் கூறுகின்றவை சிறிதும் பொய் யில்லை; அவனையே துதி செய்யுங்கள். (5)

வேறு ஒரு தெய்வத்தைத் துதித்து ஆதரிக்கும்படியாகத் தனக்குப் புறம்பாக்கி உங்களை இவ்வகையாகத் தெளியும் படியாகச் செய்து வைத்தது; எல்லோரும் வீடு பேற்றை அடைந்தால் சாத்திர மரியாதை கெட்டுவிடும் என்றே யாம்; திருக்குருகூரில் எழுந்தருளியிருக்கின்ற மிக்க ஆற்ற லோடு கூடிய எம்பெருமானது மாயமாகும் இது; அதனை அறிந்து அறிந்து தப்பிப் பிழைப்பதற்குப் பாருங்கள். (6)

வேறு ஓர் தெய்வத்தைப் பாடியும் ஆடியும் வணங்கி யும் பலபல வகைகளாலே சாத்திரங்கள் கூறிய வழிகளிலே சென்று திரிந்து பல பிறப்புப் பிறந்து அதன் பலன்களை யும் கண்டீர்கள்; அதனால் திருக்குருகூரில் நின்ற திருக் கோலமாய் எழுந்தருளியிரும் பொலிந்து நிற்கும் பிரானுக்கு அடிமை புகுவீர். (7)

அடிமையாசப் புகுத்து சிவபிரானாகிய தன்னைக் கண்ட மார்க்கண்டேயனைச் சிவபிரானும் ஆபத்துக் காலத்தில் காப்பாற்றியது நாராயணனது திருவருளாலே யாகும்; திருக்குருகூரில் ஆதிப்பிரான் நின்ற திருக்கோலமா யிருக்க, அவரைவிட்டு வேறு தெய்வங்களைப்பற்றிப் பேசுகின்றீர்களே, உங்கள் அறிவின்மை இருந்தவாறு என்னே! (8)

சொல்லாப்படுகின்றஆறு புறச்சமயங்களும் மற்று முள்ள குத்ருஷ்டிகளும் கூட்டமாகத் திரண்டு வந்தாலும் தன் விஷயத்தில் அளவிட்டுக் காண்பதற்கு அரியனாய் இருக்கின்ற ஆதிப்பிரான் எழுந்தருதியிருக்கின்ற திருக்குருகூர் என்ற திவ்விய தேசத்தை மனத்தில் இருத்துங்கள். (9)

எல்லாத் தேவர்களும் எல்லா உலகங்களும் மற்றும் உண்டான எல்லாப் பொருள்களும் ஆகிய இத்தனையும் குற்றம் இல்லாத மூர்த்தியைக் போன்று இருந்தபடியே தன் பக்கலில் நிற்க, திருக்குருக்கூரில் எழுந்தருளியிருக்கும் மாணி வேடத்தையுடைய வாமனனாகிய நீள்குடக் கூத்தனுக்கு அடிமை செய்வதே சீரியதாகும். (10)

## திருப்பாவை

திருப்பாவையில் அர்த்தபஞ்சக தத்துவங்கள் அமைந்து கிடக்கின்றன என்பதையும் நம் முன்னோர் சிந்தித்துள்ளனர். அந்தச் சிந்தனைகளை ஈண்டுக் காட்டுவேன்.

**இறைவனின் இயல்பு;** திரிமூர்த்தி சொரூபமாகிய நாராயணனை நோக்கியே இந்த நோன்பு நோற்கத் தக்கது என்பது ஆண்டாளுடைய உள்ளக்கிடக்கை. ஆதலால் 'மார்கழித் திங்கள்' (1) என்ற **முதற் பாசுத்தில்,**

> **'நாரா யணனே**
> **நமக்கே பறைதருவான்'**

என்ற அடியில் பரத்திலுள்ள நாராயணனைப் பாடுகின்றாள் **நாராயணன்** அடியார்க்குக் காரியம் செய்யுமிடத்துச் சாதனங்களை எதிர்பாராது செய்து தலைக்கட்டுபவன் என்பதை உணர்த்தும் ஆசாரியனை நாராயணாவதாரமாகச் சொல்வது மரபு. இவ்விடத்தில் நாம்மாழ்வாரை நோக்கி ஒரு பரமபக்தர் பாடியுள்ள,

> **சேமம் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ**
> **நாமம் பராங்குசமோ நாரணமோ — தாமம்**
> **துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்**
> **உளவோ பெருமான் உனக்கு?**

என்ன பாசுரத்தை நினைத்தல் தகும். 'பறைதருவான்' என்பதால் எதிர்பார்க்கும் பொருளை நல்குவான் என்ற பொருளைத் தரும்.

நாராயணனே, நமக்கே என்ற பிரிநிலை ஏகாரங்களினால் 'சதாசாரியனே தந்தருள வல்லவன், சச்சிடனே பெறத்தக்கவன்' என்பது பெறப்படும். இரும்பைப் பொன்னாக்குமாப்போலே, பரம நீசனாயிருந்தவனை உத்தமாதிகாரியாக ஆக்கிவிடுவது ஆசாரியரின் கார்யம். பஞ்சசம்ஸ்காரம் பண்ணித் தீமனம் கெடுத்து ஆட்கொள்ளுபவன் ஆசாரியன். இன்னும் நமக்கே என்ற பதில் உள்ள ஏகாரமும் அப்பொருள் உடையதாய், நாராயணன் சர்வசாதாரண சுவாமியாயினும் ஆகிஞ்சந்யம், அநந்ய கதித்துவம் என்னும் அதிகாரங்கள் அமைந்த நமக்ன்றி மற்றையோர்க்குக் காரியம் செய்யான் என்பதைத் தெரிவிக்கும்.

'வையத்து' (2) என்ற இரண்டாம் பாசுரத்தில்

பார்க்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி

என்ற அடிகளில் வியூக ரூபமாகப் பரன் பாற்கடலில் பையத்துயிலும் மூர்த்தியைக் காட்டுகின்றாள். ஆயச் சிறுமிகள் எல்லாவகையாலும் விஞ்சின கண்ணபிரானைப் பாடாது திருப்பாற்கடல் நாதனைப்பாடுவதாகச் சொல்லுகிற கருத்து யாதெனில்: "கிருட்டிணனையும் தம்மையும் நோக்கிப் பண்டே அதிக ஐயம் கொண்டிருக்கின்ற இடையர் நமக்குத் தெய்வம் தந்த இச்சேர்த்தியைச் சீறி அழிக்கில் தாம் செய்வதென்?" என்னும் அச்சத்தினால் கண்ணனடி பாடுவதாகக் கூறுகின்றிலர் எனக்கொள்ளல் வேண்டும்.

உள்ளுறையில், பாற்கடலுள் பையத்துயின்ற பரமனடிபாடுகையாவது என்னெனில்: 'உனது, பாலேபோல் சீரிற் பழுத்தொழிந்தேன்'' (பெரி. திருவந் 58) - 'உன்னுடைய பால்போலப் பரமபோக்கியமான திருக்கல்யாண குணங்களில் ஆழ்ந்து விட்டேன்' என்கின்றபடியே பால்

என்பது எம் பெருமானது திருக்கல்யாண குணங்களைச் சொல்லுவது. அவை பிரித்து எண்ணக் கூடியதல்லவை யாகையாலே கடல்போன்றவையாம். எம்பெருமானையே சர்வ போக்கியமுமாகக் கொள்ள வேண்டும் என்பது இதன் உள்ளுறைப் பொருள்.

'ஓங்கி உலகலந்த' (3) என்ற மூன்றாம் பாசுரத்தில் வாமனனாகித் திரிவிக்கிரமனான விபவ ரூபத்தைக் குறிப் பிடும் போக்கில்,

**ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி**

என்று குறிப்பிடுகின்றார். 'உத்தமன் பேர்' என்பதால் 'நாராயணன்' என்ற பரத்துவ நினைவும் வியூகத்தில் சொல்லும் உடையவர்களாக விபவத்தைப் பாடி, பக வானை மனத்தில் எப்படிப் பாவித்துக் கொண்டுள் ளோமோ அந்தப் பாவைக்குச் சாற்றி நீராடல் வேண்டும் என்று மனம் மொழி செயல்களால் இது பகவானுடைய ஆராதனமே என்பதைத் தெளிவு படுத்துகின்றாள்.

'ஆழிமழைக் கண்ணா!' (4) என்ற நான்காம் பாசுரத் தில் 'ஆழி மழைக் கண்ணா!' என்று அவன் மேற்கொண்ட காரியத்தை இட்டு அழைக்கின்றனர். "எம்பெருமான் படைப்புச் செயல்களை அயனார் தலையிலிட்டுத் தான் காத்தல் தொழிலைக் கைப்பற்றினாற் போல 'பிடி, அடி' என்னும் செயலை நமன் முதலியோர் தலையிலிட்டு, உனது நீர்மைக்குப் பொருந்த எல்லாரையும் குளிர நோக் கும் காரியத்தில் நியமிக்கப் பட்டவனன்றோ நீ" என்று புகழ்கின்றாள்.

'பகவானுக்கு அடிமைப் பட்ட பாகவதர்கட்கு மற்றைத் தேவர்கள் அடிமை செய்பவர்கள்' என்பது சாத் திர சித்தம். ஆகவே, மழைக்கு அதிதெய்வமான வருணன், பரமபாகவதைகளான இவர்கள் இருக்கும் இடத்தில் வந்து 'நான் இவ்விடத்தில் செய்ய வேண்டும் அடிமையை

நியமிக்க வேண்டும், என்று வேண்ட, செய்ய வேண்டிய படியை, 'இன்ன படியும் இன்ன படியும்' என்று கை யோலை செய்து கொடுக்கின்றார்கள் இத் திருப் பாசுரத் தில். மழையை இறைவனது திருவருளாகக் கருதலாம் வள்ளுவர் 'வான் சிறப்பை' இறைவனது திருவருளாக கூறியமையையும் சிந்திக்கலாம்.

இன்னும் ஆசாரியன் பலபல ஏதுக்களால் மேகமெனத் தகுதியுடையவனாதலால் மறைத்துச் சொல்லப்படுவ தாகக் கொள்ள வேண்டும்.

'மாயனை' (5) என்ற ஐந்தாம் பாசுரத்தில் மாயு னுடைய பல பெயர்களை வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்துத் தூமலர் தூவித்தொழுதால் போய பிழைகளு (எம்பெருமானை அடி பணிவதற்கு முன்னர் செய்யப் பட் டவை) புகு தருவான் நின்றனவும் (அடி பணிந்த பின்னர் பிரகிருதி வாசனையினால் அபுத்தி பூர்வமாகச் செய்தவை) தீயிலிட்ட தூசுபோல் உருமாய்ந்து ஒழியும் என்று கூறப் பெற்றது.

மாயனை-மாயமாவது ஆச்சரியம். ஆச்சரியம் செய் பவனுக்கு மாயன் என்று பெயர். ''சூட்டு நன் மாலைகள் தூயன ஏந்தி விண்ணோர்கள் நல்நீர் ஆட்டி அம் தூபம் தாரா நிற்க'வே அங்கு ஓர் மாயையினால், ஈட்டிய வெண் ணெய் தொடு உண்ணப் போந்து... (திருவிருத். 21) ஆழ்வார் எம்பெருமானிடத்தில் அநுசந்தித்த மாயச் செய்கையும் ஆசாரியர் பக்கலிலே உண்டு. இருவரும் திரு நாட்டிலிருந்து இங்கு வந்து சில நாட்களே இருந்து செய் கின்ற மாயச் செயல்களன்றோ இவை?

# 3. ஆன்மாவின் இயல்பு

ஞானத்தின் இடமான ஆன்மா சித்து' என்றும் வழங்கப் பெறுகின்றது. இஃது அன்னமயம், பிராணமயம், மனோமயம் என்பவற்றிற்கு அப்பாலாயிருப்பது. தேகம், இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் என்ற இவற்றிற்கு வேறுபட்டது. அறிகின்ற தலைவனும், அறிவும், அறியப்பெறும் பொருளும் தானாகவே இருப்பது. அணுவின் அளவினையுடைய இந்த ஆன்மா ஆனந்த வடிவத்தைக் கொண்டது. என்றும் நிலைபெற்றிருப்பது. இது கண் முதலிய இந்திரியங்கட்குத் தோற்றாது. மனத்தாலும் இதனை நினைக்க முடியாது. இதனைப் பகுதிகளாகவும் பிரிக்க முடியாது. அவயவமும் அற்றது. வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. அறிவுமயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கும் இருப்பிடமானது. இந்த அறிவு 'தர்ம பூத ஞானம்' என வழங்கப்பெறும். இதனால் ஆன்மா 'தர்மி பூத ஞானம்' என வேறொரு பெயராலும் வழங்கப் பெறும். இந்தச் சீவான்மா தனக்கு எப்பொழுதும் தோன்றிக் கொண்டே இருக்கும். தன்னைத் 'தான்' என்று அறியும்பொழுது தர்மபூத ஞானம் உதவ வேண்டும் என்பதில்லை. ஆனால், சீவான்மா தன்னைத் தவிர வேறு எந்தப் பொருளையும் தன் தர்மபூத ஞானத்தால் மட்டிலுமே அறிய முடியும். தன் சொரூபத்தைத் தர்மபூத ஞானத்தைக் கொண்டும் அறியலாம்.

ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது; அவனால் தரிக்கப் பெற்று அவனுக்கு அடிமையாகவே இருப்பது. இதனை நன்கு உணர்ந்த ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் இத்தன்மையை வெளியிட்டுள்ளனர். பூதத்தாழ்வார்,

'நேர்ந்தேன் அடிமை' (இரண். திருவந் 80)

என்பர்.

அவற்கு அடிமைப்பட்டேன் (மூன். திருவந் 37)

என்று கூறுவர் பேயாழ்வார். திருமதி சையாழ்வாரோ,

என்றேன் அடிமை இழிந்தேன் பிறப்பிடும்பை
(நான். திருவந் 95)

என்று இக்கருத்தில் ஊற்றம் காட்டுவர்.

ஆன்மா தனக்குத்தானே தோற்றுவது என்று மேலே கூறப்பெற்றது. எந்தப் பொருளும் காணப் பெறுவதற்கு விளக்கின் ஒளி வேண்டும் என்பதை நாம் அறிவோம். ஆனால், விளக்கு மற்றொரு விளக்கு வேண்டாமலேயே தனக்குத்தானே நன்கு விளங்கச் செய்வது போலவே, ஆன்மாவும் ஞானத்தை எதிர்பாராமலேயே தனக்குத் தானே விளங்கும். விளக்கும் அதன் ஒளியும் ஒளியுள்ளவைகளாக இருப்பினும், ஒளிக்கு விளக்கு இருப்பிடமாக இருப்பது போலவே, ஆன்மாவும் தான் ஞான மயமாக இருப்பினும், தனக்குத் தர்மமான ஞானத்திற்கும் தான் இருப்பிடமின்றி ஞான மாத்திரமானால் 'நான் அறிவு' என்று ஞான மாத்திரமாகச் சொல்ல வேண்டும். 'நான் இதனை அறியா நின்றேன்' என்று தன்னை ஞாதாவாக (அறிபவனாகச்) சொல்லக் கூடாது. 'என்னுடைய' என்ற சொல்லானது 'நான்' என்ற சொல்லின் ஆறாம் வேற்றுமை. 'நான்' என்பதற்கு எது பொருளோ அதுவே தேகம், இந்திரியம்... என்பவற்றுக்கும் பொருளாக இருக்க முடியாது. ஆன்மாவானது 'நான்' என்ற சொல்லுக்குப் பொருளாய்த் தோன்றுவதனால் உடல் முதலியவற்றைக் காட்டிலும் அது (ஆன்மா) வேறுபட்டது என்பது பெறப்படும்.

ஆன்மாவிற்கு இன்ப துன்பங்கள் உடம்பின் தொடர்பால் ஏற்படுகின்றன. இத்தொடர்பு தொடக்கம் என்று என்றிராத வினைத்திறன்களினால் (கர்மத்தினால்) ஏற்படுகின்றது. ஆன்மா எக்காலத்திலும் உளதாயின் பிறப்பு இறப்பு என்பவை ஏன் என்ற வினா எழுகின்றது. பிறப்பு என்பது,உடல் தொடர்பு; அஃதாவது ஆன்மா ஓர் உடலை விட்டுப் பிறிதோர் உடலை அடைவதாகும்; இறப்பு என்பது, ஆன்மா உடலைத் துறப்பதாகும். அங்ஙனமே ஆன்மா அணுவளவாக இதயத்தில் மாத்திரம் இருக்குமாகில், அஃது உடலினுழ் எல்லாப் பகுதிகளில் உண்டாகும் இன்ப துன்பங்களை அறிவதெங்ஙனம்? என்ற மற்றொரு வினாவும் எழுகின்றது. இரத்தினங்கள், கதிரவன், விளக்கு ஆகிய ஒளியுள்ள பொருள்கள் ஓர் இடத்தில் இருப்பினும் அவற்றின் ஒளி எங்கும் ஒக்கப்பரவுவது போல, ஆன்மாவும் இதயத்தில் மாத்திரம் இருப்பினும் அதனுடைய 'தர்மபூத ஞானம்' உடல் முழுவதும் பரவுவதனால் உடலின் எப்பகுதியில் உண்டாகும் இன்ப துன்பங்களையும் அஃது அநுபவிக்கத் தடை இல்லை என்பது அறியப்படும்.

மேலும், எல்லாச் செயல்களும் உடலை யுடையவனுடைய (சரீரியினுடைய) நினைவு அடியாக உண்டாவன போலவே ஈசுவரனுக்குச் சரீர பூதமான இவ்வான்மாவினுடைய எல்லாச் செயல்களும் சரீரியான பரமான்மாவினுடைய நினைவு அடியாகவே உண்டாகும். அவனன்றி ஓர் அணுவும் அசையாதல்லவா? வீடு, நிலம் பிள்ளை, மனைவி, தனம், தானியம், தோட்டம் முதலியவை உடையவனுடைய (ஆண்டானுடைய) செயல்கட்காகவே நிலைபெற்றிருக்கும். ஆனால், அவை அவனையொழியவும் தனித்து வேறாக நிலைபெற்றிருக்கும். ஆயினும், ஈசுவரனுக்கு அடிமையாகவுள்ள (சேஷமாகவுள்ள) ஆன்மா ஆன்மாவை விட்டுப் பிரித்திராத உடலைப் போல் (சேஷியான ஆண்டான்) ஈசுவரனையொழியவும் தான்

வேறாகக் காணப்பெறுதல் இல்லை. இந்த முறையில் ஒவ்வோர் **ஆன்மாவும் ஈசுவரனின் உடலாக இருக்கும்.** இது **சரீர-சரீரி பாவனை** (உடல்-உயிர் உறவு) என்று வழங்கப்பெறும்.

**திவ்வியக்கவியின் கருத்து** : மேற்கூறிய கருத்துகளை ஒருவாறு தொகுத்து திவ்விய கவி **பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்,**

> **மாத வங்களென் றோத வங்களின்**
> **மருவு சீவனென் றொருவ!நீபெரும்**
> **பூத மல்லை;யிந் திரிய மல்லை;ஐம்**
> **புலனு மல்லை;நற் புத்தி யல்லைகாண்;**
> **சீத ரன்பரந் தாமன் வாமனன்**
> **திருவ ரங்கனுக் கடிமை; நீயுனக்**
> **கேது மில்லை யென்றறி; யறிந்தபின்**
> **ஈதின் மாவதம் இல்லை எங்குமே.**[1]

[மா-பெரிய; ஓது - சொல்லப்பெறும்; அவங்கள் - வீண் தொழில்கள்: மருவு - பொருந்துகின்ற; ஒருவ - ஒருவனே; புத்தி - அறிவு; புலன்-தந் மாத்திரை; அடிமை- அடியவன்; ஈதின் - இது போன்று]

'தவம்' என்னும் கலம்பக உறுப்பை விளக்கக் கூறும் பாசுரம் இது. தம் மனத்திற்குத் தானே உபதேசிக்கும் முகத்தால் சீவான்மாவின் சொரூபம் இத்தன்மையது என விளக்குகின்றார் அய்யங்கார். ''பெரிய தவம் என நினைத்து வீண்தொழில்களில் பொருந்தியிருக்கும் ஒருவனே, (ஆன்மாவை விளித்தபடி) நீ ஐம்பெரும் பூதங்களும் அல்லை; ஐந்து இந்திரியங்களும் அல்லை; நல்ல அறிவும் அல்லை; திருமகளைத் தன் மார்பில் தரித்தவனும் பரமபதத்தையுடையவனும், வாமன உருவமாக வந்து மாவலியின் செருக்கை அடக்கியவனுமாகிய அரங்க நகர்

1. திருவரங். கலம்,-63

அப்பனுக்கு அடியவன் நீ; உனக்கு யாதொரு சுதந்திரமும் இல்லை: இதனை நீ அறிவாயாக; இங்ஙனம் அறிந்தால் இதுபோன்ற பெரிய தவம் எந்த உலகிலும் இல்லை'' என்கின்றார் அய்யங்கார்.

**தேசிகனின் கருத்து:** சுவாமி தேசிகனும் ஆன்மாவின் இயல்பை இவ்வாறு விளக்குவர்: இந்திரியங்கள் - மனம் - பிராணவாயுக்கள்-ஞானம் ஆகிய இவற்றைக் காட்டிலும் சீவான்மா வேறுபட்டவன்; 'நான்' என்று தோன்றிக் கொண்டே இருப்பவன்; தனக்குத் தானே தோற்றுபவன்; அணுவாய், ஞான-ஆனந்த சொரூபனாய் நிற்பவன்; ஞானத்தை குணமாகவும் கொண்டவன்; உடல்தோறும் வேறுபட்டு நிற்பவன்; எம்பெருமானுக்கு அடிமையாக நிற்பதையே சொரூபமாகக் கொண்டவன். இத்தகைய சீவான்மாவுக்கு அந்தர்யாமியாய் நிற்பவன் பேரருளாளன் —இறைவன்'' (தே.பி. 250.)

மேலும் இந்த சுவாமி, சீவன் தன் கர்ம பலனை அநுபவித்தால் எம்பெருமானுக்கு '**லீலாரசம்**' ஆகிறது என்கின்றார். ''பேரருளாளன் தன் சங்கற்பத்தால் சீவான் மாவுக்கு அருளியகுணங்கள், இந்திரியங்கள் ஆகியவற்றைச் சீவான்மா தன் வினைக்குத் தக்கவாறு பயன்படும்படிச் செய்கிறான். சீவான்மா உடலைப் பெற்றுக் கர்மத்தின் பலனை அநுபவிப்பதும் அவற்றை வெறுத்துத் தள்ளுவதும் பின்னர் அவற்றை விரும்புவதுமாய் இவ்வாறு சம்சாரப் பெருங்கடலில் உழல்கின்றான். இத்தகைய சீவான்மாவுக்கு பேரருளாளன் அந்தர்யாமியாயிருந்து கர்மபலனை அநுப விக்கச் செய்து பிராட்டியுடன் கண்டு லீலாரசத்தை அநுபவிக்கின்றான்'' (தே. பி. 251)

**ஆன்மாவின் வகைகள்** : சீவான்மாக்கள் எண்ணற் றவை. இவர்களின் தொகுதி நித்தியர், முத்தர், பத்தர்,

கேவலர், முமுட்சுகள் என்னும் வேற்றுமையால் **ஐந்து** வகைப்பட்டிருக்கும்,

**நித்தியர்** என்போர், ஒருநாளும், சம்சார சம்பந்த உணர்வு இல்லாதவர்கள். இவர்கள் வைகுந்தவாசிகள். அனந்தன், கருடன் (பெரிய திருவடி), சேனை முதலியார் (விஷ்வக் சேனர்) தொடக்கமானவர்கள் ஆவர்.

**முத்தர்** என்போர், இவ்வுலகத் தளைகள் களையப் பெற்றுப் பரமபதத்தில் பகவத அநுபவம், கைங்கரிய போகம் என்ற பேறுகளை உடையோர்.

**வெற்பென்று வேங்கடம்**
**பாடினேன்; வீடாக்கி**
**நின்கின்றேன்; நின்று**
**நினைக்கின்றேன் - கற்கின்ற**
**நூல்வலையில் பட்டிருந்த**
**நூலாட்டி கேள்வனார்**
**கால்வலையில் பட்டிருந்தேன்**
**காண்** (நான். திருவந். 40)

[வெற்பு-மலை; வீடு-மோட்சம்; நூல்-மறைகள்; நூலாட்டி-நூலாளனின் பெண்பால், பெரிய பிராட்டியார்; கேள்வன்-கணவன்; கால்-திருவடிகள்]

என்று பக்திசாரர் தாம் பெற்ற முக்தி நிலையைக் குறிப்பிடுவர்; பக்தி, பிரபத்தி இவற்றுள் ஒன்றை அநுட்டித்து மோட்சத்தைப் பெற்றவர்கள் இவர்கள; அதாவது முக்தர்கள்.

**பத்தர்** என்போர், 'மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் மும்மைத்தாய' பகவானின் மாயையால் மறைக்கப் பெற்ற சொருபத்தை உடையவர்கள். அநாதி அஞ்ஞானத்தால்

தேடிய புண்ணியம் பாவம் ஆகிய வினைகளால் சூழப் பெற்றவர்கள். அவரவர்தம் வினைக்குத் தக்கபடி மாறி மாறித் தேவ, மனித, விலங்கு, தாவர வடிவங்களைப் பெற்று துக்க பரம்பரைகளை அநுபவிக்கும் சம்சாரிகள் ஆவர் இவர்களை,

> **பண்டிப் பெரும்பதியை**
> **யாக்கி பழிபாவம்**
> **கொண்டிங்கு வாழ்வார்** (இரண் திருவந். 14)

[பண்டி-வயிறு; பதி-ஊர் (சம்சாரம்)]

என்று குறிப்பிடுவர் பூதத்தாழ்வார். "கண்டவற்றைத் தின்று வயிற்றை வளர்த்துக் கொண்டு. தெரியாமல் விளையும் குற்றங்களையும் (பழி),தெரிந்து செய்யும் குற்றங்களையும் (பாவம்) மேன்மேலும் வளர்த்துக்கொண்டு இவ்வுலகில் வாழ்வார்" என்பது இதன் பொருளாகும். இவர்களைப் 'புபூட்சுகள்' என்று வழங்குவதும் உண்டு.

**கேவலர்** என்போர், ஆன்மாநுபவத்தையே பேறாகக் கொண்டு வாழ்பவர்கள்; பகவதநுபவத்திற்குப் பொருந்தாததாயுள்ள உடலோடு ஒரு தனியான தேசத்தில் திரிபவர்கள். பரமபதத்தின் புறப்பகுதிகளில் வாழ்பவராக இவரைக் கொள்வர்.

**முமுட்சுகள்**; மோட்சத்தில் விருப்பமுடையவர்கள் இவர்கள். உபாசகரும் பிரபந்நர்களும் இவ்வகையைச் சார்ந்தவர்கள். இவர்களை வேதாந்த தேசிகர்,

> **பல்வினை வன்கயிற் றால்பந்த**
> **முற்றுழல் கின்றனரும்**
> **நல்வினை மூட்டிய நாரண**
> **னார்பதம் பெற்றவரும்**

**தொல்வினை என்றுமில் லாச்சோதி**
**வானவரும் சுருதி**
**செய்வினை யோர்ந்தவர் சீவரென்**
**றோதச் சிறந்தனமே.** *(தே-பி-26)*

*[வினை - கருமம்; பந்தம்உற்று - பிணிக்கப் பெற்று; உழல்கின்றனர்-துன்பப்படுபவர்களாகிய பத்தர்கள்; நல்வினை-நல்ல உபாயம்; மூட்டிய-அநுட்டிக்கச் செய்த; பதம்- திருவடிகள்; பதம் பெற்றவர்கள்-முத்தர்கள்; தொல்வினை-அநாதியான கர்மம்;சோதி வானவர்-நித்தியர்கள்; சுருதி - மறை; செல்வினை - செல்லுகின்ற வழியை; ஓர்ந்தவர் - ஆராய்ந்த ஆசிரியர்கள்; ஓத- உபதேசிக்க]*

என்று எடுத்துக் காட்டுவர். "கர்மங்களால் கட்டுப்பட்டவர்கள் பத்தர். எம்பெருமான் சந்நிதியை (பரமபதத்தை) அடைந்தவர்கள் முத்தர். அநாதியான கர்ம சம்பந்தம் இல்லாதவர்கள் நித்திய சூரிகள்" என்கின்றார் சுவாமி தேசிகன்.

## திருவாய்மொழி

திருவாய்மொழியில் ஆன்மாவின் இயல்பு 'பயிலும் சுடரொளி' (3.7) 'ஏறாளும் இறையோனும்' (4.8), 'கண்கள் சிவந்து' (8.8), 'கருமாணிக்கம்' (8.9) என்ற நான்கு திருவாய்மொழிகளிலும் காணலாம் என்பதை முன்னர்ச் சுட்டினோம். அதனை ஈண்டு விளக்குவோம்.

**(1) அடியார்களின் அடியார்களுக்குத் தாம் அடியார் எனல்:** இது திருவாய்மொழி 'பயிலும் சுடரொளி' என்ற பதிகத்தில் (3.7) தெளிவாகின்றது.

செறிந்துள்ள பேரொளிமான சரீரத்தை உடைய வனும், தாமரை போன்ற திருச்கண்களையுடையவனும் பயில்வதற்கு இனிய பாற்கடலிலே அறிதுயில் செய்கின்ற நம் பரமனுமான எம்பெருமான் சேர்கின்ற பெரிய செல்வத்தையுடையவர்கள் எப்பிறவிகளை உடைடவர் களாகிலும் அவர்களேதாம், உண்டாகின்ற பிறவிகள் தோறும் எம்மை அடிமை கொள்ளத்தக்க சுவாமிகள். (1)

ஆளுகின்ற மேலானவனை. கண்ணபிரானை' திருவாழியைத் தரித்த உபகாரத்தை உடையவனை, ஒப்பற்ற நான்கு தோள்களையுடைய பரிசுத்தமான நீல மணி போன்ற் நிறத்தையுடையவனான எம்பெருமானைத் தாளும் தடக்கையும் கூப்பி வணங்குகின்ற அவர்கள்தாம் பிறப்புகள்தோறும் எப்பொழுதும் எம்மை அடிமையாக வுடைய தலைவர் ஆவர். (2)

தலைவனை, பூமியில் தெய்வ உலகமும் ஏத்துகின்ற வாசனை பொருந்திய திருத்துழாய் மாலையைத் தரித்தவனை. அழகிய நீண்ட சக்கரத்தையுடைய எந்தையை எல்லோர்க்கும் உபகாரனாக இருப்பவனின் பாதங்களை வணங்குகின்ற அடியார்களை, வணங்குகின்ற அடியார்கள் தாம் சொல்லப்படுகின்ற பிறப்புகளிலெல்லாம் எம்மை அடிமை கொண்டவர்களாவார்கள். (3)

உடுத்திருக்கின்ற பொருந்திய பொன்னாடையையுடை யவன், கழுத்தணியையுடையவன், தரித்த அரைஞாணினை யுடையவன், ஒரு பக்கமாகப் பொருந்தியிருக்கின்ற பொன் னாலான பூணூலையுடையவன், பொன்னாலான திரு முடியையுடையவன், மற்றும் இயற்கையிலே பொருந்திய பல ஆபரணங்களை யுடையவனான திருநாரணனுடைய அடியார்கள் கண்டீர் இடம் பொருந்திய பிறவிகள் தோறும் எமக்கு எம்முடைய பெருமக்கள் ஆவர். (4)

பெருமக்களாகவுள்ளவர் தங்கட்குப் பெருமானும் தேவர்களுக்கு வருத்தமில்லாதபடி அக்காலத்தில் அரிய அமுதத்தை உண்பித்த தலைவனுமான எம்பெருமானுடைய பெருமையை புகழ்ந்து பேசுகின்ற அடியவர்கள் தாம் இனி வருகின்ற பிறவிகளிலும் இப்பிறவியிலும் நம்மைப் பாதுகாக்கும் சுவாமிகள் ஆவார்கள். (5)

காப்பாற்றுகின்ற மேலானவனை, கண்ணபிரானை, சக்கரத்தையுடைய உபகாரகனை, தேன் துளிக்கின்ற வாசனையையுடைய திருத்துழாய் மாலையைத் தரித்த பரிசுத்தமான நீலமணி போன்ற நிறத்தையுடையவனை, எம்மானை, ஒளி பொருந்திய சோதி சொரூபத்தையுடையவனைத் தம் மனத்தின்கண் வைத்துத் தியானிப்பவர்கள்தாம், சலனமில்லாத எம்மை அடிமை கொண்டு இப்பிறவியோடு மற்றைப் பிறவிகளோடு வேற்றுமையின்றிக் காப்பவராவர். (6)

தொடர்ந்து வருகின்ற பிறவிகளில் புகாதபடி காத்து அடியார்களை ஒரு தேச விசேஷத்திலே கொண்டு சென்று தனது சொரூபத்தைக் கொடுத்துத் தன் திருவடிகளின் கீழே அடிமை கொண்டருளும் எந்தையினுடைய இயற்கையான உபகாரத்தை அடைவு கெடக் கூறும் அடியார்களுடைய புகழை அடைவுகெடக் கூறுகின்றவர்கள்தாம் நன்மையைப் பெறும்படி செய்து எம்மை எப்பொழுதும் உய்யும்படி கொள்ளுகின்ற நம்பர் ஆவர். (7)

நம்பத் தகுந்தவனும், உலகத்தையெல்லாம் படைத்தவனும், திருமகளை மார்பிலே தரித்திருப்பவனும், மேலுலகங்களிலுள்ள எத்தகையோர்க்கும் அறிதற்கு அரியவனுமான எம்பெருமானுடைய திருநாமத்தை, கும்பிபோக நரகத்திலே கிடப்பவர்களாகி அங்கிருந்து ஏத்துவார்களேயாகில் அவர்களே தாம் எம்முடைய பலவகைப்பட்ட பிறவிகள்தோறும் எமக்குத் தெய்வங்கள் ஆவர். (8)

குலங்களைத் தரித்திருக்கின்ற நான்கு சாதிகளிலும் கீழே கீழே சென்று மிகச் சிறிய நன்மையும் கூட இல்லாத சண்டாளர்களாகிலும், வலது கையில் தரித்திருக்கின்ற சக்கரத்தையுடைய பெருமையிற் சிறந்தவனான நீலமணி போன்ற நிறத்தையுடைய எம்பெருமானுக்கு அடிமை என்று நினைத்து வேறு பயனைக் கருதாதவர்களுடைய அடியார் அவர்தம் அடியார் எமக்குக் கடவுள் ஆவர் (9)

திருவடிகளுக்கு அளவான பூமியை உண்டு உண்ட உணவுக்கு அநுகுணமாகக் காரியத்தைச் செய்த ஒப்பு ஒன்றும் இல்லாத இளமை பொருந்திய திருமேனியை யுடைய எந்தை பிரானுக்கு அடியார் அடியார் தம்மடியார் அடியார்தமக்கு அடியார் அடியார்தம் அடியார்கட்கு அடியோம் யாம் என்கிறார் (10)

இப் பாசுரங்களில் ஆன்மாவின் பாகவத சேஷத்துவம்-அடியார்க்கு அடிமை—என்ற கருத்து தெளிவாக்கப் பெறுகின்றது.

**(2) எம் பெருமான் விரும்பாதவைகளால் தமக்குப் பயன் இல்லை என்று தலைவி கூற்றாகப் பேசுதல் :** இஃது 'ஏறு ஆளும்' (4.8) என்ற திருவாய்மொழித் திருப்பதிகத்தில் விளக்கப்பெறுகின்றது. 'அவனுக்கு வேண்டாத நானும் என் உடைமையும் வேண்டா எனக்கு' என்று ஆன்மாவிலும் ஆன்மாவோடு சம்பந்தப்பட்ட பொருள்களிலும் நசை அற்றபடியை அந்யாபதேசத்தால்[1] அருளிச் செய்கின்றார்.

இடப் வாகனத்தையுடைய சிவபிரானும் நான்கு முகங்களையுடைய பிரமனும் திருமகளும் தனித்தனியே

1. அந்யாபதேசம் - மாற்றிச் சொல்லுதல்; வேறு வகையில் பேசுதல்.

ஆளுகின்ற ஒப்பற்ற திருமேனியை யுடையவனும், கூட்டம் கூட்டமாக அசுரர்கள் சாம்பலாகும்படியாக நினைத்துப் படையைப் பிரயோகித்த மாறாளனுமான சர்வேசுவர னால் விரும்பப்படாத அழகிய இந்நிறத்தால் ஒருவித பயனும் உடையோம் அல்லோம். (1)

மணிபோன்ற ஒளியையுடைய அழகிலே யாதொரு குறையும் இல்லாத பெரியபிராட்டியார் நித்திய வாசம் செய்யும் மார்பையுடையவனும், அழகிய பெருமை பொருந்திய விசாலமான மலை போன்ற தோள்களையும் பகைவர்களைக் கொல்லுகின்ற திருவாழியைத் தரித்த திருக்கரத்தையுமுடையவனும், கைங்கரியத்தின் அளவிலே தவறாமல் அடியேனை அடிமை கொண்ட நீலமணி போன்ற நிறத்தையுடைய மாயவனுமான சர்வேசுவர னால் விரும்பப் படாத மட நெஞ்சால் ஒரு காரியத்தை யுடையொம் அல்லோம். (2)

மடப்பம் பொருந்திய நெஞ்சால் குறைவில்லாத தாய் மகளாகத் தன்னைச் செய்து கொண்டு வந்த ஒரு பேயாகிய பூதனையினது மிக்க நஞ்சுடைய முலையைச் சுவைத்துப் பால் பருகிய மிகுந்த ஞானத்தையுடைய பாம்பின் படுக் கையிலே சயனித்திருக்கின்ற பெருத்த மலைபோன்ற தோள்களையுடைய பரம புருடனும், நெடுமாயனுமான எம்பெருமான் விரும்பாத நிறை என்னும் குணந்தால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம். (3)

நிறை என்னும் குணத்தாலே குறைவற்றிருக்கின்ற, நீண்ட மூங்கில் போன்ற தோள்களை யுடைய மடப்பம் பொருந்திய நப்பின்னைப் பிராட்டியினது தனங்களைச் சேரும்பொருட்டுப் பொறையினாலே, போர் செய்கின்ற இடபங்கள் ஏழனையும் கொன்று மகிழ்ந்த, கறைதோய்ந்த துவர் ஊட்டின உடுக்கையினையும், கடையாவினையும்

(மூங்கில் குழாய்,) கழிகோலினையு (வீசுகோல்) முடைய கையினையுமுடைய சறையினார் விரும்பாத தளிர் போன்ற நிறத்தால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம். (4)

தளிர் போன்ற நிறத்தாலே குறைபாடில்லாக, தனிச் சிறையிலே பிரசித்தமாயிருந்த கிளிபோன்ற சொற்களை யுடைய பிராட்டி காரணமாக, கிளர்ச்சியையுடைய இராவணனது நகரமாகிய இலங்கையை எரித்த, தேன் பொருந்திய மலர்களையுடைய திருத்துழாய் மாலை யானது வாசனை வீசுகின்ற திருமுடியை யுடையவனும், கடலாற் சூழப்பெற்ற இவ்வுலகமக்களிடத்தே திருவருள் மிகுந்தவனுமான சர்வேசுவரன் விரும்பாத அறிவினால் ஒரு பயனையும் உடையோம் அல்லாம். (5)

அறிவு ஒன்றில் மாத்திரம் குறைபாடு இருப்பதை அறியாத அகன்ற உலகிலே உள்ள மக்கள் அறியும்படியாக உபாயங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கூறிய நிறை ஞானத்து ஒரு மூர்த்தியும், சிறிய பிரமசரிய வடிவு கொண்டு கொடிய செயலாலே உலகத்தை அளந்து கொண்ட விரகையுடைய தலைவனுமான சர்வேசுவரன் விரும்பாத மிக்க ஒளியால் யாதொரு பயனையும் உடை யோம் அல்லோம். (6)

கிளர்ந்த ஒளியாலே குறைபாடில்லாத நரசிங்க உருவமாய்க் கிளர்ந்து எழுந்து கிளர்ந்த ஒளியை யுடைய இரணியனுடைய அகன்ற மார்பினைக் கிழித்து மகிழ்ந்த, வளர்கின்ற ஒளியையுடைய பிரகாசம் பொருந்திய சக்கரத்தையும் பாஞ்சசன்யம் என்னும் சங்கினையும் நீல மணி போன்று வளர்கின்ற ஒளியினையுமுடைய சர்வேசு வரன் விரும்பாத அழகுடைய வளையல்களால் ஒரு பயனையும் உடையோம் அல்லோம். (7

வரிகளையுடைய பாஞ்சசன்யம் என்னும் சங்கினது குறைபாடு இல்லாத பெரிய ஒலியால், எரிகின்ற அச்சமாகிய நெருப்பானது பகைவர்களின மனங்களிலே புகும்படியாக ஊதிப் பெரிய நிலத்தினது துன்பத்தை நீக்கிய, அறிதற்கு அரிய சிவனும் பிரமனும் இந்திரனும் வணங்கி ஏத்துகின்ற விரிந்த கல்யாண குணங்களை யுடைய சர்வேசுவரன் விரும்பாத மேகலையால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம். (8)

மேகலையாலே குறைவில்லாத மெலிந்திருக்கின்ற அகன்ற அல்குலையுடைய இன்பத்திற்குத் தக்கவளான உஷையினது புகழையுடைய தந்தையாகிய. வெறிபோருந்தியபாணாசுரனுடைய தோள்களைத் துணித்து, திருவனந்தாழ்வான் சயனத்தின் மேலே தூங்குகின்றவனைப் போன்று, உலகமெலலாம் நன்மையிலே பொருந்தும்படி யோக நித்திரை செய்கின்ற சர்வேசுவரன் விரும்பாத இந்தச் சரீரத்தால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம். (9)

உடல் வலிமையில் குறைவில்லாத அசுரர் கூட்டங்கள் உயிர் நீங்கிய மலைத்துண்டுகள் கிடந்தனபோலத்துண்டங்கள் பலவாகத் துணித்து மகிழ்ந்த. மிகப் பெரியகங்கையைத் தரித்த சடையாகிய முடியையுடைய கிவயெருமான் ஒரு பக்கத்திலே ஓப்பில்லாதபடி விரும்பி வசிக்கின்ற திருமேனியையுடைய எம்பெருமான் விரும்பாத என்னுடைய இந்த உயிரால் யாதொரு பயனையும் உடையோம் அல்லோம் (10)

(3) **ஆருயிரின் ஏற்றத்தை எம்பெருமான் காட்டக் கண்டு ஆழ்வார் பேசுதல்:** இது 'கண்கள் சிவந்து' (8.8) என்ற திருவாய் மொழித் திருப்பதிகத்தால் விளக்கப் பெறுகின்றது.

திருக்கண்கள் செந்நிறத்தையடைந்து பெருத்திருப்பனவாக, திருப்பவளமும் சிவந்து கனிந்திருக்க, உள்ளே

வெள்ளியபற்களையுடைய விளங்குகின்ற பிரகாசத்தையும், விளங்கி அசைகின்ற கரகுண்டலத்தை உடையவனும், மேகம் போன்ற திருநிறத்தையுடையவனும், ஒளி வீசுகின்ற திருமுடியையுடையவனும், நான்கு தோள்களை யுடையவனும், வளைந்தவில்லையுடையவனும், பிரகாசம் பொருந்திய சங்கு கதை வாள் சக்கரம் என்ற இவற்றை யுடையவனுமான தப்பற்ற எம்பெருமான் அடியேன் மனதில் எழுந்தருளியுள்ளான். (1)

அண்டத்திற்கு உள்ளே இருக்கும் எல்லாப் பொருள் கட்கும் அந்தர்யாமியாக இருப்பவனும், அண்டத்திற்குப் புறத்தில் இருக்கும் எல்லாப் பொருள்கட்கும் அந்தர்யாமி யாக இருப்பவனும், இதுதான் எல்லா வகையாலும் ஒத்த பொருள் என்று எடுத்துக் கூறத்தக்க உவமையை உடைய வன் அல்லாதவனும்,மேலானவர்களுக்கும் மேலானவனும், புதுமை சேர்ந்த வாசனையிலும் தேனிலும் உள்ள இன்பத் தினுடைய குற்றம் நீங்கின சாரமான பாகம்போல் இருக் கின்ற அழியாத ஆனந்தத்தின் பெருமையுடையவனும், ஞானத்தில் மேம்பட்டிருக்கின்ற ஒருவனுமான எம்பெரு **மான் என் ஆன்மாவிலும் உள்ளான்; என் உடலிலும் உள்ளான்.**[2] (2)

ஞானத்திலே மேம்பட்டவர்களான நித்தியசூரி களுடைய காரியங்களுக்கு எல்லாம் நிர்வாககனான ஒப்பற்றவனை, அவனது திருவருளால் கிட்டுதற் பொருட்டு என்னுடைய விருப்பமாகிற ஞானத்துக்குள்ளே அவனை இருக்கச் செய்தேன்; அவ்வாறு விரும்பியதும்

2. இதன் விளக்கம் இந்த ஆசிரியரின் முத்திநெறி (பாரி நிலையம் 184, பிரகாசம் சாலை, சென்னை-108) கடிதம் 4. பக்கம் (29—36) கண்டு தெளியலாம்.

அவனுடைய திருவருளாலேயாகும்; விஷயங்களை அறி கின்ற அறிவும் உயிரும் உடம்பும் மேலும் எல்லை இல்லாத னவான மகத்து முதலான தத்துவங்களும் மூலப்பகுதியும் ஆகியவை எல்லாம் புருஷார்த்தங்கள் அல்லாதனவாம் என்னும் அறிவினை யான் பெறும்படி நடத்தி, அதற்கு மேலும் முடியச் சென்று, நானும் தனக்குப் பிரகாரமாக இருக்கிறபடியைக் காட்டித் தந்தான். (3)

அஃறிணைப் பொருள்கள் உயர்திணைப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமானவனும், தானான தன்மை யனும், சிவனும் பிரமனும் ஆக விரிந்த ஒப்பற்ற காரண மானவனும், தேனும் பாலும் கருப்பஞ் சாறும் அமுது மாகித்தித்தித்து, என் உடலிலும் என் உயிரிலும் என் அறி விலும் பரந்து நிற்கின்ற ஆன்மாவைச் சரீரமாக உடைய வனும், நானும் தானாய் விட்டவனுமான எம்பெருமானை அறியப் பெற்றேன். (4)

நித்தியமாய் ஒப்பற்றதாய் உள்ள ஆன்மாவை எம் பெருமான் தனக்குப் பிரகாரமாகக் காட்டிக் கொடுக்கக் கண்ட என்னைப் போன்று, அந்த ஆன்மாவின் சிறப் பினை, அநுபவித்த பொருள்களின்படி என்றாதல் அநுபவிக்கப் போகும் பொருள்களின்படி என்றாதல் எத் தகைய ஞானியர்கட்கும் ஒரு சிறிதும் உணரலாகாது; வருந்தி ஒரு சிறிது உணர்ந்தாலும் அதற்குமேல் நேரே காண்டல் ஒண்ணாது; எம்பெருமான் காட்டக் கண்ட அவ்வான்ம சொரூபம் எப்படி உள்ளது? எனின்: மேலும் மேலும் ஒன்றுக்கு ஒன்று மேம்பட்டதாய், அவற்றின் தன்மை ஒன்றும் இல்லாமல் மிக நுண்ணியதாய், அவற் றோடு தொடர்பு அற்று, உலகப் பொருள்களில் வைத்து நல்லது என்றும் தீயது என்றும் அறிய அரிதாய், வேறு பட்டதாய் இந்திரிய ஞானங்கட்கு எட்டாததாய் உள்ளது. (5)

ஐம்பொறிகளால் அறியப் படுகின்ற ஐம்புல இன்பங் களைக் கடந்து சென்று கொடிய ஐந்து இந்திரியங்களை யும் அடக்கிப் பிரிக்க முடியாதவாறு பொருந்தி இருக்கிற கடத்தற்குஅரிய பெரிய எல்லை இல்லாத பிரகிருதி தத்து வத்தை ஆன்மாவைக் காட்டிலும் வேறுபட்டதாக உணர்ந்து, அதற்கு மேல் ஆன்ம சொரூபத்து அளவும் நன்கு சென்று, இன்ப துன்பங்களுக்குக் காரணமான புண்ணிய பாவங்களையும் விட்டு, அவற்றில் உள்ள ருசி வாசனைகளும் நீங்கினால், நீங்கிய அன்றே அந்தக்கணத் திலே இவ்வுலக வாழ்வினின்றும் விடுபட்டவன் ஆவான்; அவ்வாறு விடுபட்ட நிலையே ஆன்பாநுபவ மோட்ச மாகும். (6)

எம்பெருமானுக்குச் சரீரமாக மேலே கூறப்பட்ட அந்த ஆன்மாவின் அநுபவமே மோட்சமாகும்; அம் மோட்சத்தை அடைதலால் உண்டாகும் இன்பமும் அதுவேயாம் என்று இப்படித் தெளிந்து, எந்தப் பொருள் களிலும் ஆசையில்லாமல் அவற்றில் ருசி வாசனைகளும் இல்லாதவர்களானால் அதுவேதான் மோட்சம்; மோட்ச இன்பமும் அதுவேயாம்; இப்படித் தெளியாது, மோட்சம் என்பது யாது? மோட்ச இன்பம் என்பது யாது? என்று கலங்கினவர்கள், என்றும் கலங்கினவர்களே ஆவர். (7)

இறந்தார் இறந்தார் இறந்தார் என்று வீட்டில் உள்ள வர்களும் வெளியில் உள்ளவர்களும் அந்த நிலையிலே ஒன்றாகக் கூடி அழுது கட்டிக் கொள்ள, தாம் உடலை விட்டுப் பிரிகின்ற காலத்தில் உன்மத்தரைப் போன்று நெஞ்சு கலங்க, அதனால் ஆசையானது மிகமிகப் பெருகுங் காலத்தில் கலக்கம் அற்றுத் தெளிவு பிறந்து எம்பெருமா னிடத்தில் பொருத்தம் உண்டாகி அப்பெருமான் பக்க லிலே மனம் கூடினால் நல்ல வாய்ப்பு ஆகும். (8)

சீவாத்ம சொரூபமும் பரமான்ம சொரூபமும் ஒன்றாகப் பெற்றால் நல்ல வாய்ப்புத்தான்; ஆயின்,

பொருத்தமில்லாத பொருள்கள் இரண்டு ஒன்றாகக் கூடுமேயானால் சீவான்ம சொரூபமும் ஆடுபுட்கொடி ஆதிமூர்த்தியின் சொரூபமாக ஆகக் கூடும்? அது இன்று; ஆதலால் அந்த சீவான்ம சொரூபம் சீவான்ம சொரூப மாகவே இருக்கும்; (பரமான்ம சொரூபம் ஆகாது). தம் மனம் சென்றது ஒரு வகையாலே மோட்சம் என்பது ஒன்றனைக் கற்பித்துக் கொண்டு சம்சாரத்தில் உழன்று திரியும் யோகிகளும் முக்காலத்திலும் உளராய் உள்ளனர்; இலலாமல் இலர். (9)

அடியார்களுக்கு 'இலர்' என்னாதபடி உளராய் இருப்ப வரும், அடியார் அல்லாதார்க்கு 'இலர்' என்று சொல்லலாம்படியே உளராய் இருப்பவருமான எம் ஒருவர் உளர்; அவ் இறைவர் வந்து என் மனத்திலே நிததிய வாசம் செய்கின்றார்; ஆதலால் வளர்பிறைக்கு இருப்பது போன்ற வளர்ச்சியும் தேய்பிறைக்கு இருப்பது போன்ற குறைவும் உடையதாகிச் சூரியனும் இருளும் போன்று மாறி மாறி வரக் கூடியதான ஞானத்தையும் அஞ்ஞானத்தையும் அழித்தோம். (10)

(4) **தலைவியின் உண்மைக் காதலைத் தோழி தாய் மாருக்கு எடுத்துரைத்து அயல் மணம் விலக்கல்:** இது திருவாய்மொழியின் கருமாணிக்க மலை (8.9) என்பதால் விளக்கப்பெறுகின்றது. (8.8) திருவாய்மொழியில் எம்பெரு மானைத்தவிர வேறு ஒருவருக்கும் உரிய எல்லாம் ஆன்ம சொரூபம் விளக்கப்பெற்றது, அந்த அடிமை இன்பத்தாலே மேலும் அன்பு சுரந்து அதன் பரவசத்தாலே தாமான தன்மை அழிந்து ஒரு பிராட்டியின் நிலையை அடைந்து (ஆழ்வார்) தம்முடைய நிலையை அந்யாப தேசத்தாலே[3] பேசி இனியர் ஆகின்றார் (தோழி கூற்றாக).

3. அந்யாபதேசம்—மாற்றிச் சொல்லுதல்—வேறு வகையில் பேசுதல்.

மேல் திருவாய்மொழியில் அவனுக்கே அடிமையாக இருத்தல் என்னும் தன்மை சொல்லிற்று; இத்திருவாய் மொழியில் பிறர்க்கு உரியனாய் இருத்தலும், தனக்குத் தானே உரியனாய் இருத்தலும் ஆகிய இரண்டு பேறும் அன்று என்கிறது.

கரியதாகிய ஒரு மாணிக்க மலைமேலே தெளிந்த தடாகத்தில் பரப்பு மாறத் தாமரைகள் மலர்ந்தாற் போலே, திருமார்பும் திருவாயும் திருக்கண்களும் திருக் கைகளும் திருஉந்தியும் திருவடிகளும் தரித்திருக்கின்ற சிவந்த திருப்பீதாம்பரமும் உடைய உபகாரகனும் திருமாலும், எம்மானும, செழுநீர் வயல் சூழ்ந்த குட்ட நாட்டிலேயுள்ள திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கின்ற அருமாயனும் ஆன எம்பெருமானது திருப்பெயரை அல்லா மல் வேறு ஒரு வார்த்தையும் பேசுகின்றாள் இலள்; அன்னைமீர் இதற்கு என் செய்கேன்? (1)

தாய்மார்களே! அழகிய மாமேரு மலையின் மேலே சஞ்சரிக்கின்ற, நெருங்கிச் சூழ்ந்த ஒளியையுடைய சூரியனையும் அப்படியே ஒளியையுடைய பலவகைப் பட்ட விண்மீன்களையும் போலே, மின்னுகின்ற நீண்ட திருமுடி யையும் ஆரங்களையும் பல வகைப்பட்ட ஆபரணங்களை யும் தரித்திருக்கின்ற எம்பெருமான் எழுந்தருளியிருக் கின்ற, புன்னை மரங்கள் நிறைந்த அழகிய சோலைகள் சூழ்ந்த திருப்புலியூர் என்னும் திவ்விய தேசத்தை இவள் புகழ்கின்றாள்; இதற்கு நான் என் செய்வேன்? (2)

அலைகள் மோதுகின்ற தண்ணீரையுடைய ஒரு கடல், நெருப்புக் கொளுத்தி எங்கும் விளங்குகின்ற தீக்கொழுந் தோடு செல்வதைப் போன்று, செழுமையான கிரணங் களையுடைய சக்கரம் முதலான புகழப்படுகின்ற போர் செய்கின்ற ஆயுதங்களை ஏந்திக்கொண்டு போரிலே புக்கு அசுரர்களை அழித்தவனான எம்பெருமான் எழுந்தருளி

யிருக்கின்ற விளங்குகின்ற அழகிய நீண்ட மாடங்கள் உயர்ந்து தோன்றுகின்ற திருப்புலியூர் என்னும் திவ்விய தேசத்தின் வளத்தை இவள் இரவும் பகலும் இடைவிடாது புகழ்கின்றாள் (3)

ஊரின் வளப்பத்தைக் காட்டுகின்ற சோலையும் கரும்பும் பெரிய செந்நெற்பயிர்களும் சூழ்ந்து ஏர்களினுடைய வளப்பம் விளங்குகின்ற குளிர்ந்த வயல்களையுடைய குட்ட நாட்டிலே உள்ள திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கின்ற, குணங்களின் நன்மை முழுதும் செயலிலே விளங்கும்படி மூன்று உலகங்களையும் உண்டு உமிழ்ந்த தேவபிரானுடைய அழகிய திருப்பெயர்களைக் கிளர்த்தியோடே இன்று சொல்லுகின்றாள்; அதனைத் தவிர்ந்து, இந்தப் புனை இழை வேறு ஒரு வார்த்தையையும் சொல்லுகிறாள் இலள். (4,

ஆபரணங்களை அணிந்து கொண்டிருக்கின்ற அலங்காரமும் ஆடையை உடுத்திக்கொண்டிருக்கின்ற அழகும். வடிவிலே பிறந்திருக்கும் புதிய ஒளியும் நின்று நினைக்கப் புக்கால் இவளுக்கு இது நினைக்கக் கூடிய தன்மையது அன்று; நீர்ச்சுனைகளிலே பெரிய தாயரை மலர்கள் மலர்கின்ற குளிர்ந்த திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கின்ற முன்னோன், மூன்று உலகங்களையும் ஆளுகின்றவன்; உபகாரகன் ஆகிய எம்பெருமானுடைய திருஅழகிலே மூழ்கினாள். (5)

கடல் போன்ற திருநிறத்தையுடைய கண்ணபிரானுடைய திருஅருளிலே எப்பொழுதும் மூழ்கித் திருஅருள்களையும் அடைந்தமைக்கு அடையாளம் மறைக்க ஒண்ணாதபடி உள்ளன; திருவருளைச் செய்வதற்காக அவன் சென்று தங்கி இருக்கின்ற குளிர்ந்த திருப்புலியூர் என்னும் திவ்விய தேசத்தில் திருஅருளாலே வளர்கின்ற பாக்குமரத்தினது சிறந்த பழத்தைப் போன்று உள்ளது இப்பெண்பிள்ளையினுடைய சிவந்த திருப்பவளம். (6)

மெல்லிய இலைகளையும் அழகிய வளப்பத்தையும் உடைய வெற்றிலைக் கொடி தழுவ, அதனாலே பருத்த இளமை பொருந்திய அடியையுடைய பாக்கு மரங்களின் அருகிலுள்ள பெரிய இலையையும் மடலையுமுடைய வாழை மரங்களினுடைய இனிய கனிகள் சூழ, அதனால் வாசனை வீசிக்கொண்டு, இலைகளையுடைய புல்லாகிய தென்னை மரங்களின் நடுவில் தென்றற் காற்று வீசுகின்ற குளிர்ந்த திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கின்ற மிக்க செல்வ வளப்பத்தையுடைய கண்ணபிரானது திருவடிகளைப் பெண்ணானவள் அடைந்தாள். (7)

இவளுக்கு இருக்கும் மடப்பத்தைத் தாய்மாராகிய உங்கட்கு எவ்வகையில் சொல்லுவேன்? மிகுந்த செல்வத்தையுடைய பார்ப்பனர்கள் யாகங்களிலே ஓமம் செய்கின்ற நெய்யால் எரிகின்ற நெருப்பினின்றும் புறப்படுகின்ற மிக்க புகையானது சென்று, திடமான ஆகாயத்திலே உள்ள தேவலோகத்தை மறைக்கின்ற குளிர்ந்த திருப்புலியூரில் எழுந்தருளியிருக்கின்ற படத்தையுடைப் பாம்பினைப் படுக்கையாகவுடைய எம்பெருமானது திருப்பெயரை அல்லாமல் வேறு ஒன்றையும் இவள் கூறாள். (8)

குளிர்ந்த நீர்போல் இருக்கின்ற நிறத்தையுடைய கண்ணபிரான் எழுந்தருளியிருக்கின்ற, எங்கும் பரந்து கலந்து மிக்கிருந்துள்ள சாமவேதத்தை ஓதுகின்ற பார்ப்பனர்களின் ஒலியானது கடல் ஓசைபோன்று நிலை பெற்று ஒலிக்க, முதலைகள் தங்கியிருக்கின்ற குளங்கள்தோறும் பெருமை பொருந்திய தாமரைகள் திலை விளக்கு எரியுமாறு போன்று மலர்கின்ற, கட்டளைப்பட்டிருக்கின்ற வயல்கள் சூழ்ந்த திருப்புலியூர் என்னும் திவ்விய தேசத்தினது புகழை அல்லாமல் வேறு ஒன்றையும் எக்காலத்திலும் இவள் நின்று பேச மாட்டாள். (9)

இவள் அடைந்தது, மலைகள் போன்று பெரிய அழகிய மாணிக்கங்கள் பதித்த மாடங்கள் மாளிகைகள் இவற்றினுடைய திரள்கள் மிகுந்து, தெற்குத் திக்கிற்கே திலகத்தைப் போன்ற குட்டநாட்டுத் திருப்புலியூரில் நின்ற மாயப்பிரானுடைய திருஅருளேயாம்; அஃது அல்லாமல், இவள் சரீரம், அழகிய குளிர்ந்த திருத்துழாயினது வாசனையை வீசுவதற்கு வேறு ஒரு காரணம் யாது உளது? (10)

## திருப்பாவை

'புள்ளுஞ்சிலம்பின காண்' (6) என்ற பாசுரம் முதல், 'எல்லே இளங்கிளியே' (15) என்ற பாசுரம்வரை உள்ள பத்துப் பாசுரங்கள் பள்ளி உணர்த்துவதையே பிரதானமாகக் கொண்டவை. இவை ஆன்மாவின் இயல்பான பகவதநுபவத்தையும், உறக்கமாகிய உபாய விரோதி சொரூபத்தையும் காட்டுவன. பரத்துவ திருக்குணம் மாத்திரமே விளங்கும் இடமான பரமபத நாதனை அநுபவிக்கப் பல கோடி நூறாயிரவர் திரளும்போது எல்லாத் திருக்குணங்களும் ஒருங்கே விளங்கும் இடமான கண்ணனை அநுபவிக்கக் கூட்டம் அதனிலும் விஞ்சி இருக்கவேண்டாவோ என்பதைக் காட்டுவது. பரமபோக்கியமான ஒரு பொருளை ஒருவனாக அநுபவிக்கலாகாது என்றும், பத்துப் பேரோடு அநுபவிக்க வேண்டும் என்பதும் சாத்திர விதி.

பெருங்காற்றில் அல்லது பெரு வெள்ளத்தில் இழியுமவர்கள் பெருந்திரளாக இழியுமாப்போலே எம்பெருமான் திருக்குணங்களில் இழியுமவர்கட்கு 'காலாழும் செஞ்சழியும் கண்சுழலும்' [பெரிய திருவந்:34) என்றும்; 'செஞ்சொற்கவிகாள்! உயிர்காத் தாட்செய்மின்!' (திருவாய்.10.4.1) என்று நம்மாழ்வார் அருளிச் செய்தபடி இழிந்தாரைக் குமிழ் நீரூட்டவல்ல ஆழியான் என்றும்,

ஆழ்மோழையில்' (பெரியாழ்.திரு.) என்று பெரியாழ்வார் அருளிச்செய்தபடி பெரு வெள்ளமான இவ்விஷயத்தில் பெருவெள்ளம் அவசியம் என்றும் கருதினார்கள் ஆயச் சிறுமிகள்.

நம்மாழ்வார் திருவாய்மொழியிலும் அடியார்குழாய் களை உடன் கூடுவதென்றுகொலோ (திருவாய் ) என்று பகவதர் கூட்டத்தில் சேரப் பெறுவதையே புருஷார்த்தமாகக் கூறி முடிவிலும் "வந்தவர் எதிர் கொள்ள மாமணி மண்டபத்து, அந்தமிழ் பேரின்பத்து **அடியரோடிருந்தமை**" (திருவாய்.10.9:11) என்று பேற்றி னையே தாம் பெற்றதாகக் கூறியிருப்பதனால் பகவதநுப வத்தைக்காட்டிலும் பாகவதர் கூட்டத்தில் சேருவதே பரம புருஷார்த்தம் என்று தேறுதலால் இங்ஙனம் பத்துப் பாசு ரங்கள் அமைந்தது மிகப் பொருத்தம்.

கிருஷ்ணாநுபவத்தில் அனைவர்க்கும் அவா ஒத்திருக்கும்போது சிலர் எழுப்பச் சிலர் உறங்குவது அவாவிற்குக் குறைபோல் தோன்றுகிறதே எனின்: கண்ண பிரானது சேஷ்டிதங்களும் திருக்குணங்களும் இராமசரங் கள்போல், நஞ்சுண்டாரைப்போல் சிலரை மயங்கப் பண்ணும்; சிலரை இருந்தவிடத்தில் இருக்க வொட்டாமல் துடிக்கப் பண்ணும்; ஆகையால் அவாவிற்குக்குறை இல்லை. உள்ளே கிடப்பவர்கள் மயங்கினவர்கள்களின் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள்; வெளியே எழுப்புபவர்கள் துடிப்பவர்களின் கூட்டத்தைச் சேர்ந்தர்கள். ஆகவே அனைவரும் பகவதநுபவத்தில் ஈடுபட்டவர்களே என்று கூறுவதில் தட்டில்லை.(6)

"சர்வசேஷியான எம்பெருமான் சேஷபூதர் இருக்கு மிடத்திற்கு வந்து அருள் புரியக்கூ கடமையுடையவன்." அவன அங்ஙனம் செய்யாதொழியில் நாம், நம் சொருபத் தைக் குலைத்துக் கொண்டாகிலும் அவன் இருக்குமிடத்

திற்குச் சென்று சேவித்தால், அவன் 'ஆ! நம் காரியத்தை நாம் செய்யத்தவறினோமே!' என்று தான் கழிவிரக்க முற்று நம் காரியத்தைச் செய்து தலைக்கட்டுவன; எல்லோருமாகத் திரண்டு போகலாம், வா'' என்று அழைக்கின்றனர். (8)

இங்ஙனம் பத்துப்பாசுரங்களால் பத்துப் பெண்களை உணர்த்தியபடியைக் கூறியது-திருவாய்ப்பாடியிலுள்ள பஞ்சலட்சம் குடிப் பெண்களையும் உணர்த்தியதற்கு உபலட்சணமாகும்., இவற்றால் ஆயமகளின் (ஆன்மாவின்) இயல்புகளைச் சொல்லப்பட்டதை நினைத்து மகிழலாம்.

# 4. ஆன்மா அடையும் பயன்கள்

ஆன்மா அடையும் பயன்களாக தர்மம், அர்த்தம், காமம், ஆன்மாநுபவம், பகவதநுபவம் என்னும் ஐந்து பேசப்பெறுகின்றன. இவற்றையும் விளக்குவோம்.

1. தர்மம்: தர்மம் என்பது அறச் செயல்களாகும்.

வீடு தோறும் கலையின் விளக்கம்
  வீதிதோறும் இரண்டொரு பள்ளி
நாடு முற்றிலும் உள்ளன ஊர்கள்
  நகர்க ளெங்கும் பலபல பள்ளி
........................................
இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்
  இனிய நீர்த்தங்கள் சுனைகள் இயற்றல்
அன்ன சத்திரங்கள் ஆயிரம் வைத்தல்
  ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
  பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்[1]
........................................

என்பன போன்ற அறச்செயல்களைச் செய்வித்தலாகும். இவை பிராணிகட்கும் ஏழைக்களுக்கும் பிறர்க்கும். பயன் படுவனவாகும்.

2. அர்த்தம்: வடமொழிச் சொல்; பொருளைக் குறிக் கும். ஒருவர் தாம் மேற்கொள்ளும் தொழில்களில் நியாய வழிகளில் பொருளைத் திரட்டுதல் வேண்டும்.

---

1. பா. க. தே. பா. வெள்ளைத் தாமரை 6, 9.

**அறன்ஈனும் இன்பமும்ஈனும் திறன் அறிந்து**
**தீதின்றி வந்த பொருள்** (754)

என்ற வள்ளுவத்தின் ஒளியைக் கண்டு பயன்பெறுதல் வேண்டும். இவ்வாறு சேமித்த பொருளைக் கொண்டு நல் வழிகளில் செலவிடுதல் வேண்டும். மேற்குறிப்பிட்ட அறவழிகளில் செலவிடுதல் சிறப்பாகும்.

3. **காமம்:** 'காமம்' என்றசொல் ஆசை என்றுபொருள் படும். இன்று காமம் என்ற சொல் மங்கையர்மீது கொள்ளும் ஆசையை மட்டிலும் குறிப்பிடுகின்றது. இந்த ஆசை இவவுலகு சம்பந்த முடையது (ஐஹலௌகிகம்), மறு உலகு சம்பந்த முடையது (பரலௌசிகம்) என இருவகைப் படும். முன்னது இன்பம் நல்கும் பொருள்களிலும் இந்திரிய சுகத்தைத் தரும் பொருள்களிலும் ஆசை வைப்பதாகும். பின்னது, சுவர்க்கம் முதலான உலகங்களில் சென்று பசி தாகம் தொடக்கமானவைகள் அற்று மண்ணுலகில் செய்த நல்வினைகளுக்கீடாக அமுதம் பருகி அப்சர மகளிருடன் இன்பம் அநுபவித்தலாகும். இந்திரியபோகம் முதலியவை இதில் அடங்கும்.

4. **ஆன்மாநுபவம்:** ஆன்மாவை அநுபவித்தலாகும். இது கேவலர்களின் செயலை யொத்தது. ஆன்மாவை அநுபவிப்பவர்கள் பரமபதத்தில் புறப்பகுதிகளில் வசிப்ப வர்களாச் சொல்லப் பெறுவர்.

5. **பகவதநுபவம்:** 'இந்த உலகிலிருக்கும்போது எம் பெருமானை அநுபவித்தலாகும்.

**வாய்அவனை அல்லது வாழ்த்தாது; கைஉலகம்**
**தாயவனை அல்லது தாம் தொழா; பேய்முலைநஞ்சு**
**ஊண்ஆக உண்டான்உருவொடு பேர்அல்லால்**
**காணா கண் கேளாசெவி.** (முதல். திருவந். 11)

என்பது பொய்கையாழ்வாரின் இறையநுபவம்.

**மகிழ்ந்தது சிந்தை, திருமாலே! மற்றும்**
**மகிழ்ந்தது, உன்பாதமே போற்றி; மகிழ்ந்தது**
**அழல்ஆழி சங்கம் அவைபாடி, ஆடும்**
**தொழில்ஆகம் சூழ்ந்து துணிந்து.**

*(இரண். திருவந். 32)*

*என்பது பூதத்தாழ்வாரின் பரவதநுபவம்.*

**உய்த்துஉணர்வு என்னும் ஒளிகொள் விளக்குஏற்றி**
**வைத்து அவனை நாடி வலைப்படுத்தேன்; மெத்தெனவே**
**நின்றான் இருந்தான் கிடந்தான்என் நெஞ்சத்து**
**பொன்றாமை மாயன் புகுந்து.**

*(மூன். திருவந். 94)*

*என்பது பேயாழ்வாரின் இறையநுபவம்.*

**இன்றுஆக, நாளையே ஆக, இனிச்சிறிது**
**நின்றுஆக நின்அருள் 'என்பாலதே; நன்றாக**
**நரன்உன்னை அன்றிஇலேன் கண்டாப்; நராணனே!**
**நீ என்னை அன்றி இலை.**

*(நான். திருவந் 7)*

*என்பது திருமழிசைபிரானின் பகவதநுபவம்.*

**தேனும் பாலும் கன்னலும் அமுத ஆகித் தித்திப்ப**
**யானும் எம்பி ரானையே ஏத்தினேன்**

*(திருவாய் 4.3: 10)*

*என்பது நம்மாழ்வாரின் பகவதநுபவம்.*

*பரமபதத்தில் பரவாசுதேவனுக்குக் கைங்கரியம் செய்து கொண்டிருத்தலும் பகவதநுபவம் ஆகும்.*

சூழ்ந்துஅகன்று ஆழ்ந்துஉயர்ந்த முடிவில்
பெரும்பா ழேயோ!
சூழ்ந்துஅத னில்பெரிய பரநன்
மலர்ச்சோ தீ!ஓ!
சூழ்ந்துஅத னில்பெரிய சுடர்ஞான
இன்ப மேயோ!
சூழ்ந்துஅத னில்பெரிய என்அவா
அறச்சூழ்ந் தாயே. (கூ 10.10: 10)

என்பது நம்மாழ்வார் இத்தகைய அநுபவத்தை இந்த உலகினில் கண்டதாகும்.

## திருவாய்மொழி

திருவாய்மொழியில் ஆன்மா அடையும் பயன்கள் 'எம்மா வீடு' (2,9), 'ஒழிவில் காலமெல்லாம்' (3.3) 'நெடுமாற்கு அடிமை' (8.10), 'வேய்மரு' (10.3) என்ற நான்கு திருவாய்மொழிகளில் நுவலப்பெற்றுள்ளன.

(1) புருஷாத்த நிர்ணயம்: 'எம்மா வீடு' (2.9) என்ற திருப்பதிகத்தில் இது காட்டப் பெறுகின்றது.

கையையுடைய யானையினது துன்பத்தை நீக்கிய உபகாரகனே! சுவாமியே! எத்தகைய பெரிய மோட்சத்தின் தன்மையைப் பற்றியும் பேசோம்; நினது சிவந்த பெருமை பொருந்திய திருவடித் தாமரைகளை என் தலையின்மீது விரைவில் சேர்க்க வேண்டும்; அடியேன் விரும்புவது இப்பேறேயாகும். (1)

என்னுடைய, கருமை படிந்த ஒளியையுடைய மாணிக்கம் போன்ற நிறத்தையுடைய எந்தையே! எப்பொழுதும் யான் உன்னிடத்தில் கேட்பது இஃதேயாகும்; எது? எனில்: தனது முயற்சி கொண்டு அடையமுடியாத

உனது திருவடிகளை யான் அடையும்படி ஞானமாகிய லகையைக் கொடு; காலம் நீட்டித்தல் செய்யற்க. (2)

'கொடிய பாவங்களைச் செய்யாதே' என்று அருளைச் செய்கின்ற, என்னுடைய, கையிலே தரித்திருக்கின்ற சக்கரத்தையுடைய கண்ணபிரானே! கோழையானது கழுத்தை அடைக்கின்ற காலத்திலும் நின் திருவடிகளை மறவாமல் ஏத்தும்படி எனக்கு அருள் செய்க. (3)

'எல்லாக் காலத்திலும் எனக்கே அடிமை செய்வாய்' என்று என் மனத்தின்கண் வந்து பிரிதலின்றி நிலை பெற்று நின்று தனக்கே நான் உரியனாம்படி என்னை ஏற்றுக் கொள்ளும் இதுவே எனக்குத் தகுதியாகக் கிருட்டிணனிடத்தில் யான் விரும்பிக் கொள்ளுகின்ற பயனாகும், (4)

யானும் சிறப்புடைய மோட்சம் என்ன, சுவர்க்கம் என்ன, நரகம் என்ன இவற்றை இறக்கின்ற காலத்தில் பொருந்துக; பொருந்தா தொழிக; பிறப்பில்லாத பல பிறவிகளையுடைய பெருமானை மறதி என்பது சிறிது மில்லாமல் எப்பொழுதும் அநுபவிப்பேன். (5)

மகிழ்ச்சியையுடையவர்களான தேவர்கள், காணப் படுகின்ற அசித்து, கண்களால் காண முடியாத ஆன்மாக்கள் (சித்து), மகிழ்ச்சியைக் கொள்ளச் செய்கின்ற ஒளியுருவமான சந்திர சூரியர்கள் ஆகிய இப்பொருள் களாக விரிந்திருக்கின்ற இறைவனே! மகிழ்ச்சியையுடைய மனமும் சொல்லும் தொழிலும் ஆகிய இவற்றைக் கொண்டு என்றும் மகிழ்ச்சியுடன் கூடி நான் வணங்கும் படி நீ எழுந்தருள வேண்டும். (6)

உனது அழகிய திருவடித் தாமரைகளில் மீளாமல் யான் வந்தடையும்படி தாராதவனே! உன்னை என்னுடைய மனத்தில் வைக்குமிடத்தில் ஒரு நாளும்

அமையாதபடி இருக்கின்றவனே! என்னிடத்தில் எல்லாக் காலத்திலும் எல்லா நிலைகளிலும் வர வேண்டும். (7)

மேம்பட்டவர்களாய் வேதங்களையறிந்து குற்ற மற்றவர்களாயுள்ள பெரியோர்கள் நுகர்கின்ற, என்னுடைய, வெல்லப்பாகு தோய்ந்த கனியே! நீ எக் காலத்திலும் எனக்குத் தந்தையாய் என் மனத்தில் நிலை பெற்றிருப்பாயேயானால், யான் உன்னிடத்தில் எக் காலத்திலும், வேறு ஒரு பொருளையும் விரும்ப மாட்டேன். (8)

என்னையறியாமல் கேட்டினை விளைத்துக் கொண்டவன் யானே; 'நீயும் உன் உடைமையும்' என்றிருத்தலின்றி, 'நானும் என்னுடைமையும்' என்று வகுத்துக் கொண்டு இருந்தேன்; யானும் நீயே யாவாய், என்னுடைமையும் நீயேயாவாய், நித்திய சூரிகள் துதிக்கின்ற, எனது நித்திய சூரிகளின் தலைவனே! (9)

இடபங்கள் ஏழனையும் வென்று, அழகு கொண்ட இலங்கையை நீறாகும்படி செய்த மிக்க ஒளியையுடைய பரஞ்சோதி' என்னை நம்பாதே, விரைவில் உனது அழகிய திருவடிகளில் சேர்ப்பாய்; உன்னைவிட்டுத் தனியே போகும் படி எப்பொழுதும் விடாதே. (10)

(2) **திருவேங்கடமுடையானுக்கு அடிமை செய்ய வேண்டும் எனல்:** இஃது 'ஒழிவில் காலம் எல்லாம்' (3-3) என்ற திருப்பதிகத்தால் தெளிவாகின்றது,

மிக்க ஒளியோடு[1] கூடிய அருவிகளையுடைய திரு வேங்கடத்து எழுந்தருளியிருக்கின்ற அழகினைக்

---

1. "வானார் சோதி" (பரமபத நாதன்) பகல் விளக்குப் பட்டிருக்கும்; நீலாழிச்சோதி (பாற்கடல் நாதன்) கடல் கொண்டு கிடக்கும்; வேங்கடத்து எழில்கொள் சோதி குன்றத் திட்ட விளக்காயிருக்கும்"—ஈடு.

கொண்ட ஒளியுருவனான எந்தை தந்தை தந்தைக்கு எல்லையில்லாத காலமெல்லாம் எல்லாவிடத்திலும் உடனிருந்து ஒன்றும் குறையாதபடி எல்லா அடிமைகளையும் நாம் செய்ய வேண்டும். (1)

நித்திய சூரிகள் சேனை முதலியாரோடும் வந்து தூவி வணங்குகின்ற பூக்கள் வாசனை வீசுகின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற, முடிவில்லாத புகழையுடைய, நிலமேகம் போன்ற அழகையுடைய அண்ணல் என் குலத்திற்கு முதல்வனாவான். (2)

பெருமையுடையவன், ஆச்சரியமான குணங்களையும் செயல்களைமுடையவன், அழகினைக் கொண்ட செந்தாமரையைப் போன்ற திருக்கண்களையுடையவன், சிவந்த கனி போன்ற திருவதரத்தையும் கரிய மாணிக்கம் போன்ற வடிவினையுமுடையவன், தெளிந்த நிறைந்த தண்ணீரையுடைய சுனைகள் பொருந்திய திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற அளவிடற்கரிய இயற்கையில் அமைந்த புகழையுடைய, நித்தியசூரிகட்குத் தலைவனாவான். (3)

தாழ்ந்தவனாய் குணங்கள் சிறிதும் இல்லாதவனான யான் இறைவனைப் பார்த்து நித்தியசூரிகட்குத் தலைவன் என்று சொல்லுவேன்; அப்படிச் சொன்னால் அஃது என்னிடத்தில் அன்பை வைத்த மேலான சுடரையுடைய ஒளியுருவனான திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற எம்மானுக்குப் புகழாகுமோ? ஆகாது. (4)

வேதங்களையறிந்த அந்தணர்களுடைய எல்லா வேதங்களாலும் சொல்லிப்படுகின்ற அமிழ்தம் போன்ற இனிமையையுடையவனை, குற்றமற்ற புகழையுடைய திரு

வேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற பேரொளி யுருவனாகி எல்லா உலகத்தாராலும் தொழப்படுகின்ற முதற்காரணப் பொருளாக விளங்குகின்ற வடிவை யுடையவன் என்று கூறினால் பெருமையாகுமோ? அன்று. (5)

திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்றவர்க்கு வணக்கம் என்று சொல்லுதல் எளிதில் செய்யக்கூடிய காரியமாகும்; அதனைச் சுமந்தவர்க்கு, தீர்க்கக் கூடிய கடன்களும் சரீர சம்பந்தம் காரணமாக வருகின்ற நல்வினை தீவினைகளும் வெந்து அழிந்துவிடும்; அடியார் களாகிய தாங்கள், தங்கட்குத் தக்கதான கைங்கரியத்தையே செய்வார்கள். (6)

நித்திய சூரிகள், சேனைமுதலியாரோடும் வந்து சிறந்த பூக்களையும் நீரையும் விளக்கையும் வாசனைப் புகையையும் தாங்கிக் கொண்டு வணங்கி எழுகின்ற திருவேங்கடம் நமக்கு ஒத்ததாகயுள்ள வீடுபேற்றினை நல்கக் கூடிய பெரிய மலையாகும், (7)

கோவர்த்தனம் என்னும் மலையைத் தூக்கிக் குளிர்ந்த மலையினின்று பசுக்களையும் ஆயர்களையும் காத்தவன்; அக்காலத்தில் உலகத்தை அளந்த உபகாரகன்; எல்லார்க்கும் மேலானவன்; இவ்வாறான இறைவன் சென்று தங்கியிருக்கின்ற திருவேங்கடமலை என்னும் ஒன்றையுமே வணங்க நம்முடைய வினைகள் நீங்கும். (8

நோய்களை அழியும்படி செய்கின்றவனான திருவேங் கடத்தில்இருக்கின்ற எம்பெருமானது அன்றலர்ந்ததாமரை மலர்போன்ற திருவடிகளை வாயிலும் மனத்திலும் வைப் பார்க்கு முதுமை பிறப்பு இறப்பு இவைகள் நீங்கும்.(9)

படத்தையுடைய அனந்தாழ்வானைப் படுக்கையாக வுடைய இறைவன் எழுந்தருளியிருக்கின்ற திருவேங்கடத் தின்மீது மொய்த்த சோலைகளையும் நெருங்கிய பூக்கள் பொருந்திய தடாகங்களையுமுடைய திருத்தாள் வரையை, உங்கட்கு ஏற்படுத்திய ஆயுளின் முடிவு எல்லையைச் சென்று குறுகி எய்த்து இளைப்பதற்கு முன்னர் அடைமின். (10)

(3) **பாகவதர்களுக்குத் தாம் அடிமையாக இருக்கும் உண்மையை ஆழ்வார் பேசுதல்**: இது 'நெடுமாற்கு அடிமை' (8.10)[2] என்ற திருப்பதிகத்தில் விளக்கப் பெறுகின்றது'

நெடுமாலுக்கு அடிமை செய்கின்றவனைப் போன்று அவனை நான் நினைத்த அளவிலே, தடுமாற்றம் நீங்கின கொடிய நல்வினை தீவினைகள் முழுவதும் நான் அறியா மலே நீங்கின; இனிப் பெறும் பேற்றினை நினைத்தால், கொடிய பெரிய தீவினையேனான யான், அவனுடைய அடி யார்களின் திருவடிகளைச் சேர்தலே அல்லாமல், பரந்த மூன்று உலகங்களைப் பெற்றாலும் அவனுடைய அடியார் களின் திருவடிகளைச் சேர்தலாகின்ற இதனை விடுதல் என்பது ஒன்று உண்டோ? இதனை யான் சொல்லவும் வேண்டுமோ? (1)

பரந்த மூன்று உலகங்களின் செல்வத்தைப் பெற்றா லும் இந்த சம்சார சம்பந்தம் நீங்கிக் கைவல்ய சுகத்தைப் பெற்றாலும் கார்காலத்து மேகம் போன்ற திருமேனியை யுடைய எம்பெருமானது மலர்களால் அலங்கரிக்கப் பெற்ற

2. 'பயிலும் சுடர்ஒளி' (3.7) என்னும் திருவாய் மொழியைக் காட்டிலும் இத்திருவாய்மொழிக்கு வாசி (வேற்றுமை)என்? என்னில்: 'பாகவதர்கள் இறையவர் கள்' என்றது அங்கு; "பாகவதர்கள் இனியவர்கள்" என்கிறது இங்கு.

வீரக்கழல்களை அணிந்த திருவடிகளிலே அடிமை செய் தலையே பயனாகக் கொண்டு அந்த அடிமையின் மேல் எல்லையிலே தலை நின்ற பாகவதர்களுடைய அழகிய திரு வடிகளை வணங்கி இப்பிறப்பிலேயே யான் பெற்ற பயனாகிய இன்பத்திற்கு ஒக்குமோ தீவினையேனாகிய எனக்கு? (2)

வடிவிலே சிறுத்தவர்களாய் அறிவிலே பெருத்தவர் களாய் மனித வடிவாய் என்னை அடிமை கொண்டவர் களான அவன் அடியார்கள் இந்த உலகிலே சஞ்சரிந்துக் கொண்டிருக்க, (அவர்களுடைய மலரடிக்கீழ்புகுதல்) அன்றி இந்த உலகங்கள் மூன்றும் ஒருசேர நிறையும் படி யாகச் சிறிய பெரிய திருமேனியை வளரச் செய்த என் செந் தாமரைக்கண் திருகுறளனுடைய, பெருமை பொருந்திய சிறந்த வாசனையையுடைய அன்றலர்ந்த மலர் போன்ற திருவடிகளிலே புகுதலும் பாவியேனாகிய எனக்குப் பொருந்துமோ? (3)

முற்காலத்தில் மிகப் பெரிய இந்த உலகங்களை எல்லாம் உண்டு உமிழ்ந்த, சிவந்த அழகினை உடையதான பவளம் போன்ற திருவாயினையும், செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையும் உடைய என் அம்மான் பொங்கி எழுகின்ற தன் கல்யாண குணங்கள் என்வாயிலே ஆகவும், இந்திரியங்களைக் கொள்ளை கொள்ளுகின்ற. திருமேனி என் மனத்திலேயாகவும், அந்தத் திருமேனிக்குப் பொருந்திய மலர்கள் என்கையிலே ஆகவும்,ஸ்ரீவைணவர் கள் செய்யும் கைங்கரிய நெறியிலே நானும் சென்று நடக் கும்படி திருவருள் செய்தால் பரமபதம் செல்ல விரும்பாமல் இந்த உலகத்திலே சஞ்சரிக்கின்ற எனக்கு வந்த குற்றம் யாது? (4)

பாகவதர்களுடைய வழியிலேயே பட்டு நித்திய கைங் கரியத்தைச் செய்யும்படி அவன் திருவருளைப் பெற்று, எம் பெருமானின் அழகிய மல்ர் போன்ற திருவடிகளின் கீழே

சுழித்துச் கொண்டு ஒடுகின்ற சுடர்ச்சோதி வெள்ளம் என்னும்படியான பரமபதத்திலே ஆனந்தத்தையே வாழ்ச்சியாக அடைந்திருந்தாலும், இழிக்கப்பட்டுச் செல்லுகின்ற இந்தச் சரீரத்தோடே பிறந்து தன்னுடைய கல்யாண குணங்களை யான் கற்று, அவ்வநுபவத்தால் உண்டான பிரீதி சொற்களின் உருவமாக வெளிவருகின்ற கவிகளாகிய அமுதத்தை அடியார்களோடு சேர்ந்து அநுபவிக்கின்ற அநுபவத்திற்கு, மேலே கூறிய ஐசுவரிய கைவல்யங்கள் முழுதும் கூடினாலும் ஒக்குமோ? (5)

தனக்கு ஒப்பு இல்லாத, புள்ளிகள் பொருந்தியசிவந்த முகத்தையுடைய குவலயா பீடம் என்னும் யானையைக் கொன்ற, அழகிய மோதிரத்தைத் தரித்த என் அம்மானும், தம் சாதிக்கு ஏற்றதான சிவந்த தலைமயிரையும் நெருப்புப் போன்ற கண்களையும் உயர்ந்த சரீரங்களையுமுடைய அசுரர்களின் உயிர்களை யெல்லாம் கொன்று உண்டு சஞ்சரிக்கின்ற கருடப் பறவையை வாகனமாகக் கொண்டுள்ளவனுமான எம்பெருமானது பெரிய ஒப்பற்ற சிறந்த கல்யாண குணங்களை அநுபவிக்கும் அநுபவத்திற்கு மூன்று உலகங்களையும் அழித்தும் படைத்தும் செல்லுதலாகின்ற ஐசுவரிய இன்பம் ஒத்தது ஆகுமோ? (6)

ஒப்பற்ற பெரிய புகழே எக்காலத்தும் நிற்கும்படியாகத் தாஙு படைப்புக் கடவுளாகத் தோன்றி, படைப்பதற்காக நினைக்கின்ற பரப்பிரம்மாகிற பரம காரணமாய் எல்லா உலகங்களையும் உண்டாக்கின, ஒப்பற்ற பெரிய பரம்பொருளினுடைய தளிர் போன்ற மெல்லிய திருவடிகளின் கீழே புகுந்து அடிமை செய்தல் அன்று யாம் விரும்புவது; அவன் அடியார்களின் சேர்க்கையாலாகிய இன்பமே யாம் விரும்புவது; அதுவே எப்பொழுதும் எங்கட்கு வாய்க்க வேண்டும். (7)

குளிர்ந்த தண்ணீரையுடைய கடலைப் படைத்து, ஒப்பு இல்லாத தன்னுடைய பல திருவடிகளையும் தோள்

களையும் திருமுடிகளையும் பரப்பிக்கொண்டு, நீண்டு படர்ந்த பூக்களையும் கற்பகச் சோலையையும் நிறைந்த பல சூரியர்களின் ஒளியையுமுடைய மாணிக்கமலை போன்று திருக்கண் வளர்கின்றவனுடைய அடியார்களின் சேர்க்கை நங்கட்கு எப்பொழுதும் வாய்க்க வேண்டும். (8)

அடியார்களுடைய கூட்டத்திற்கு வருகின்ற கொடிய வினைகளை எல்லாம் அழிக்கின்ற சதுமூர்த்தியும், போரைச் செய்கின்ற திருவாழி திருச்சங்கு வாள் வில் தண்டு முதலிய பலவகைப்பட்ட ஆயுதங்களைத் தரித்தவனும். குமரனும், அழகிய ஐந்து பாணங்களையுடைய மன்மதனுக்குத் தந்தையுமான எம்பெருமானுக்கு அடிமைப்பட்ட குற்றம் இல்லாத அடியார்கட்கு அடியார்கள் அவர்கட்கு அடியவர்கள், அல்வடியார்கட்கு அடியார்கள் ஆகின்ற பேறேதமியேற்கு வாய்க்க வேண்டும். (9)

பெருமை பொருந்திய காயாம்பூவைப் போன்ற திருமேனியையும் நான்கு திருத்தோள்களையும் அழகிய திருவாழியையும் தரித்த திருக்கையையுமுடைய என் அம்மானுக்கு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்கின்ற அடியார்களுக்கு அடியார், அவர்களுக்கு அடியார் அவர்கட்கு அடியார், அவர்கள், எங்களுக்குத் தலைவர் ஆவர்; அந்த அடியார்கட்கே அடியவர்களாகச் செல்லுகின்ற நல்ல கொள்கையானது காலம் என்னும் ஒரு பொருள் உள்ள வரையிலும் தமியேற்கு வாய்க்க வேண்டும். (10)

**(4) 'ஆநிரை மேய்க்கச் சென்றால், பிரிவாற்றியிரோம்' என்று போக்கைத் தவிர்க்குமாறு ஆய்ச்சியர் கண்ணனை வேண்டுதல் :** இது 'வேய்மரு' (10.3) என்ற திருப்பதிகத்தால் விளக்கப் பெறுகின்றது.

மூங்கில் போன்ற இரண்டு தோள்களும் மெலியா நின்றன; என்னுடைய வருத்தத்தையும் தனிமையும்

நோக்காத விரும்பத்தக்க குயில்களும் கூவா நின்றன கூட்டமான மயில்களும் கலந்து ஆடா நின்றன; பொருந்திய இனம் ஒத்த பசுக் கூட்டங்களை மேய்ப்ப தற்கு நீ செல்லுகின்ற ஒரு பகற்காலமும் ஆயிரம் ஊழிக் காலமாக உள்ளது; தாமரை மலர்களைப் போன்ற கண் களைக் கொண்டு ஈரா நின்றாய்: கண்ணா! நீ, அருளு டையவன் அல்லை, அருளுடையவன் அல்லை.

எம்பெருமானின் பிரிவுக்கு ஆற்றாத ஆழ்வார் தமது பிரிவுத்துன்பதை வேற்றுவாயாலே பேசுகின்றார்; அஃதா வது, மங்கையரின் வாக்காகப் பேசுகின்றார் (1)

கிருட்டிணனே, நீ அருளுடையவன் அல்லை, அருளு டையவன் அல்லை; பெரிய முலைகளை நீ புணரும்தோறும் புணர்ச்சியில் அடங்காத இன்ப வெள்ளம் ஆகாயத்தையும் கடந்து அறிவும் அமிழ்ந்தும்படியாகப் பரந்து, அது கனவினைப் போன்று நீங்க, அந்த நிலையிலே மனத்தின் இடந்தோறும் உள்ளே புகுந்து, உயிரால் பொறுக்கமுடியாதபடி ஆசை பெருகுகின்றது; அந்தோ! மேலும் மேலும் உன்னைப் பிரிதற்குக் காரணமாக இருக்கின்ற பசுமேய்க்சப் போதலாகிற இது தவிர்வதாக. (2)

நீ நின் பசுக் கூட்டங்களை மேய்ப்பதற்குப் போகின்ற போக்கினால் நான் அழிவேன்; வெவ்விதாக மூச்சுவிட்டு என் உயிர் வேகா நின்றது; ஒருவரும் துணை இல்லை; யான் இறவாமல் இருந்து உன் அஞ்சனம் போன்ற திரு மேனியின் நடையாட்டத்தைக் காண்கின்றேன் இல்லை; நீ பிரிந்து போனால் இந்த ஒரு பகலும் கழிவது அன்று; தனக்குத்தானே ஒத்த கயல்மீன் போன்ற இரண்டு கண் களிலும் கண்ணீர் மேலும் மேலும் பெருகா நிற்கின்றது; இந்த ஆயர் குலத்திலே ஆயர் பெண்களாகப் பிறந்த

தண்ணியோமான எங்களுடைய இந்த தனிமை ஒழிக; ஒழிய வேண்டும். (3)

கோவிந்தா! அடிச்சியோமாகிய எங்களுடைய தனிமையையும் துணையாகிய உன்னைப் பிரிந்தவர் களுடைய துன்பத்தையும் நினைக்கின்றிலை; தொழுவத் திலே உள்ள உன்னுடைய பசுக்களையே விரும்பி எம்மைத் துறந்துபோய் அப்பசுக்களை மேய்ப்பதற்காகப் போகின் றாய்; பக்குவமான சிறந்த அமுதினுடைய இனிய காற்றின் வெள்ளமானது பாவியேனாகிய என்னுடைய மனத்தின் இடந்தோறும் புகுந்து அழுந்த, நினது சிவந்த கனி போன்ற திருவாயில் நின்றும் வருகின்ற வஞ்சகமான தாழ்ந்த வார்த்தைகளை நினையுந்தோறும் உயிர் வேகின் றது. (4)

பகல் காலம் எல்லாம் பசுக்கூட்டங்களை மேய்ப்பதற் காகச் சென்ற கண்ணபிரானே! உன்னாலே பணிவோடு பேசப் பெறுகின்ற வார்த்தைகளை நினைக்கும்போதெல் லாம் உயிரானது வேகின்றது; அரும்புகள் மலர்கின்ற மல்லிகை மலர்களின் மணத்தை வாடைக் காற்று வீசும் போக்கில் மாலைக் காலமும் வந்தது; கௌத்துவம் என் னும் இரத்தினம் அலங்கரிக்கின்ற திருமார்பில் அணிந் துள்ள முல்லை மலர்களின் மணத்தினால் என்னுடைய அழகிய முலைகள் வாசனை வீசும்படியாகச் செய்து, உன் வாயிலே உள்ள அமுதத்தைக் கொடுத்து, அழகு மிகுந்த தாமரை போன்ற திருக்கரத்தை உன் அடியவர் களான எங்களின் தலைமேலே நீ அணிய வேண்டும். (5)

உனக்கு அடியவர்களாகிய எங்களுடைய தலையின் மீது உன் கையினை நீ அணிய வேண்டும்; கடல் போன்று விடாய் நீக்கவல்ல அழகிய திருக் கண்களை உடையவனே! நீ பசு மேய்க்கப் போகின்ற செயலுக்கு நடுவில், நின் அழகிய திருவடிகளைப் பற்றுக்கோடாகக் கொண்ட,

நின் மனத்திற்கு இசைந்த பெண்களும் பலர் உள்ளனர்; அது நிற்க; உன் பிரிவில் எம்முடைய பெண்மையை ஆற்றி அடக்கி இருக்க முடியாத நிலையில் உள்ளோம்; எங்களுக்கு, கூரிய விசாலமான இரண்டு கண்களிலும் இருந்து வருகின்ற கண்ணீரும் நிற்கின்றதில்லை; மனமும் நிற்கின்றதில்லை; ஆதலால், கணப்பொழுதும் பிரிவு ஆற்றகில்லாத எங்களுக்கு, உன் பசுக்களை மேய்ப்பதற்கு நீ போகும் செலவு விருப்பமில்லாத செயலாகும்; எங்கள் உயிரும் நெருப்பினைச் சார்ந்த மெழுகினைப் போன்று உருகி வேகின்றது. (6)

எம் உயிர் நெருப்பினைச் சேர்ந்த மெழுகினைப் போன்று உருக்குலைந்து வேகின்றது; வெள்ளிய வளையும் மேகலையும் கழன்று விழவும், பரிசுத்தமான தாமரை மலர் போன்ற இரண்டு கண்களினின்றும் முத்துப் போன்று கண்ணீர் சோரவும், இரண்டு தடமுலைகளும் பசலை நிறத்தை அடையவும், தோள்கள் வாடவும், மாமணி வண்ணா! உன்னுடைய செங்கமலர் போன்ற நிறத்தையுடைய மெல்லிய திருவடிகள் நோவும் படியாக நீ சென்று, பசுக்களை விரும்பி அவற்றின் பக்கல் உண்டான விருப்பத்தாலே அவற்றை மேய்க்கின்ற காலத்தில் உன்னோடு அசுரர்கள் வந்து போர் தொடுக்கில் அங்கு என்ன நேரிடுமோ? (7)

பசு மேய்க்கும் அவ்விடத்தில் அசுரர்கள் வந்து சேர்வராயின் என்ன நேரிடுமோ என்று என் அரிய உயிர் துன்பத்திலே ஆழா நிற்கும்; ஆதலால், பசுக்களின் பின்னே செல்லேல்; ஈடுபாடும் ஆசையும் புணர்ச்சியும் உள்ளே கலந்து என்னை வருத்தும்; ஆதலால், அணைத்த என் கைகளை விட்டு அப்பாற் செல்லற்க; வசம் செய்யும் நின் தாமரைக் கண்களும் திருப்பவளமும் திருக் கைகளும் பொன்னாடையும் நான் காணும்படி காட்டிக் கொண்டு,

உன்னால் விருப்பப் படுகின்ற தளர்கின்ற நுட்பமான இடையையுடைய இளமை பொருந்திய ஆய்ச்சியராகிய பெண்களோடும் சஞ்சரித்துக் கொண்டு இவ்விடத்திலேயே இருப்பாயாக. (8)

உன்னாலே விரும்பப்படும் பெண்களோடும் கூடிச் சஞ்சரிப்பதனால் நின் திருவுள்ளத்தில் உண்டாகும் துன்பம் நீங்கி நீ இன்பம் அடையும் போதெல்லாம் நாங்கள் உகப்பு உடையோம் ஆவோம்; அதற்குக் காரணம், நீ பிறரைக் காதலிக்கும்போது பொறாமைப் படும் பெண்மையை உடையோம் அல்லோம்; ஆதலால் எம்பெருமானே! நீ ஆநிரை மேய்ப்பதற்குச் செல்லற்க; அதற்கு மேலே கம்ச னுடைய ஏவலை மேற்கொண்டு பல அசுரர்கள் நீ விரும்பும் உருவங்களைக் கொண்டு மிக அதிகமாகத் திரிவர்; அவர் கள் கைகளிறே அகப்பட்டால் அவ்விடத்தில் அவர்கட்கும் நினக்கும் மிகத் தீய போர்கள் விளையும்; என்னுடைய சொற்களை ஏற்றுக் கொள்ள வேண்டும்; அந்தோ! நின் பராமுகம் இருந்தபடி என்னே! (9)

சிவந்த கொவ்வைக் கனிபோன்ற திருப்பவளத்தை யுடைய எங்கள் ஆயர் தேவே! வலிய கையினையுடைய வரான அசுரர்கள் கம்சனாலே ஏவப்பெற்றவர்களாய், தவத்தைச் செய்கின்றவர்களான முனிவர்கள் மனம் கலங் கும்படிச் சஞ்சரிப்பார்கள்; நீயும் எப்பொழுதும் தன்னந் தனியனாக உள்ளாய்; பலராமனையும் விரும்புகின்றாய் இல்லை. அவனோடு கூடத் திரிவதும் செய்வதில்லை; இந் நிலையில், தீமைகள் உண்டாகும் என்று பலகாலும் நினைத்து என் மனம் உள்ளூற வேகின்றது; ஐயகோ! என் னுடைய சொற்களைக் கேட்க வேண்டும்; பரமபதத்தில் இருக்கும் இருப்பைக் காட்டிலும் பசுக்களை மேய்க்கும் செயலையே நீ உகக்கின்றாய். (10)

## திருப்பாவை

ஆன்மா அடையும் பலன்களாகத் திருப்பாவையில் சொல்லப் படுபவனவற்றை ஈண்டு எடுத்துக்காட்டுவோம்.

'மாலே மணிவண்ணா' (26) என்ற **இருபத்தாறாம்** பாசுரத்தில் ஆயச் சிறுமிகள் கேட்பவையே ஆன்மா அடையும் பயன்களாகும். அவர்கள் கேட்பவை: திருப்பள்ளி எழுச்சிக்குச் சங்குகள் வேண்டும்; புறப்பாட்டுக்குப் பறை வேண்டும்; பறை கொட்டிக் கொண்டு புறப்படும்போது எதிரே நின்று திருப்பல்லாண்டு பாட அரையர் வேண்டும்; பாடுவார் எங்கள் முகத்திலே விழிக்க நாங்கள் அவர்கள் முகத்தில் விழித்துக்கொண்டு போம்படி கோல விளக்குகள் வேண்டும்; நெடுந் தூரத்திலே எங்கள் திரளைக் கண்டு சிலர் வாழும்படி முன்னே பிடித்துக் கொண்டு செல்வதற்குக் கொடி வேண்டும்; புறப்பட்டுப் போகும்போது பனி தலைமேல் விழாத படிக் காக்க ஒரு மேற் கட்டி வேண்டும். சிறிய வயிற்றிலே பெரிய உலகங்களையெல்லாவற்றையும் வைத்து ஓர் ஆலந்தலிரிலே கிடந்து செயற்கரிய காரியங்களைச் செய்யவல்ல உனக்கு இவை எங்கட்குக்குக் கிடைக்கச் செய்வது எளிதான செயலேயாகும்.

ஆய்ச்சிமாருக்குச் சங்காகவும் பறையாகவும் பல்லாண்டிசைப்பாராகவும் விளக்காகவும் கொடியாகவும் ஆக வேண்டும் என்று பிரார்த்தித்த படியாம். ஆலினிலையாய். ஆலின் நிலையாய் என்று பிரித்து, ஆலமரத்தின் நிழலில் பலர் ஒதுங்கி இன்புறலாமாகையாலே, ஆசாரியரை ஆலமரத்தின் நிலையையுடையவர் என்று கொள்ளலாம்,

'கூடாரை வெல்லும்' (27) என்ற **இருபத்தேழாம்** பாசுரத்தில் மார்கழி நோன்பு தலைக்கட்டின பிறகு

இடைப் பெண்கள் கண்ணனிடம் பெற வேண்டிய வெகுமானச் சிறப்புகளைச் சொல்லுகின்றார்கள். "பாடகம் முதலிய ஆபரணங்களையெல்லாம் உன் கையால் எங்களுக்குப் பூட்ட நாங்கள் அணியப்பெற்ற வர்களாக வேண்டும்; அங்ஙனமே ஆடைகளையும் நீ உன் கையால் எங்கட்கு உடுத்த நாங்கள் உடுக்கப் பெற்ற வர்களாக வேண்டும்" என்கின்றனர்,

சூடகம் பாடகம் முதலியவற்றிற்கு மற்றொரு விவரணமும் காணலாம், சூடகம் என்பது கையிலணிவது; இஃது அஞ்சலி பந்தத்தைக் குறிச்கும். தோள்வளை என்பது தோளில் அணியப் பெறுபவை. 'சக்கரத்தின் கோயிற் பொறியாலேயொற்றுண்டு நிற்கை புயபூஷணம் (தோள் வளை). தோடு, காதிலணிவது. முதலில் உபதேசம் பெறுங் காலத்தில் தெரிந்தும் தெரியாமலும் மந்திரத்தைக் காதில் புகவிடுவது தோடு. செவிப்பூ—காதில் உச்சியில் அணிவது; பின்னர் பொருட்சிறப்பைப் பரக்கக் கேட்பிப்பது செவிப்பூ. பாடகம்-காலில் அணிவது. திருவடிகளால் நடந்து திவ்விய தேசங்களில் யாத்திரை செய்வது பாத பூஷணம் (பாத கடகம்-பாடகம்). தவிர, அடியார்கள் குழாங்களுடன் கூடியிருந்து குளிர்வதுதான் பரம புருஷார்த்தம் என்பது தெரிவிக்கப்பட்டதாகின்றது.

'கறவைகள் பின் சென்று' (28) என்ற இருபத்தெட்டாம் பாசுரத்தில் தெரிவிப்பவை எவை? முன்னர் 'போற்றியாம் வந்தோம்'(21), 'செங்கண் சிறிதே எம்மேல் விழியாவோ?' (22), 'உன்னை அருத்தித்து வந்தோம்' (25) என்பன போன்ற பாசுரங்களில் தங்களுக்குள்ள பிராப்யருசியை வெளியிட்டனர். அந்தப் பிராப்யத்தைப் பெறுகைக்கு உட லாகத் தங்களுடைய ஆகிஞ்சந்யத்தையும்[3] உபாயத்துவத்

3. ஆகிஞ்சந்யம்-கன்மஞான பக்திகளாகிற மற்ற உபாயங்களில் தொடர்பற்றிருந்தல்.

தையும்[4] வெளியிடுகின்றனர் இப்பாசுரத்தில். 'நாயகரே! நின்னருளே புரிந்திருக்கும் எங்கள் பக்கலில் எடுத்துக் கழிக்கலாம்படியும் சில உபாயங்கள் உளவென்றிருந் தாயோ?' 'யாம் வந்த காரியம் ஆராய்ந்து அருள்' (23)' என்றும், 'இன்று யாம் வந்தோம் இரங்கு' (24) என்றும் தாங்கள் வேண்டிய அருளுக்குப் பிரதிபந்தகமாகத் தங்கள் திறத்தில் சாதனாம்சம் ஒன்றும் இல்லை என்று 'சர்வஜ்யனுக்கு' அறிவிக்கின்றார்கள்.

'சிற்றஞ்சிறுகாலை' (29) என்ற இருபத்தொன்பதாம் பாசுரத்தில் தங்கள் குறிக்கோள் கைங்கரியம் என்று பிரபந்தத்தின் தாற்பரியத்தைச் சொல்லி முடிக்கிறார்கள். முன்னரெல்லாம் "பறை, பறை" என்று சொல்லி வந்த ஆயச்சிறுமிகள் அப்பறையின் பொருளைத் தீர்மானித்து விண்ணப்பம் செய்யும் பாசுரம் இது. "நாட்டார் இசைவு பெறுவதற்காக 'நோன்பு' என்ற ஒன்றைக் காரணமாகக் கொண்டு இங்கு வந்தோமேயன்றி எங்களது குறிக்கோள் உன் திருவடிகளில் நித்திய கைங்கரியம் புரிவதுதான்; இனி ஒரு நொடிப்பொழுதும் உன்னைவிட்டு நாங்கள் பிரிந் திருக்க முடியாது; வேறு ஒரு வகையான விருப்பம் எமக்குப் பிறவாவண்ணம் நீயே அருள் புரிய வேண்டும்" என்கின்றனர்.

எம்பெருமானுடைய பிறவிதோறும் ஒக்கப் பிறக்கும் பிராட்டியைப் போல தாங்களும் ஒக்கப் பிறந்து ஆட் செய்ய நினைக்கின்றனர், ஆழ்வார்கள் எல்லோரும் "இனிப் பிறவி யான வேண்டேன்" (      ) என்றும், "ஆதலால் பிறவி வேண்டேன்" (திருமாலை-3) என்றும்' கூறி பகவானிடம் வேண்டியது பிறப்பறுக்கவே வேண்டும் என்று. ஆண்டாள் அங்ஙனம் பேசாமல் "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்" என்றமையாலே அவனுடைய

4. உபாயத்துவம்—சித்தோபாயம்.

அவதாரங்கள்தோறும் கூடவே வந்து பிறக்கின்ற நாச்சிமார்களிலே 'இவள் ஒருத்தி' என்னும் இடம் தெரிவிக்கப்பட்டதாகின்றது.

''வங்கக்கடல் கடைந்த'' (30) என்ற முப்பதாம் பாசுரத்தில் இப்பிரபந்தம் கற்றார் பிராட்டியாலும் எம்பெருமானாலும் எல்லாக்காலங்களிலும் அங்கீகரிக்கப் படுவார்கள் என்கின்றனர்.

'சங்கத் தமிழ் மாலை'-பஞ்ச லட்சம் குடிப் பெண்கள் திரள் திரளாக அநுபவித்து போல, பக்த பாகவதர்கள் திரள்திரளாக அநுபவிக்க வேண்டும் என்பது தாற்பரியம்.

திருவாய்ப்பகடியில் பெண்களுக்குக் கிருட்டிணன் சமகாலத்தவனாகையால் கிருட்டிணனை அவர்கள் நேரில் காணமுடிந்தது, அந்த நேர் காட்சியை ஆண்டாள் நாச்சியார் பாவனை செய்து பெற்றாள். அவளிலும் பிற்பட்ட நம் போலியர் அப்பேறு பெற வேண்டில் இப் பிரபந்தத்தை ஒதிலும் போதும். ''கன்றிழந்த தலை நாகு தோற்கன்றை மடுக்க அதுக்கு இரங்குமாப் போலே ஆய்ச்சியர் சொன்ன இப்பாசுரங்கொண்டு பலிக்கும்'' என்பர் பட்டர்.

அதிகாலையில் எழுந்து ''முப்பது பாட்டையும் தப்பாமல்-ஒரு பாட்டும் நழுவாமல்- அநுசந்திக வேண்டும். அதனைச் செய்ய முடியா விட்டால் ''சிற்றஞ்சிறுகாலே'' (29) என்ற பாசுரத்தை அநுசந்தித்தால் போதும். அதையும் செய்ய முடியாமற் போனால் நாம் இருந்த இருப்பை நினைப்பது'' என்பர் பட்டர். ''நாம் (பட்டர்') இப்பிரபந்தத்தை அநுசந்தித்து ஈடுபட்டிருந்த இருப்பை' என்றபடி.

# 5. பயனை அடையும் வழிகள்

**ஆன்மா**-புருஷார்த்தத்தை அடைவதற்காகவும் ஐந்து வழிகள் சொல்லப் பெறுகின்றன. அவை: கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம், பிரபத்தியோகம். ஆசாரிய அபிமானம் என்பனவாகும். முதல் மூன்று நிலைகள் பக்தி நெறியில் அடங்கும். பேரன்பின் முதிர்ச்சியே பக்தி எனப்படும். இந்த பக்தியினை மேற்கொண்டார் பக்தர்-பத்தர்—எனப்படுவர். பத்தரெனினும் பித்தரெனினும் ஒன்றே யாகும். உலகில் நோயால் கொள்ளும் பித்தும், மருளால் கொள்ளும் பித்தும் துன்பம் தருவன. அருளால் கொள்ளும் பித்து அளவிலா இன்பம் தருவது. "பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்"[1] என்ற சுந்தர மூர்த்தியடிகளின் திருவாக்காலும் பக்தர்களின் மேம்பாட்டினை உணரலாகும். குலசேகரப்பெருமாளும்,

**பேதைமா மணவாளன்தன்**
**பித்தனே** (பெரு. திரு. 3:5)

**எம்பிரானுக்கு எழுமையும்**
**பித்தனே** (ஷை., 3:6)

**பித்தனாய் ஒழிந்தேன்**
**எம்பிரானுக்கே** (ஷை 3:7)

**பேயனாய் ஒழுந்தேன்**
**எம்பிரானுக்கே** (ஷை 3:8)

---

1. தேவாரம் 7-39: 10

என்ற வாக்குகளால் தம்மைப் 'பித்தன்' என்றும் 'பேயன்' என்றும் கூறிக் கொள்வதனால் இதனை மேலும் தெளிய லாம். இந்த பக்தி நிலையை மெய்விளக்க அறிஞர்கள் [2]பக்தியோகம் என வழங்குகின்றனர்.

இந்த பக்தி யோகத்தை எட்டு அங்கங்களாக முறைப் படுத்தி வகுத்துக் காட்டுவர் வேதாந்த தேசிகர். அவற்றுள் 1. **இயமம்** என்பது, அகிம்சை, சத்தியம், திருடாமை, காமத்தை அடக்குதல், பொருளைச் சேர்க்க முற்படாமை ஆகிய நிலை; 2. **நியமம்** என்பது, தூய்மை, உள்ளதைக் கொண்டு மன நிறைவு பெறுதல், விரதம், தவம் முதலியன செய்தல், வேதாந்த பரிசயம் செய்தல், எழிலாச் செயல் களையும் இறைவனிடம் சமரிப்பித்தல் ஆகிய நிலை; 3. **ஆசனம்** என்பது, பதுமாசனங்கள் முதலிய ஆசனங்கள் செய்யும் நிலை; 4. **பிராணாயாமம்** என்பது புலன்களை உலக விஷயங்களுனின்றும் திருப்புதல் நிலை; 6. **தாரணை** என்பது, பகவானுடைய திருமேனியை மனத்திற் கொள்ளும் நிலை; 7. **தியானம்** என்பது, இடைவிடாது இறைவனை நினைத்தல் நிலை; 8. **சமாதி** எனபது, இறைவனை நேரில் கண்டாற் போன்ற நிலையினை அடை தல் நிலை. இந்த எட்டு அங்கங்களையுடைய பக்தி நெறி வழியொழுகுவார்க்குப் பிராட்டிக்கு ஆராவமுதமாக இருக்கும் எம்பெருமான் குறிப்பொருளாகி வீடு பேற்றை அளிப்பான்.

**விளக்கம் :** இந்த எட்டு அங்கங்களையுல் ஈண்டு விளக்குவேன்.

**இயமம் :** பிரமசரியம், அகிம்சை, அஸ்தேயம், அபரிக்கிரகம் என்னும் ஐந்தும் இதனுள் அடங்கும்

2. தே. பி. 84 இன் உரை

(1) பெண் இன்பம் துறத்தல் பரமசரியம்; (2) எல்லா உயிர்க்கும் தீங்கு செய்யாமை அகிமசையாகும்; (3) பிறர் பொருளை மனத்தாலும் கவர நினையாமை அஸ்தேயம் ஆகும்; [4] பிறர்க்கும் நலம் தரும் இயமம் மொழி சத்தியம். 'பொய்மையும் வாய்மை இடந்த புரைதீர்ந்த, நன்மை பயக்கும் எனின்' [292] என்ற பொய்யாமொழியுடன் ஒப்பிட்டுச் சிந்திக்க; [5] மது, ஊன் முதலிய இழி பொருள்களை உண்ணாமை அபரிக்கிரகமாகும்.

நியமம் : சுவாத்தியாயம், செளசம்ய மகிழ்ச்சி, தவம், நியதாத்மம் என்னும் ஐந்தும் இதனுள் அடங்கும். (1) நான்மறைகளை ஓதுதல் சுவாத்தியாயம் [2] உடலை மண்ணாலும் நீராலும், மனதை வாய்மையாலும் தூய தாக்குதல் செளசம். 'புறந் தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை, வாய்மையால் காணப்படும்' [298] என்ற வள்ளுவத்தை ஈண்டு நினைவுகூர்க; [3] பெற்றது கொண்டு மனநிறைவு கொள்ளுதல் மகிழ்ச்சி; 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற ஆன்றோர் வாக்கை உன்னுக; [4] உபவாசம் முதலியன மேற் கொள்ளுதல் தவம். [5] தெய்வத்தை வழி படுதல் நிய தாத்மம் ஆகும். 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' (கொன்றை வேந்தன்-2), 'திருமாலுக்கு அடிமை செய்' (ஆத்திசூடி-57), 'சிவாய நம' என்று சிந்தித்திருப்போர்க்கு அபாயம் ஒரு நாளும் இல்லை' (நல்வழி - 15) என்ற ஔவைப் பாட்டியின் பொன்மொழிகளைப் போற்றுக.

ஆசனம்: பத்திராசனம், கோமுகாசனம், பதுமாசனம், சிம்மாசனம், மயூராசனம், குக்குடாசனம், சுவததிகாசனம் என ஆசனம் பல வகைப்படும். இவற்றின் நுட்பங்களை யும் செய்யும் முறைகளையும் ஆசனங்களை விளக்கும் 'அடயோகப் பிரதீபிகை' முதலிய யோக நூல்களில் கண்டு தெளியலாம்.

**பிராணாயாமம்:** மூச்சுமூலம் உயிர்க் காற்றை உள்ளுக்கு வாங்கி ஒரு கணக்குப்படி நிறுத்தி வெளிவிடுவது பிராணாயாமம். உயிர்க் காற்றை மூக்கின் ஒரு பகுதியால் உள்ளுக்கு இழுத்தல் **பூரகம்.** அதனை உள்ளே அடக்கி நிறுத்துதல் **கும்பகம்.** தொடர்ந்து அதனை மூக்கின் மறு பகுதியால் வெளிவிடுவது **ரேசகம்.**

**பிரத்தியாகாரம்:** சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐம்புலன்கள் அடங்கும்படி மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறிகளைத் தடுத்து உள்நோக்கி இருத்தல் **பிரத்தியாகாரம்.** 'செயற்கரிய செய்வர் பெரியர்' (26) என்ற வள்ளுவர் குறிப்பிடுவது இதனைத் தானோ என்று கருதுவதில் தவறு ஒன்றும் இல்லை.

**தாரணை:** இறைவனிடம் இடையறாது தைலதாரை போல் மனம் ஒன்றியிருத்தல் **தாரணை.** பக்தி யோகத்தின் நிலை இதுதான் என்று கருதலாம்.

**தியானம்;** தாரணையின் முதிர்ச்சி நிலையே தியானம் (Meditation) ஆகும். ஐம்படைகளுடனும் பல்வேறு அணிகலன்களுடனும் பெரிய பிராட்டியாருடன் கூடிய இறைவனது திவ்வியமங்களத் திருமேனியை அல்லது அவனது அனந்த திருக்குணங்களை இடைவிடாமல் நினைத்திருப்பது அதுவாகும்.

**சமாதி:** புலன் இன்பத்தால் வரும்ஆசை முற்றும் ஒழிந்து இறைவனிடம் ஒருமுகமாக ஈடுபட்டிருப்பது **சமாதியாகும்.** வில்லிபுத்தூரார் வருணிக்கும் அருச்சுனனின் தவக்கோலம் ஈண்டு நினைவு கூர்தல் தகும்.[3]

3. வில்லிபாரதம் — அருச்சுனன் தவநிலை-செய் 37, 38, 41 காண்க இதன் விளக்கம் பாட்டுத் திறன் என்ற இவ்வாசிரியரின் **கவிதை அநுபவமாகும் முறை'** என்ற இயலில் கண்டு தெளிக.

இந்தப் பக்தி நெறி ஆழ்வார் பாசுரங்களில் ஆங்காங்கு குறிப்பிடப் பெற்றுள்ளது. நாலாயிரத்தை ஓதுவார் இதனை நன்கு அறிவர்.

அறிந்து, ஐந்தும் உள்ளடங்கி,
ஆய்மலர் கொண்(டு), ஆர்வம்
செறிந்த மனத்த ராய்,
செவ்வே—அறிந்து அவன்தன்
பேர்ஓதி ஏத்தும்
பெருந்தவத்தோர் காண்பரே
கார்ஓத வண்ணன்
கழல். (இரண், திருவந்: 6)

[ஐந்து - ஐந்து பொறிகள்; ஆய்மலர் - ஆராய்ந்த பூக்கள்; ஆர்வம் - பக்தி; செவ்வே - நன்றாக; பேர்-திருநாமங்கள்; கழல்-திருவடிகள்]

என்ற பூதத்தாழ்வாரின் பாசுரத்தில் இந்த பக்திநெறியைக் காணலாம். விஷ்ணுவை என்றுமே தன் சித்தத்துள் வைத்திருக்கும் விஷ்ணுசித்தர் என்ற பெரியாழ்வாரின்,

மார்வம் என்பதோர் கோயில் அமைத்து
மாதவன் என்னும் தெய்வத்தை நாட்டி
ஆர்வம் என்பதோர் பூஇட வல்லார்க்கு
அரவ தண்டத்தில் உய்யலும் ஆமே

(பெரியாழ். திரு 4.5: 3)

[மார்வம் - இதயம்; ஆர்வம் - பக்திநெறி; அரவதண்டம் - யமதூதர்களால் வருந் துன்பம்]

என்ற பாசுரப் பகுதியில் இந்நிலையைக் காணலாம்.

**பூசும் சாந்து என்னெஞ்சமே;**
**புனையும் கண்ணி எனதுடைய**
**வாச கம்செய் மாலையே**
**வான்பட் டாடையும் அஃதே;**
**தேசம் ஆன அணிகலனும்**
**என்கை கூப்பும் செய்கையே**
**..............................** *(திருவாய் 4.3: 2)*

*[சாந்து-சந்தனம்; கண்ணி-மாலை]*

என்ற நம்மாழ்வாரின் திருவாய்மொழியில் அவருடைய பக்தி நிலையைக் கண்டு அநுபவிக்கலாம். மெய் விளக்க அறிஞர்கள் இபபக்தி நெறி கர்மயோகம், ஞானயோகம், பக்தியோகம் என்ற மூன்று நிலைகளில் பயிற்சி அடைய வேண்டிய நெறி என்றும் கூறுவர்.

(1) **கர்மயோகம்:** சாத்திரங்களைப் பயின்ற அறிவினால் சில சடங்குகளையும் கடமைகளையும் தவறாது செய்தல் வேண்டும். இவற்றுள் நித்திய கருமங்களும் நைமித்திய கருமங்களும் அடங்கும். நித்திய கருமங்கள் என்பன சந்தியாவந்தனம், பகவதாராதனம் போன்ற நாடோறும் செய்யப் பெறுபவை; நைமித்திய கருமங்கள் என்பன கிரகணம், கார்த்திகை, சங்கராந்தி, ஆவணி அவிட்டம் போன்ற விசேட நாட்களில் மேற்கொளளப் பெறும் கருமங்களாகும். இறைவனை ஏத்தல், திருத்தலப் பயணத்தை மேற்கொள்ளல், அறம் புரிதல் போன்றவை யாவும் கரும யோகத்தில் அடங்கும். யாதொரு பலனையும் எதிர் பாராது செய்யப்பெறும் கருமத்தால் மனம் தூய்மையடைகின்றது. இஃது ஆன்மா தியானத்தில் அழுந்த வழியாகவும் அமைக்கின்றது.

**பரிவது இல் ஈசனைப் பாடி**
**விரிவது மேவல் உறுவீர்!**
**பிரிவகை இன்றிநல் நீர்தூய்**
**புரிவதும் புகை பூவே** *(திருவாய் 1.6: 1)*

என்ற பாசுரத்தில் பலனை எதிர் பாராது இறைவனுக்குச் செய்யப்பெறும் கருமம் கூறப் பெறுகின்றது. இறைவன் ஆராதனைக்கு எளியவன் என்பதும் இதனால் பெறப் படுகின்றது. எளியவனா யிருப்பதுடன் ஆராதிப்பாருக்கு இனியவனாகவும் இருக்கின்றான் இறைவன் என்பதை,

**ஆயர் கொழுந்தாய், அவரால் புடையுண்ணும்**
**மாயப் பிரானைஎன் மாணிக்கச் சோதியை**
**தூய அமுதத்தைப் பருகி பருகி,என்**
**மாயப் பிறவு மயர்வு அறுத்தேனே.** *(1.7: 3)*

*[ஆயர்-இடையர்; மயர்வு-அஞ்ஞானம்]*

என்ற பாசுரத்தால் தெரிவிக்கின்றார் ஆழ்வார். இக் கரும யோகத்தினால் தன்னை மறத்தல், மனதைக் கட்டுப் படுத்தல், ஆன்மாநுபவம் பெறல் போன்ற நிலைகள் ஏற்பட்டு சமுசாரத்தில் ஆழ்ந்திருக்கும் ஆன்மா தூய்மை யுறுகின்றது.

*(2)* **ஞானயோகம்:** கர்மயோகத்திற்கு அடுத்த நிலை ஞானயோகம் என்பதாகும், இந்த நிலையை,

**ஞானத்தில் நன்குணர்ந்து**
**நாரணன்தன் நாமங்கள்**
**தானத்தில் மற்றுஅவன்பேர்**
**சாற்றினால், வானத்து**
**அணிஅமரர் ஆக்குவிக்கும்** (இரண். திருவந் 2)

*[தானம்-அன்பின் முடிவான இடம்; சாற்று தல் - அநுசந்தித்தல். அணி அமரர் - நித்திய சூரிகள்]*

என்று பூதத்தாழ்வார் பேசுகின்லார். கர்மயோகத்தில் தூய்மையடைந்த ஆன்மா இந்நிலையில் தியானத்தில்

ஆழுங்கால் படுகின்றது. முன்னர்க் குறிப்பிட்ட இயமம் நியமம் போன்ற செயல்களால் ஆன்மா அமைதி நிலையை நாடுகின்றது. அலைந்து திரியும் மனத்தை அங்ஙனம் அலைய விடாமல் நிலைநிறுத்தும் நிலை ஏற்படுகின்றது. அதாவது மெய்விளக்க அறிஞர்கள் குறிப்பிடும் கைவல்ய நிலை உண்டாகின்றது. இந்த யோகத்தினால் தன் ஆன்மா இன்னது என்று தனக்குப் புலனாவது போல எல்லாச் சீவர்களிடமும்-ஆன்மா என்ற ஒன்று இருப்பது தட்டுப் படுகின்றது. எல்லா ஆன்மாக்களும் சமம் என்ற உண்மையும் பளிச்சிடுகின்றது. தியானத்தின்மூலம் ஆன்மா தான் உண்மை நிலையை உணர்ந்து தான் இறைவனைச் சார்ந் திருக்கும் நிலையை அறிகின்றது. அதன்பிறகு அஃது இறைவனை அடைய அவாக்' கொள்ளுகின்றது.

**கையபொன் ஆழிவெண் சங்கொடும்**
**காண்பான் அவாவுவன் நான்**
**மையவண்ணா! மணியே! முத்தமே!**
**என்றன் மாணிக்கமே!** (திருவிருத். 84)

[கைய-கைகளிலுள்ள; மைய - மையுடைய நிறம் போன்ற]

என்ற பாசுரத்தில் பராங்குச நாயகி எம்பெருமானாகிய நாயகனைக் காண விரைகின்றாள். தனிமையில் கண்டு கூடிக் குலாவி இன்புற வாய்ப்பில்லை யாயினும் ஆடவரும் மகளிரும் பலர் கூடிய கூட்டத்திலாயினும் காணப் பெற்றாலும் அதுகொண்டு ஆறியிருப்பதாகச் சொல்லு கின்றாள். நாயகனையே இடைவிடாது நினைத்துக் கொண்டிருந்து, அந்த நினைப்பு மிகுதியால் அவன் எதிரில் நிற்பதாகப் பாவித்து 'மைய வண்ணா, மணியே, முத்தமே, மாணிக்கமே' என்று முன்னிலைப் படுத்திப் பேசுகின்றாள். இன்னொரு பாசுரத்தில் ஆழ்வார் நாயகி "என் ஆசையை அடக்க மாட்டாமல் வினையொடும்

எம்மொடும் நொந்து, கனியின்மையின் கருக்காய் கடிப்பவர் போல் திருநாமம் சொல் கற்றனம்'' (திருவிருத் 64) என்கின்றாள். ஈண்டு கனி - பகவதநுபவத்தாலாகும் இனிய ஆனந்தத்திற்கு உவமை; கட்டிளமைத்தாய்நுகரும் செவ்வியல்லாத காய் அவ்வளவு இனிய தல்லாத நமோச் சரண மாத்திரத்திற்கு உவமை. காயின் முதிர்ச்சி கனியா தல் போல் நமோச்சரணத்தின் பயன் அநுபவாநந்தமாகும் என்பது உவமையால் உய்த்துணரலாகும் என்பதை அறிந்து மகிழவேண்டும். இந்த 'அவர்' படிப்படியாக வளர்ந்து பேருருவம் கொள்வதை அவர் தம்பாசுரங்களால்[4] அறிகின்றோம். இந்நிலையிலும் ஆன்மா தியானத்தில் அழுந்துகின்றது. இந்த உயர் நிலையில் எல்லா உயிர்களிடையேயும் ஊடுருவி நிற்கும் பரமான்மாவின் சாயல் தோன்றுகின்றது. இது திடீரென்று தோன்றி மறையும் நிலையாகும்.

*(3)* **பக்தியோகம்:** ஞானயோகத்திற்கு அடுத்த நிலை 'பக்தியோகம்' என்பது. இந்த நிலையிலும் தியான நிலை உண்டு. இந்தத் தியான நிலையில்தான் ஆன்மா தனக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பினை அறிகின்றது. இது ஞான நிலையின் இறுதிப் படியும் பக்தி நிலையின் முதற் படியுமாகும்.

**உய்த்துணர்வு என்னும்**
**ஒளிகொள் விளக்கேற்றி**
**வைத்துஅவனை நாடி**
**வலைப்படுத்தேன்** *(மூன். திருவந். 94)*

4. திருவாசிரியம் 2; பெரியதிருவந் 8; திருவாய். *5.3: 4; 7.3:6,8; 10.2:2; 10.10:10.*

என்ற பேயாழ்வாரின் பாசுரத்தில் இந்த இயல்பினை அறியலாம். ஞானமே பக்தி நிலையாக முதிர்கின்றது. இதுவே "ஞானம் கனிந்த நலம்" (இராமாநுச நூற். 66) என்று அமுதனார் குறிப்பிடுவது. இந்த நிலையில் முமுட்சுகள் தம் முனைப்பை அகற்றி இறைவனுடைய சங்கற்பத்துக்கு அடிபணிந்து இறைவனுடன் நிரந்தரத் தொடர்பு கொள்வதற்குத் தயாராகின்றனர். இந் நிலையில்தான் நமக்கும் இறைவனுக்கும் அறுபடாத தைல தாரை போன்ற தொடர்பு ஏற்படுகின்றது. நாளாக நாளாக இந்நிலையில் ஒரு புதிய ஆற்றல் தோன்றுகின்றது. வான நூல் அறிஞர் பூமியின் சிறுமையையும் அதனை ஈர்த்து நிற்கும் கதிரவனின் பெருமையையும் உணர்வதுபோல் பக்தர்களும் சமுசாரத்தில் உழலும் தம் ஆன்மாவின் சிறுமையையும், எல்லா உயிர்களையும் புரக்கும் இறைவனின் பெருமையையும் பேராற்றலையும் உணர்கின்றனர். இந்நிலையில் சீவான்மா பரமான்மாவுடன் கலக்கின்றது. அப்பொழுது அது கடலில் கிடக்கும் கடற் பஞ்சு போன்ற நிலையினை அடைகின்றது. இந்த நிலையையும் பரபக்தி, பரஞானம், பரமபக்தி என்று மூன்று பிரிவுகளாக வேறுபடுத்திக் காட்டும் மரபும் உண்டு. இந்த மூன்று நிலைகட்கும் முறையே பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூன்று பெருமக்கள் எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றனர் என்று பொருத்திக் காட்டும் மரபும் உண்டு.

(4) **பிரபத்தியோகம்:** பக்திநெறியை எல்லோராலும் அநுட்டிக்க முடியாது. ஆகவே, உயர்ந்தோர், தாழ்ந்தோர், கற்றவர், கல்லாதவர் என்ற வேறுபாடு இன்றி எல்லோராலும் மேற்கொள்ளக்கூடிய நெறியொன்றினைக் கண்டனர் மெய் விளக்கம் பெற்ற மேலோர்.

அதுவே பிரபத்தி நெறியாகும்[5]. இதனை வேதாந்த தேசிகர்,

> அந்தணர் அந்தியர் எல்லையில்
> நின்ற அனைத்துலகும்
> நொந்தவ ரேமுத லாக
> நுடங்கி அனன்னியராய்
> வந்தடை யும்வகை (தே.பி. 56)

*[அந்தியர் - சண்டாளர்; நொந்தவர்- (சமுசாரத்தில்) வருந்தியவர்; நுடங்கி-துவண்டு போய், அனன்னியர் - வேறுபலனையும், வேறு இரட்சகரையும் கொள்ளாதவர்; அடையும் வகை- சரணம் அடையும் நெறி]*

என்று சிறப்பித்துப் பேசுவர். இந்நெறி 'சரணாகதி', 'பரநயாசம்' 'பரசமர்ப்பணம்', 'உபயாநுஷ்டானம்'. என்ற பெயர்களாலும் வழங்கப்பெறும். சமுசார தாபத்தால் வருந்தி வேறு உபாயத்தையும் வேறு பலனையும் வேறு தெய்வத்தையும் நாடாத யாவரும் இந்த நெறியைக் கடைப்பிடிக்க அதிகாரிகளாவர். பகவத்கீதையின் முடிவில் சரமசுலோகத்தில் (கீதை 18:66) பேசப் பெறுவதும் இந் நெறியேயாகும். மணிவாசகப் பெருமானும் இச்செந் நெறியைக் குறிப்பிடுகின்றார் (திருவா. அடைக்கலப் பத்து). இஃது அடிகளாரின் அநுபவமாக வெளிப்படுகின்றது.

---

5. பிரபுத்தி-சரண் அடைதல்; பிர-சிறப்பு பது - செல்லல், அடைதல்; பிரபத்தி-சிறப்பாக அடைதல்; சிறப்பாவது - மனத்தால் அடைதல்; இது சரண் அடைதல் எனப் பொருள்படும்.

இந்த பிரபத்தி நெறியிலும் ஐந்து அங்கங்கள் இருப்பதாகக் காட்டுவர் ஆசாரியப் பெருமக்கள். முதலாவது: **ஆநு கூல்ய சங்கற்பம்** என்பது, எம்பெருமான் திருவுள்ளத்திற்கு உகந்தவற்றைச் செய்வதாக உறுதி கொள்ளலாகும். இரண்டாவது: **பிராதிகூல்யவர்ஜனம்** என்பது, அவன் திருவுள்ளத்திற்குப் பொருந்தாதவற்றைச் செய்யாதிருக்க உறுதி கொள்ளல்; அல்லது அவற்றைச் செய்ய எண்ணம் கொள்ளாமை; அல்லது அவற்றைச் செய்யாது விடுதலாகும். மூன்றாவது: **மகா விசுவாசம்** என்பது, அவன் நம்மைக் காக்க வல்லவன் என்று தேறி, தவறாது நம்மைக் காப்பான் என்று உறுதியாக நம்புதலாகும். நான்காவது: **கோபத்ருவரணம்** என்பது, பக்தியோகம் முதலிய உபாயங்களை அநுட்டிக்க ஆற்றலற்ற தம்மிடம் அருள் புரிந்து அவ்வுபாயங்களின் இடத்தில் நின்று பலன் தருமாறு அவனை வேண்டுகையாகும் ஐந்தாவது: **கார்ப்பண்யம்** என்பது, பக்தியோகம் முதலிய உபாயங்களில் தமக்கு அதிகாரம் இல்லாமையும், எம்பெருமானைத் தவிர வேறு தெய்வத்தினிடமோ வீடு பேற்றைத் தவிர, வேறு பலனிலோ பற்றில்லாமையை அநுசந்தித்தல்; அல்லது இவ்வநுசந்தானத்தால் முன் நமக்கு இருந்த முனைப்பு ஒழியப் பெறுதல்; அல்லது எம்பெருமானின் கருணை தம்மீது வளர்ந்தோங்கும்படி தாழ்ந்து நின்று அஞ்சலி[6] முதலியவற்றைச் செய்தல். இந்தப் பிரபத்தியைக் குறித்த பலனுக்காக ஒருமுறை அநுட்டித்தால் விரும்பிய பலனை நினைத்த காலத்தில் பெறலாம். ஒரே பலனுக்காக இதனை இருமுறை அநுடித்தல் ஆகாது.

6. **அஞ்சலி-கைகளைக் கூப்புதல்.** அம்+ஜலயதி - அஞ்சலி. எம்பெருமானை நீர்ப் பண்டமாக உருகச் செய்தலால் இதற்கு இப் பெயர் வந்தது. இஃது ஓர் அடையாள்மாகும்.

**ஆழ்வார் பாசுரங்கள்:** இப் பிரபத்தி நெறி ஆழ்வார் பாசுரங்களில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

**அடைந்த அருவினையோடு அல்லல் நோய் பாவம்**
**மிடைந்தவை மீண்டொழிய வேண்டில் - நுடங்கிடையை**
**முன்னிலங்கை வைத்தான் முரணழிய முன்னொருநாள்**
**தன்னிலங்கை வைத்தான் சரண்**

*(முத. திருவந். 59)*

*[அடைந்த-பற்றிக் கிடக்கும்; வினை-பழவினை; அல்லல் - மனத்துன்பம்; பாவம் - இப்போது செய்தது; மிடைந்தவை - ஆன்மாவை மூடிக் கிடப்பவை; மீண்டு - நீங்க; நுடங்கிடை - மெல்லிய இடையையுடைய பிராட்டி]*

என்ற பொய்கையாழ்வார் பாசுரத்தில் இந்நெறியின் குறிப்பைக் காணலாம். வினை, நோய், பாவம் இவை வாசனையோடு நீங்க வேண்டுமானால் சக்கரவர்த்தித் திருமகனைச் சரணம் புகுதலேயாகும் என்ற குறிப்பை இதில் காணலாம்.

திருமங்கையாழ்வார் நைமிசாரணியத்து எம்பெருமான் திருவடிகளில் சரண் புகுவதைப் பாசுரங்கள் தோறும் ஒரு முறைக்கு ஒன்பது முறையாகத் "திருவடி அடைந்தேன்" என்று சொல்லுவதைக் காண்கிறோம். பிராட்டியை முன்னிட்டுச் சரணாகதி செய்வது சொரூபமாகையால் இவரும்,

**தேன்உடைக் கமலத் திருவினுக்கு அரசே!**
**.............................................**
**நான்உடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்**

*(பெரி. திரு 1-6:9)*

என்று இடைக்குமிலை முன்னிட்டுப் பிரபத்தி செய்வதைக் காணலாம். இந்த ஆழ்வார்,

> கல்தேன் பாய்ந்தொழுகும்
> கமலச் சுனை வேங்கடவா!
> அற்றேன் வந்தடைந்தேன்
> அடியேனை யாட்கொண்டருளே
>
> (பெரி. திரு. 1-9:9)

என்று திருவேங்கடமுடையானையும் சரணம் அடைவதைக் காணலாம் இவர் திருக்கண்ணபுரத்துக் கருமணியிடமும் சரண் அடைந்தமையை 'அம்மானை, அமுதத்தை...அடியேன் அடைந்து உயந்து பிழைத்தேனே' (8-9:2) என்ற பாசுர அடியால் அறியலாகும்.

சரணாகதி தத்துவத்தின் தந்தை போன்றவர் பிரபந்நர்களின் தலைவரான நம்மாழ்வார். அவர் தம்முடைய திருவாய்மொழியில் ''நம் பெருமான் அடிமேல் சேமங்கொள் தென்குருகூர்ச்சடகோபன்'' (5-9:11) என்றும், ''கழல்கள் அவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன்'' (5-8:11) என்றும் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்ளுகின்றார். ''எனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தேன்'' (5-7:10) என்று எம்பெருமான் தமக்குச் சரணாக அமைந்தமையையும், ''உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே'' (6-10:10) என்று தாம் எம்பெருமான் கழல் இணைகளில் சரணாகப் புகுந்தமையையும் புலப்படுத்துகின்றார்.

இவ்விடத்தில்,

> ''சேஷிபக்கல் சேஷபூதன் இழியும் துறை,
> பிரஜை முலையிலே வாய் வைக்குமாப் போலே''
>
> (முமுட்சு - 147)

[சேஷி - இறைவன்; சேஷபூதன் - சேதநன்
பிரஜை - குழவி]

என்ற முமுட்சுப்படியின் வாக்கியமும் சிந்திக்கத் தக்கது. பாலுண்ணும் பச்சைக் குழவி எங்ஙனம் தாயினுடைய மற்ற அவயவங்கள் யாவையும் விட்டு, தான் உயிர்வாழ் தற்கிடனாய் உள்ள அவள் கொங்கையிலே வாய் வைக்கின் றதோ, அங்ஙனமே சேஷியாகின்ற எம்பெருமானுடைய பல உறுப்புகளையும் விட்டு, தான் உய்தற்கு இடனாய் உள்ள அவன் திருவடிகளையே சீவன் (சேதநன்) பற்று கின்றான் என்பதை இந்த வாக்கியம் அழகாகப் புலப் படுத்துவதை அறியலாம். முந்திய செயல் எவ்வாறு குழந்தைக்கு இயல்பாய் அமைந்ததோ. அவ்வாறே பிந்திய செயலும் சேதநனின் சொருபத்திற்கு இயல்பாய் அமைந்துள்ளது.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார் பெரு மக்கள் பரத்துவம், வியூகம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சை என்னும் இறைவனுடைய ஐந்து நிலைகளையும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்று கண்டவர்கள். இந்த ஐந்து நிலைகளிலும் காக்கும் இயல்பினதும், அடையத் தக்கதும், எல்லாத் திருக்குணங்களும் நிறைந்ததுமான இடம் அர்ச்சாவதாரமே என்று தெளிந்தவர்கள். இவர்கள் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வதற்குப்" (திருவாய் 3-3:1) பதறிப் பல காலும் பிரபத்தி பண்ணுகின்ற அளவில் பல இடங்களிலும் அர்ச்சாவதாரத்தில்தான் பிரபத்தி செய்தனர் என்பது ஈண்டு அறியப்படும்.

"ஆழ்வார்கள் பல இடங்களிலும் பிரபத்தி பண்ணிற்றும் அர்ச்சாவதாரத்திலே" (33)

என்பது ஸ்ரீவசனபூஷண வாக்கியம். முமுட்சுப்படியிலும்,

**"இதுதான் (அர்ச்சாவதாரம்) பர வியூக விபவங்கள் போலன்றிக்கே கண்ணிலே காணலாம்படி இருக்கும்"** (140) என்று இவ்வவதாரத்தின் எளிமை பேசப்படுவதையும் காணலாம்.

**பிரபத்தி வகைகள் :** இந்தப் பிரபத்தி ஆர்த்தரூப பிரபத்தி திருப்தரூபபிரபத்தி என இருவகைப்படும். **ஆர்த்தரூப பிரபத்தியாவது,** இந்த உடல் உள்ளவரையிலும் கூட சமுசாரத்தளையைப் பொறுக்கமாட்டாமல் இந்தக்கணமே முத்தி அடைய வேண்டும் என்று விரும்பிப் பிரபத்தியை அநுட்டிப்பது. இதனால் இந்தக் கணமே முத்தி அடைவதில் சிறிதும் ஐயம் இல்லை. "ஓயும் மூப்பும் பிறப்பு, இறப்பு; பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து ஆயன்" (திருவாய் 8-3:9) ஆகையாலே, "திருவேங்கடத்தானே, புகல்ஒன்று இல்லா அடியேன்" (ஷ்டி6-10:10), வேங்கடத்து உறைவார்க்கு நம: (ஷ்டி 3-3:6) என்று பூர்ண பிரபத்தி பண்ணி 'பாவியேனைப் பல நீகாட்டிப் படுப்பாயோ;' (ஷ்டி 6-9:9), "நெடுமாலே கிறிசெய்து என்னைப் புறத்திட்டு, இன்னங் கெடுப்பாயோ?" (ஷ்டி 6-9:8) "அக்கரை என்னும் அனந்தக் கடலுள் அழுந்தி உன்பேர்அருளால், இக்கரை ஏறி இளைத்திருந்தேனை" (பெரியாழ். திரு. 5.3.7), 'அடைய அருளாய், எனக்கு உன்தன் அருளே" (பெரி. திரு. 11.8:6), 'உன் திருமார்வத்து மாலை நங்கை, வாசஞ் செய் பூங்குழலாள்" திரு ஆணை; நின் ஆணை கண்டாய்" (ஷ்டி திருவாய் 10-10:2) 'இனிநான் போகல் ஒட்டேன்" (ஷ்டி 10-10:1) என்று தடுத்தும் வளைத்தும் பெறுதல் இப்பிரபத்தியாகும் என்று தெளியலாம். **திருப்தரூப பிரபத்தியாவது,** இந்த உடல் நீடிக்கும் வரையிலே வினைப்பயன்களைத் துய்த்து உடல் முடிவில் முத்தியைப் பெற விரும்பிப் பிரபத்தியை அநுட்டித்தலாகும்.

**களைவாய் துன்பம்; களையாது**
**ஒழிவாய்; களைகண் மற்றிலேன்**

*(திருவாய். 5-8:5)*

என்று உபாயத்தில் அனைத்தையும் அவனிடம் விட்டு வாளா இருத்தல் என்பதாகும்.

(5) **ஆசாரிய அபிமானம்**: மேலே கூறிய நான்கு உபாயங்களிலும் ஒன்றையும் செய்வதற்கு ஆற்றலில்லாத ஒருவனைக் கடைத்தேற்றுவது ஆசாரிய அபிமானம் என்பது. இச் சேதநனைக் குறித்து ஆசாரியன் 'இவன் ஈசுவரனை இழந்திருத்தலாலும், இவனைப் பெற்றால் ஈசுவரனுக்கு விளையும் பிரீதியையும் திருவுள்ளத்தில் கொண்டு ஒரு தாய்போல் உதவுபவன் ஆசாரியன். முலை யுண்ணும் சிசுவுக்கு நோய் உண்டானால் அது தான் பத்தியம் காக்காமையினால் வந்தது என்று கருதி தாய் மருந்துண்ணுகின்றாள். அதுபோலவே, ஆசாரியனும் உபாய அநுட்டானம் பண்ணிக் காக்கவல்ல பரம தயாளு வான மகா பாகவதன் அபிமானத்திலே ஒதுங்கிச் செய்ய வேண்டிய எல்லாவற்றையும், தவிர்க்க வேண்டிய எல்லா வற்றையும் அவன் இட்ட வழக்காகக் கொள்வான்.

## திருவாய்மொழி

திருவாய்மொழியில் 'நோற்ற நோன்பும்' (5,7), 'ஆரா அமுதே' (5,8), 'மானேய் நோக்கு' (5,9), 'பிறந்த வாறும்' (5,10) என்ற நான்கு திருப்பதிகங்களும் பயனை அடையும் வழிகளைக் (உபாயங்களைக்) கூறுவனவாக அமைகின்றன.

(1) **வானமாமலைப் பெருமானது அருளை வேண்டல்.** இது 'நோற்ற நோன்பும்' (5,7) என்ற திருவாய்

மொழியில் விளக்கப்பெறுகின்றது. ஆழ்வார் தம் கையில் ஒன்றும் இல்லாமையை அறிவித்து அவன் திரு வடிகளில் சரணம் புகுகின்றார்.

செய்த கர்ம யோகத்தையுடையேன் அல்லேன்; ஞான, யோகத்தையுடையேன் அல்லேன்; அப்படியானா லும் இனி உன்னைப் பிரியச் சிறிதுபொழுதும் பொறுக்க மாட்டுகிற்கின்றிலேன்; ஆதிசேட சயனத்தை யுடைய அம்மானே! சேற்று நிலங்களிலே தாமரைகள் செந்நெற் பயிர்களுக்கு நடுவில் வளர்கின்ற சிரீவர மங்கை என்னும் திவ்விய தேசத்தில் வீற்றிருக்கின்ற எந்தையே! காப்பாற்றுகின்ற உனக்கு அங்கே புறம்பு அல்லேன். (1)

ஒரு சாதனத்தைச் செய்து முத்தியை அடைய அரு கதை உடையவன் அல்லேன்; சாதனத்தைச் செய்கின்ற வர்களில் ஒருவனாகவும் இல்லேன்; உன்னைக் காண வேண்டும் என்கின்ற ஆசையிலே அகப்பட்டு நான் உபாயங்களை மேற்கொள்வதற்குரிய ஆற்றலுடைய வனும் அல்லேன்; இலங்கையை அழித்த அம்மானே! சந்திர மண்டலம் வரையிலும் பொருந்தும்படி மாணிக்கங் கள் பதித்த மாடங்கள் உயர்ந்திருக்கின்ற சிரீவர மங்கல நகரிலே எழுந்தருளியிருக்கின்ற, திருவாழி திருச்சங்கு களை உடையவனே! வேறு துணையில்லாத எனக்குக் கிருபை செய்தருள வேண்டும். (2)

கருடக்கொடியினையும் சக்கரப்படையினையுமுடைய வைகுந்த நாடனே! எம் கார்முகில் வண்ணனே! பொருள் அல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொண்டாய்; நான்மறைகளிலும் வல்லவர்களான தத் துவ ஞானத்தையுடைய சிரீவைணவர்கள் பலர் வாழ் கின்ற சிரீவர மங்கல நகரத்திற்குத் திருவருளைச் செய்து

அங்கே தங்கியிருக்கின்றவனே! ஒரு பிரதியுபகாரத்தை யான் அறியேன். (3)

பகைவர்களாகச் சேர்ந்த சேனையையுடைய துரியோதனன் முதலிய நூறு பேர்களும் அழியும்படி, தனியரான பஞ்சபாண்டவர்களுக்காக வஞ்சனையை யுடைய போரைச் செய்து சாம்பலாகச் செய்த என் தந்தையே! பிரளயம் கொண்ட பூமியை எடுத்து வந்த அம்மானே! தெளிந்த ஞானத்தையுடையவர்களுடைய வேத ஒலியும் யாகங்களும் நீங்காமல் இருக்கின்ற சிரீவர மங்கல நகரிலே குடியேறி வீற்றிருக்கின்றவனே! உன்னை அடைவதற்கு எந்த விதமான முயற்சியைச் செய்வேன்?(4)

பேற்றினைப் பெறுவதற்கு நான் உன்னை அழைத்தல் எனக்குத் தகுதியாகுமா? எவ்வகைப் பட்ட பகைவர் கூட்டத்துள் நீயும் ஒருவனாகச் சேர்ந்து புத்த முனியாய் நின்று வஞ்சகமாகக் காரியங்களைச் செய்த கரிய மேனியை யுடைய அம்மானே! ஐவகையான யாகங்களைச் செய்தவர்களும் பூதேவர்களுமான சிரீ வைணவர்கள் நீங்காமல் எழுந்தருளியிருக்கின்ற சிரீவரமங்கல நகரிலே எல்லாரும் கைகூப்பி வணங்கும்படியாக எழுந்தருளி யுள்ளாய்; அதனை அடியேனும் கண்டேன். (5)

பிரளயம் கொண்ட நிலத்தை வராகமாகி எடுத்த என் அப்பனே! கண்ணபிரானே! எப்பொழுதும் என்னை அடிமையாக ஆளுகின்ற தெய்வ நாயகனே! அழகிய மாணிக்கத்தினது சுடரே! தேனையுடைய மாமரச் சோலைகள் சூழ்ந்த குளிர்ந்த சிரீவரமங்கலத்திலிருப்பவர் கள் கை கூப்பி வணங்கும்படியாக எழுந்தருளியிருக்கின்ற வானமாமலையே! அடியேன் வணங்கும்படி வந்தருள் வாயாக. (6)

பரமபதத்தில் நின்றும் வந்து என் நெஞ்சினை இடமாக்கிக் கொண்ட வானவர் கொழுந்தே! இந்த உலகங்கட்கு ஒப்பற்ற பழைமையான தாயும் தந்தையுமானவனே! எல்லா உலகங்களையும் பிரளய காலத்தில் உண்டவனே! பயன் கருதாத கைங்கரியத்தையுடைய சிரீவைணவர்களுடைய வேத ஒலியும் யாகங்களும் நீங்காமல் இருக்கின்ற சிரீவரமங்கல நகரிலே எழுந்தருளியிருக்கின்ற எல்லையில்லாத புகழையுடையவனே! உனக்கு அடிமைப்பட்டுள்ள அடியேனை நீக்காமல் இருக்க வேண்டும். (7)

உன்பக்கல் அன்பு இல்லாதாரை அகற்றுவதற்காக உன்னாலே உண்டாக்கி வைக்கப்பட்ட வஞ்சனை பொருந்திய கொடிய ஐந்து இந்திரியங்களை உள்ளவாறு அறிந்தேன்; அவற்றின் தன்மையை அறிந்திருக்கின்ற என்னையும் நீக்கி கரையேற அரிதான விஷயங்களான சேற்றிலே தள்ளி விடுவாயோ என்று அஞ்சுகின்றேன்; மிக்க ஒளியையுடைய மாணிக்கங்கள் பதித்த உயர்ந்த மாடங்களையுடைய சிரீவரமங்கை என்னும் திவ்விய தேசத்தில் நித்தியவாசம் செய்கின்றவனே! என்றும் பேசுவதற்கு அரிய எந்தையே! பகாசுரனுடைய வாயைப் பிளந்தவனே! (8)

பகாசுரனுடைய வாயினைப் பிளந்தவனே! மருத மரங்களின் நடுவே போனவனே! இடபங்கள் ஏழனையும் கொன்ற என் கள்ளமாயனே! கரிய மாணிக்கத்தின் சுடரே! திருநான்மறைகளிலும் வல்லவர்களான தெளிந்த ஞானமுடைய சிரீவைணவர்கள் நிறைந்து வசிக்கின்ற குளிர்ந்த சிரீவர மங்கை என்னும் திவ்விய தேசத்திற்குள் எழுந்தருளியிருக்கின்ற எந்தையே! எனக்கு உய்யும் வகையை அருள வேண்டும். (9)

என்க்கு உபாயம் தரும் இடத்தில் உனது திருவடிகளையே உபாயமாகத் தந்தாய்; அவ்வாறு தந்த உனக்குக் கொடுப்பதற்குரிய பிரதிபுபகாரம் நான் ஒன்றனையும் உடையேன் அல்லேன்; என்னுடைய உயிரும் உன்னுடையதே; சேற்றை உடைத்தான கரும்பும் பெரிய செந்நெற் பயிர்களும் மிக்கிருக்கின்ற குளிர்ந்த சிரீவர மங்கை என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற வாசனை வீசுகின்ற பூக்கள் பொருந்திய குளிர்ந்த திருத்துழாயைத் தரித்த திருமுடியையுடையவனே! தெய்வங்கட்குத் தலைவனே! (10)

**(2) ஆரா அமுதாழ்வார் பேறுகளைத் தாராமையால் ஆழ்வார் தீராத ஆசையுடன் ஆற்றாமை பேசி அலமருதல் :** இஃது 'ஆரர் அமுதே' (5.8) என்னும் திருவாய்மொழியால் விளக்கப்படுகின்றது. வானமாமலை எம்பெருமானைச் சரணடைந்தும் அவன் முகம் காட்டவில்லை; திருக்குடந்தையில் தனக்குக் காட்சி தருவதாகத் திருவுள்ளம் கொண்டிருத்தல் கூடுமென்று எண்ணி திருக்குடந்தை சென்று ஆராவமுதன் சந்நிதியில் தளர்ந்து கிடந்து கூப்பிட்டு ''இன்னும் எத்தனை திருவாசல் தட்டித் திரியகடவேன்'' என்னும் ஆர்த்தியோடு தலைக்கட்டுகின்றார்.

எம்மானே! தெவிட்டாத அமுதே! அடியேனது உடல், உன் விஷயத்தில் அன்பு தானே தனக்கு உருவமாகிப் பின்பு தண்ணீராகி ஒரு நிலையில் நில்லாமல் கரையும்படி உருக்குகின்ற நெடுமாலே! சிறப்புப்பொருந்திய செந்நெற் பயிர்கள் சாமரையைப் போன்று வீசுகின்ற செழுமை பொருந்திய நீரையுடைய திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்தில் அழகு பொருந்திய ஒப்பனை விளங்கும்படியாகச் சயனித்திருக்கின்றவனே! என் கண்களால் நின்னைக் கண்டு அநுபவிக்கப் பெற்றேன்.[7] (1)

7. ''குளிர நோக்குதல், அணைத் தருளுதல் செய்யக் காண்கின்றிலேன்''...ஈடு.

எம்மானே! பரிசுத்தமான சொரூபத்தையுடையவனே! என்னை ஆள்கின்றவனே! எத்தகைய பெருமை பொருந்திய உருவங்களையும் விரும்பும் வகையில் மேற்கொள்ளுகின்றவனே! அழகிய ஏறே! சிவத்த பெரிய தாமரை மலர்கள் செழுமை பொருந்திய தண்ணீர் மேலே கண்கள் போன்று மலர்கிற திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்தில் அந்த அழகிய தாமரை போன்ற திருக்கண்களை மூடிக் கொண்டு உறங்குகின்றானே! நான் என் செய்வேன்? (2)

நான் என்ன காரியத்தைச் செய்வேன்? துணையாவார் வேறுயாவர்? என்னை என் செய்ய இருக்கின்றாய்? உன்னால் அல்லாமல் மற்றையோரால் ஒரு குறையும் விரும்பேன். வேலைப்பாடு அமைந்த மதிள்களால் சூழப்பட்ட திருக்குடந்தையில் திருக்கண் வளர்கின்றவனே! அடியேனுடைய ஆன்மா இந்த உடலோடு சேர்ந்து வாழ்ந்திருக்கும் நாள், தொடர்ந்து செல்லுகின்ற நாட்கள் எத்துணை உண்டோ அத்துணை நாட்கள் எல்லாம் உன் திருவடிகளைப் பிடித்துக் கொண்டே நடக்கும்படி திருவருள் புரிய வேண்டும். (3)

மேலே போகக் காணவல்ல ஆற்றலுடையவர்கள் காணவல்ல அளவுக்கும் அப்பால் போகும்படியான கீர்த்தியையுடையவனே முடிவு இல்லாதவனே! எல்லா உலகங்களையுமுடைய ஒப்பற்ற மூர்த்தியே! பக்தியினால் மேம்பட்டவர்கள் தங்கியிருக்கின்ற திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்திலே கண் வளர்கின்றவனே! உன்னைக் காணும் பொருட்டு நான் அலமந்து ஆகாயத்தை நோக்கி அழுவேன்; தொழுவேன். (4)

கலக்கததாலே அழுவேன்; தெளிவாலே தொழுவேன்; மயக்கத்தால் ஆடுவேன்; குணங்களுக்குப் பரவசப்பட்டுப் பாடுவேன்; துன்பத்தால் அலற்றுவேன்; என்னைந் தழுவி

நிற்கின்ற காதலாகிற கொடிய பாவங்களால் நீ வருவதற்குச் சம்பாவனையுள்ள பக்கத்தை நோக்குவேன்; வரக் காணாமையால் நாணங்கொண்டு தலை குனிந்திருப்பேன்; செழுமை பொருந்திய அழகிய வயல்களால் சூழப் பெற்ற திருக்குடந்தை என்னும் தில்விய தேசத்தில் திருக்கண் வளர்கின்றவனே! செந்தாமரைக் கண்ணா! வேறு கதி இல்லாதவனாய்த் தொழுகின்ற என்னை உன் திருவடி களைச் சேரும்படி ஒரு நல்விரகு பார்க்க வேண்டும். (5)

இயல்பாக அமைந்த புகழையுடைய பெரியோர்கள் நித்திய வாசம் பண்ணும் திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்தில் திருக்கண் வளர்கின்றவனே! நித்திய சூரி களுக்குத் தலைவனே! யாழின் இசையே! அமுதே! அறிவின் பயனே! அரி ஏறே! என்னுடைய பழமையான இருவினை களையும் அறுத்து உன் திருவடிகளைச் சேர்வதற்குரிய முறையை யான் அறிந்திருந்தும் தூர்க்க முடியாத இந்திரியங்களாகின்ற குழியை நிறைத்துக் கொண்டு எவ்வளவு காலம் உன்னை நீங்கி இருப்பேன்? உன்னைச் சேர்வதற்குரிய உபாயத்தைச் செய்தருள வேண்டும். (6)

அரி ஏறே! அழகிய பொன்னின் சுடரே! சிவந்த கண் களையுடைய கரிய முகிலே! நெருப்புப் பொருந்திய பவளக் குன்றே! நான்கு திருத்தோள்களையுடைய எந்தையே! உன்னுடைய திருவருளாலே என்னைப் பிரிதல் இல்லாத அடிமை கொண்டவனே! திருக்குடந்தையில் திருக்கண் வளர்கின்ற திருமாலே! இனி, தரித்திரேன்; உன்னுடைய திருவடிகளைத் தந்து என் பிறவியை நீக்குவாய். (7)

வளைந்த வாயையுடைய சக்கரத்தைப் படையாக உடையவனே! திருக்குடந்தையில் திருக்கண் வளர்ந்தருளு கின்றவனே! மாமாயனே! என் துன்பத்தைப் போக்குவாய்;

போக்கா தொழிவாய்; துணையாவார் வேறு ஒருவனையும் உடையேன் அல்லேன்; சரீரம் தளர்ந்து என் உயிரும் இந்த உடலை விட்டு நீங்கிப் போகின்ற காலமாயிற்று; தளராமல் உன் திருவடிகளை ஒருபடிப் படம் பிடித்துச் கொண்டு போவதற்கு நீ இசைய வேண்டும். (8)

என்னை உடன்படச் செய்து உனது திருவடிகளிலே சேரச் செய்த அம்மானே! அழிதல் இல்லாத நித்திய சூரிகளுக்குத் தலைவரான சேனை முதலியாருக்குத் தலைவனே! திசைகளில் எல்லாம் ஒளியை வீசுகின்ற செழுமை பொருந்திய சிறந்த இரத்தினங்கள் சேர்ந்திருக்கின்ற திருக்குடந்தை என்னும் திவ்விய தேசத்திலே, வருத்தம் இல்லாதவாறு உலகம் பரவும்படி திருக்கண் வளர்கின்றவனே! நான் காணும்படி நீ வரவேண்டும். (9)

புறத்தினும் காணும்படி வாராமல் அருவாய் மனத்தின் கண் தோன்றிக் காட்சி அளிக்கின்றவனே! அழிதல் இல்லாத திருமேனியை உடையவனே! ஆரா அமுதம் போன்று அடியேனுடைய நெஞ்சுக்குள்ளே தித்திக்கின்றவனே! தீராத வினைகள் எல்லாம் தீரும்படியாக என்னை அடிமை கொண்டவனே! திருக்குடந்தையாகிய திவ்விய தேசத்தையுடையவனே உனக்கு அடிமைப் பட்டும் இன்னமும் இங்கே அடியேன் அலைந்து திரிவேனோ? (10)

(3) **திருவல்லவாழ் செல்லுதலைத் தடுக்கும் தோழியர்க்குத் தலைவி கூறுதல்.** இது 'மானேய் நோக்கு' (5.9) என்ற திருவாய்மொழியால் விளக்கம் பெறுகின்றது. இத்திருவாய்மொழி நாயகி பாவனையில் தோழியரை நோக்கி தலைவி கூற்றாக நடை பெறுகின்றது.

மான்பார்வை போன்ற பார்வையுடைய பெண்களே! வினையேன் நாள்தோறும் மெலியும்படியாக ஆகாயம்

வரையிலும் உயர்ந்திருக்கின்ற வளவிய பாக்கு மரங்களும் தேன் பொருந்திய மல்லிகை வாசனை வீசுகின்ற தேன் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவல்லவாழ் என்ற திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற சர்வேசுவரனு டைய திருவடிகளிலே அடியேன் சேர்வது என்று சொல்? (1)

தோழிமீர்காள்! என்னை வருத்தி என்ன காரியத்தைச் செய்தீர்கள்? பொன்னைப் போன்று விளங்குகின்ற புன்னை என்ன, மகிழ் என்ன, புதிய மாதவி என்ன, இவற்றின்மேலே பொருந்தித் தென்றலானது வீசுகின்ற திருவல்லவாழ் என்னும் திவ்விய தேசத்தில் நின்ற திருக் கோலமாய் எழுந்தருளியிருக்கின்ற பிரானுடைய திருவடி களில் பொருந்திய நீற்றினை (பாதரேணுவை) நாங்கள் கொண்டு சூடுவது என்று கொல்? (2)

மலர்களைச் சூடிக்கொண்டிருக்கின்ற கூந்தலை யுடைய தோழிமீர்காள்? பிரிவின் துன்பத்தில் வருந்துகின்ற யான், மேலும் மேலும் மெலியும்படியாகப் பாடுகின்ற சிறந்த வேதங்களின் ஒலியானது கடலின் அலைகள் முழங்குமாறு போன்று முழங்க, பக்கங்களில் உயர்ந்து எழுகின்ற ஓமப் புகையானது வாசனை வீசுகின்ற தண்ணிய திருவல்லவாழ் என்னும் திவ்விய தேசத்தில் நித்தியவாசம் செய்கின்ற எம்பெருமானுடைய திருவடி களை நாள்தோறும் காண்போம் கொல்லோ? (3)

தோழிமீர்காள்! என்னை நீங்கள் நாள்தோறும் வருத்தி என்ன காரியத்தைச் செய்தீர்கள்? பசிய இலை களையுடைய நீண்ட பாக்கு மரங்களும், பலா மரங்களும், வாழைகளும், மச்சினையுடைய அழகிய மாடங்களின் மேலே புல்லிக் கொண்டிருக்கின்ற குளிர்ந்த திருவல்லவாழ்

என்னும் திவ்விய தேசத்தில் திருவனந்தான்மீது எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமானிடத்தில் உள்ளதாம் என் உயிர். (4)

சிறந்த அன்பினையுடைய தோழிமீர்காள்! சிறந்த பார்ப்பனர்களால் செய்யப்படுகின்ற வேள்விகளினின்றும் மேல் எழுந்த புகை, கரிய நிறத்தைக் கொண்டு உயர்ந்த ஆகாயத்தைமறைக்கின்ற குளிர்ந்த திருவல்லவாழ் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற வெல்லக் கட்டியைப் பழத்தை இனிய அமுதத்தை என் நலத்தை எல்லாம் கொண்ட சுடரை என் கண்கள் காண்பது என்று கொல்? (5)

கோவைக் கனி போன்ற வாயினையுடைய பெண்களே! எல்லாவிடங்களிலும் வண்டுகளினுடைய பாண்குரலும் இளந்தென்றலுமாக, மிக உயர்ந்த கிளைகளையுடைய மரங்கள் நெருங்கியிருக்கின்ற வளப்பம் பொருந்திய கானலையுடைய திருவல்லவாழ் என்ற திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற மாட்சிமை அமைந்த அழகிய பிரானாகிய வாமனனுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை, வினையேன் காண்பது எந்நாளோ? (6)

பாவை போன்ற பெண்களே! நீர் நிறைந்த பெரிய குளங்கள், உயர்ந்த தாமரை மலர்களையும், செங்கழுநீர் மலர்களையும், பெண்களினுடைய ஒளி பொருந்திய முகத்தையும் கண்களையும் போன்று ஏந்திக் கொண்டிருக்கின்ற திருவல்லவாழ் என்கின்ற திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற நாதனும் இவ்வுலகங்களையெல்லாம் உண்ட நம்பிரானுமான சர்வேசுவரனுடைய, மலர்களால் மேலே அலங்கரிக்கப்பெற்ற திருவடிகளை நாடோறும் தொழுவதற்குக் கூடுமோ? (7)

நல்ல நெற்றியையுடைய பெண்களே! எல்லாவிடங்களிலும் அரைக்கப் படுகின்ற மதுரம் பொருந்திய கரும்புகளும் வளைந்திருக்கின்ற செந்நெற்பயிர்களுமாக, பக்கங்களில் பொருந்தியிருக்கின்ற அழகிய குளங்களையும் அவற்றைச் சார்ந்து சூழ்ந்திருக்கின்ற வயல்களையும் உடைத்தாயிருக்கின்ற குளிர்ந்த திருவல்லவாழ் என்ற திவ்விய தேசத்தில் நித்தியமாக எழுந்தருளியிருக்கின்ற பிரானுடைய நிலம் தாவிய நீண்ட திருவடிகளை, நாள்தோறும் இடையீடு இல்லாமல் தொழுவதற்குக் கூடுமோ? (8)

இளமை பொருந்திய அழகிய வண்டுகள், குளிர்ந்த சோலையில் தேனைக் குடித்துக் குழலைப் போலவும் யாழைப் போலவும் இசைப் பாடுகின்ற திருவல்லவாழ் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற சுழலின் மலி சக்கரப் பெருமானுடைய தொல் அருளால், சுழல்கின்ற வளையல்கள் தங்கும்படியாக நாம் கண்டு தொழுவதற்குக் கூடுமோ? (9)

தோழிமீர்காள்! எம்பெருமானுடைய தொல் அருளை மண்ணுலகமும் விண்ணுலகமும் அநுபவித்துத் தொழும்படி நின்ற திருநகரம், எம்பெருமானுடைய கல்யாண குணங்களைக் கொண்டாடிப் பேசுகின்ற நல்ல அருளையுடைய ஆயிரம் சிரிவைணவர்கள் தங்கியிருக்கின்ற திருவல்லவாழ் என்னும் திவ்விய தேசத்தில் எழுந்தருளியிருக்கின்ற நல்லருளையுடைய நம்பெருமான் நாராயணனுடைய திருநாமங்களை, எம்பெருமானுடைய தொல்லருளால் உண்டான புண்ணியத்தாலே சொல்லுவதற்குக் கூடுமோ? (10)

(4) **ஆழ்வார்தாம் சேர்ந்து அநுபவிக்கும் நிலையைச் செய் என எம்பெருமானை வேண்டுதல்,** இது 'பிறந்த

ஆறும்' (5.10) என்ற திருவாய்மொழியால் விளக்கம் அடைகின்றது. "உன்னைப் பிரிந்து நோவு பட்டாலும், தரித்து நின்று குணாநுபவம் பண்ணுவதற்கேற்ற ஆற்றல் அருள்வாயாக" என்று அவன் திருவடிகளில் சரணம் புகுகுன்றார். "கோவிந்தன் குணம் பாடி......ஆவி காத்திருப்பேன்" (நாச். திரு. 8:3) என்ற பாசுரம் நினைவு கூர்தற்பாலது.

பிறந்தவிதமும் வளர்ந்தவிதமும்மகாபாரதப்போரிலே அணிகளை வகுத்துப் பாண்டவர்கட்குப் பல திறங்களையும் காட்டிக் காரியங்களைச் செய்து தன்னுடைய சோதிக்கு எழுந்தருளிய ஆச்சர்யமான காரியங்களும் மார்பினுள்ளே நுழைந்து என்னுடைய உயிரை உருக்கி நின்று நின்று உண்கின்றன; இந்தச் சிறந்த வான் சுடரே! உன்னையடைவது என்று கொல்? (1)

கல்யாண வார்த்தைகள் பிறந்த அளவிலே இடபங்களின் மேல் வீழ்ந்து அவற்றைக் கொன்றதும் வஞ்சனை பொருந்திய கேசி என்பவனுடைய வாயினைப் பிளந்ததும், தேன் சிந்துகின்ற கூந்தலையுடைய பெண்களோடு குரவைக் கூத்தினைக் கோத்து ஆடிய சாமர்த்தியமும் அது இது உது என்னலாவன அல்ல; உன் செய்கைகள் என்னை நைவிக்கும்; பழமையான உலகங்கட்கெல்லாம் முதல்வனே! உன்னை என்று வந்து சேர்வேன்? (2)

பூக்களை வைத்த கூந்தலையுடைய பூதனையினது பாலை உண்ட பிள்ளைத் தனத்தில் தெளிவும், வஞ்சனையினால் ஒப்பற்றவனான சகடாசுரன் இடம் விட்டுப் பெயர்ந்து சென்று அழியும்படி சிவந்த ஒரு திருவடியினால் உதைத்துத் தள்ளிய நின் சிறிய வீரமும், நெய்யை உண்ட வார்த்தை பிறந்த அளவிலே தாயானவள் கோலினைக் கையிலே எடுக்க உன் தாமரை போன்ற திருகண்களில்

நீர் மிகும்படி அச்சங் கொண்டு நின்ற நிலையும் வந்து என்னுடைய மனத்தில் உருக்கா நின்றன. (3)

வஞ்சனை பொருந்திய வேடத்தைக் கொண்டு திரிபுரத்திலே புகுந்த வீரமும், அங்குள்ள அசுரர்களோடு கலந்து அவர்களுடைய மனங்களை வேறுபடுத்தி உயிர்களைப் போக்கிய உபாயங்களும், கங்கையைத் தரித்த சடையையுடைய சிவபிரானும் உன்பக்கல் வேறு அல்லாதபடி விளங்க நின்றதும் என் மனத்திற்குள்ளேபுக்கு என் உயிரை முடித்து நிற்கின்றன. (4)

தேவர்கட்குத் தலைவனான இந்திரன் உண்ணுவதற்கு ஆயர்கள் சித்தம் செய்த உணவினைப் புசித்ததும், பல நிறங்களையுடைய பெரிய கோவர்த்தன மலையை எடுத்து மழையில் நனையாதவாறு ஆயர்களையும் ஆநிரைகளையும் காத்ததும், பூலோகத்தை முன்னே உண்டாக்கிப் பிரளய காலத்தில் புசித்து மீண்டும் உமிழ்ந்ததும், திரிவிக்கிரமனாய் அளந்ததும், வராகமாகி இடந்து சேர்ந்ததுமான ஆச்சரியம் பொருந்திய செயல்களை நினைக்குந்தோறும் என் மனம் அவற்றிலேயே நிலை பெற்று நெருப்பில் அகப்பட்ட மெழுகினைப் போன்று உருகா நிற்கும். (5)

பிரளய காலத்தில் உலகத்தைப் புசித்த ஒண்சுடரே! நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறும் நினைத்தற்கு அரியனவாய் இருக்கின்றன; ஒருபடித்தாகாத உருவத்தையுடையவனாய் அநுபவித்தற்கு உருத் தெரியாதவனாயிருக்கின்ற உன்னுடைய செயல்களை நின்று நினைக்கின்றேனாகிய நான் உன்னை எப்படி நினைப்பேன்? பாவத்தைச் செய்த எனக்குச் சிறந்தது ஓர் உபாயத்தைச் சொல்லுவாய். (6)

உண்மையோடு வந்து ஒண்சுடராய் நின்றவாறும், இன்மையோடு வந்து இருளுமாய் நின்றவாறும், என் கண்களால் காண முடியாதவாறு உள்ளே மறைந்து நின்று நீ செய்கின்றவற்றையும் எண்ண வேண்டும் என்று கொண்ட மனத்தோடு வருந்தா நின்றேன்; என் கரிய மாணிக்கமே! உன் திருஉருவினை என் கண்களால் நன்கு காணும்படி ஒருநாள் திருவருள் புரிதல் வேண்டும். (7)

அழகிய வடிவத்தோடு மகாப் பிரளயத்தில் திருக் கண் வளர்ந்தருளின படியும், திருவுந்தித் தாமரையிலே பிரமனாகிய சரீரத்திலே அந்தரான்மாவாக எழுந்தருளி யிருந்து எல்லாவற்றையும் உண்டாக்கின செயல்களு மாகிய, ஒப்பு இல்லாத உன்னுடைய தனித்த தலைமை பொருந்திய செயல்களைக் கேட்குந்தோறும் என் நெஞ்ச மானது ஒருபடிப்பட நின்று நிலை குலைந்து கண்ணீர் அருவிபோன்று விழா நின்றது; அடியேன் என்ன செய்வேன்? (8)

மூன்று அடி நிலத்தை யாசித்த விதமும், யாசித்த அவ்விடத்திலேயே நின்று கொண்டு ஆழ்ந்த கடல்களை யும் பூலோகத்தையும் தெய்வ லோகத்தையும், இரண்டு அடிகளிலே முடியும் படியாக அளந்து முடித்துக் கொண்ட முக்கியமும், அவற்றைச் சொல்லும்விதம் கேட்குந்தோறும் என் நெஞ்சமானது உன்னுடைய சீல குணத்திலேயே கரைந்து உருகாநின்றது; மிகக் கொடிய பாவியேனான நான் தேவரீரைக் கூடுவது என்று கொல்? (9)

தேவர்கள் என்ன, அசுரர்கள் என்ன, இவர்களோடு கூடித் திருப்பாற் கடலைக் கடைந்த விதமும், அதினின் றும தோன்றிய அமுதத்தைத் தேவர்களே உண்ணும்

படி, அசுரர்கள் அதனை விடக் கூடிய காரியங்களையே செய்துபோன ஆச்சரியமும் என் சரீரத்திற்குள் நுழைந்து என் உயிரை உருக்கி உண்டிடுகின்றன; நச்சு நாகணையானே! உன்னை அறியும்தன்மையைச் சொல் லாய் (10)

இந்த நான்கு திருப்பதிகங்களாலும் ஏதோ ஒரு வகையில் பயனை அடையும் வழியாகப் பிரபத்தி நெறியை குறிப்பிடுவதைக் கண்டு மகிழலாம்.

## திருப்பாவை

ஆன்மா அடையும் வழிகளாகத் திருப்பாவையில் சொல்லப் படுவனவற்றை ஈண்டு எடுத்து காட்டுவோம்.

'ஏற்ற கலங்கள்' (21) என்னும் **இருபத்தொன்றாம்** பாசுரத்தில் 'ஆற்றப் படைத்தான் மகனே!' என்று கண்ணனை விளிக்கின்றனர். ஆய்ச்சிகள் பலகாலும் கண்ணபிரானை விளிக்கும்போது, 'நந்த கோபன் மகனே!' என்று விளிப்பதைப் பாசுரங்களில் காணலாம். இதற்கு ஒரு கருத்து உண்டு. அது யாதெனில் : ''பரம பதத்தின் இருப்பைத் தவிர்ந்தும் 'பனிக் கடலில் பள்ளிக் கோளைப் பழக விட்டும்' (பெரியாழ். திரு. 5. 3: 9) நீ இத்திருவாய்ப்பாடியில் நந்த கோபர்க்கு மகனாகப் பிறந்தது இங்ஙனம் கிடந்து உறங்கவோ? எங்கள் குறையைத் தீர்க்கவன்றோ நீ ''அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்தில் பிறந்தது? (திருப். 28) ஆகவே, பிறந்த காரியத்தை நோக்க வேண்டாவோ?'' என்பதாகும். 'மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசற்கண் ஆற்றாது வந்து உன் அடி பணியுமாப் போலே' (திருப். 21) —'சரணாகதி பண்ணிக் கிடப்பது போலே' யாம்வந் தோம்: '**ஆற்றாது வந்து**'—இராமன் பிராட்டி விஷயத்தில்

அபசாரப்பட்ட காகாசுரன்மீது நான்முகன் கணையைத் தொடுத்து விட—அது எத்திசையும் உழன்றோடி எங்கும் புகலற்றுஇளைத்து விழுந்த காகம்போல் வந்து என்றபடி.

**'யாம் வந்தோம்'**—சத்துருக்கள் உன்னுடைய அம்புக் குத் தோற்று அவ்வம்பு பிடரியைப் பிடித்துத் தள்ள அவர் கள் வருமாறு போல, நாங்கள் உன்னுடைய சவுந்தரிய சௌசீல்யாதி குணங்கள் பிடித்திழுக்க வந்தோம்—உன் திருவடியை நோக்கி வந்தோம். இதில் சரணாகதி குறிப் பிட்டபடி.

'அங்கண்மா ஞாலத்து' (22) என்ற **இருபத்திரண்டாம்** பாசுரத்தில். ''பேரரசர்கள் நின் சீரிய சிங்காசனத்தின் கீழ்த் திரண்டு வந்து கிடப்பதைப் போலே, நாங்கள் வந்து 'தலைப் பெய்தோம்'—கிட்டினோம். 'திங்களும் ஆதித்யனும் எழுந்தாற்போல்' ''நின் திருக்கண்கள் இரண்டினாலும் கடாட்சிக்க வேண்டும் **அநங்யார் ஹைகளாக** வந்து அடிபணியா நின்ற எங்களை''—என் கின்றார்கள். இதிலும் பிரபத்திக் குறிப்பைக் காணலாம்.

'மாரி மழை முழைஞ்சில்' (23) என்ற **இருபத்து மூன்றாம்** பாசுரத்தில் கண்ணபிரான் திருப்பள்ளியறை யிலிருந்து எழுந்து 'சீரிய சிங்கம்' போல் புறப்பட்டு எழுந்தருளி நடையழகு காட்டி நடத்தருளிச் சிங்கா சனத்தின்மீது வீற்றிருந்து தங்களின் (ஆய்ச்சியரின்) வேண்டுகோளை ஆராய்ந்தருள வேண்டும் என்று வேண்டுகின்றனர்.

**அறிவுற்று** என்பதால் அடியோடு அறிவில்லாததொரு பொருளுக்கு அறிவு குடிபுகுந்தமை தோன்றும். சிங்கம் பேடையைக் கட்டிக்கொண்டு கிடந்து உறங்கும்போது அறிவிழந்திருக்கும் கண்ணபிரானும். 'நப்பின்னைக்

கொங்கைமேல் வைத்துக் கிடந்த மலர் மார்பனாதலால்' (திருப். 19) அடியார் காரியத்தைச் செய்ய நினைத்து உணர்வதற்கு முன்னர் அறிவற்றதொரு பொருளாக வன்றோ தன்னால் எண்ணப்படுவன்போலும்! **யாம் வந்த காரியம்:** இப்போது இவர்கள் வந்த காரியம் இயம்ப வில்லை; காரணம், சொல்லிவிட்டால் சுதந்திரனாகிய இவன் மறுத்தாலும் மறுக்கக் கூடுமென்று அஞ்சி, சற்றுத் தாமதித்து விண்ணப்பம் செய்கின்றனர் - 'சிற்றஞ் சிறு காலே'' (29) என்ற பாசுரத்தில்.

'அன்றிவ்வுலகம்' (24) என்ற **இருபத்து நான்காம்** பாசுரத்தில் கண்ணன் புறப்பட்டு வர, இவர்களும், தண்ட காரணிய முனிவர்கள் தாம் இராக்கதர்களால் தமக்கு நேரிடும் துன்பங்களைச் சொல்லி முறையிட வேண்டும் என்று நினைந்திருந்ததை மறந்து, இராமபிரானைக் கண்டவுடன் மங்களாசாசனம் பண்ணத் தொடங்கினாற் பேலே, தங்கள் மனோரதங்களை மறந்து 'இத்திருவடி களைக் கொண்டோ இவனை நாம் நடக்கச் சொல்லு வது?'' என்று வருந்தி, பண்டு உலகளந்த வரலாற்றையும் சகடம் உதைத்த வரலாற்றையும் நினைந்து வயிறெரிந்து இத்திருவடிகட்கு ஒரு தீங்கும் நேரா தொழிய வேண்டும் என்று மங்களாசாசனம் செய்கின்றனர். 'அடிபோற்றி, திறல் போற்றி, புகழ் போற்றி, கழல் போற்றி, குணம் போற்றி, வேல் போற்றி' என்று இவர்கள் நாக்கிற்கு அறு சுவை அடிசில் இடுவதுபோல் ஷட்ரசமிட்டு மகிழ்கின் றனர். 'இன்று யாம் வந்தோம்; இரங்கியருள்வாய்' என்கின்றனர். பிரபத்திக்கு அடிகோலுகின்றனர்.

'ஒருத்தி மகனாய்' (25) என்ற **இருபத்தைந்தாம்** பாசுரத்தில், ''உன்னுடைய திருக்குணங்களை நாங்கள் பாடிக்கொண்டு வந்தமையால் வருத்தமும் படாமல் சுக மாக வந்தோம். பறை என்ற வியாஜ்யத்தையிட்டு

உன்னைக் காண்பதற்காகவே வந்தோம். இதனால் நின்னைப் பிரிந்திருக்கும் துன்பம் நீங்கி மகிழ்கின்றோம்'' என்கிறார்கள். தாம் வந்த காரியத்தை,

எற்றைக்கும் ஏழேழ்
பிறவிக்கும் உன்றன்னோடு
உற்றோமே யாவோம்
உனக்கேநாம் ஆட்செய்வோம் (29)

என்று இருபத்தொன்பதாம் பாசுரத்தில் வெளியிடுகின்றனர், இப்பாசுரத்திலும் (29) பிரபத்தியிலே நோக்கு என்பது தெளிவாகின்லது.

# 6. பயனை அடைவதற்குத் தடையாய் உள்ளவைகள்

**பயனை** அடைவதற்குத் தடையாய் உள்ளவைகளை மெய்விளக்க அறிஞர்கள் 'விரோதிகள்' என்று வழங்குவர். இவையும் [1] சொரூப விரோதி, [2] பரத்துவ விரோதி, [3] புருஷார்த்த விரோதி, [4] உபாய விரோதி, [5] பிராப்தி விரோதி என்று ஐவகைப்பட்டிருப்பதாகக் கூறுவர். இவற்றையும் விளக்குவோம்.

1. **சொரூப விரோதி** : சொரூபம்: ஈசுவரனுக்குத் தொண்டு பூண்டிருத்தல். விரோதி; 'யான் எனக்கு உரியன்' என்று நினைக்கும் அகங்காரமும் 'இபபொருள் என்னுடையது' என எண்ணும் மமகாரமும் ஆகிய இரண்டும். இவை தவிர, தேகமே ஆன்மா என்ற மனமயக்கமும் எம்பெருமானை யொழிந்தவர்கள் பக்கம் சேஷம் (அடிமை) என்றிருத்தலும், தானே சுதந்திரன் என்ற எண்ணமும் இதனுள் அடங்கும்.

2. **பரத்துவ விரோதி** : பிற தெய்வங்களைப் பரம் என்றும் அவை எம்பெருமானுக்குச் சமம் என்றும் திருமாலினது அவதாரங்கள் வெறும் மனிதத் தன்மை என்றும், அர்ச்சைகளுக்குப் பலன்களைப் பயக்கும் ஆற்றல் இல்லையென்றும் கருதுதலாகும்.

3. **புருஷார்த்த விரோதி** : பகவத் கைங்கரியங்களை விட்டு வேறு புருஷார்த்தங்களில் விருப்பமும், தமக்கு விருப்பமான பகவத் கைங்கரியத்தில் இச்சையும் ஆகும்.

4. **உபாய விரோதி :** ஏனைய உபாயங்கள் சிறப்பு டையன என்ற சிறு முயற்சியால் சாதிக்கத் தக்கதாயிருத் லாலும், உபேயம் அரிய முயற்சியால் சாதிக்க யுத்தமா யிருத்தலாலும், இடையூறுகள் பலவாயிருத்தலாலும் உண்டாகும் சங்காத்திரயம் [மூன்று ஐயங்கள்] ஆகும்.

5. **பிராப்பிய விரோதி :** இப்பிறப்பிற்கு ஏதுவாகிய பிராரப்த கர்மமாக (நுகர்வினையாக) வந்த உடலுடன் சம்பந்தமும், அநுதாப லேசமுமில்லாததாய், பெருத்த தாய், திடமாயுமுள்ள பகவத் அபசார பாகவத அபசார அஸஹ்ய (பொறுக்க முடியாத) அபசாரங்களாம்.

## திருவாய்மொழி

திருவாய்மொழியில் 'வீடுமின் முற்றவும்' (1.2) 'சொன்னால் விரோதம் இது' (3.9), 'ஒரு நாயகமாய்' (4.1) கொண்ட பெண்டிர்' (9.1) என்ற நான்கு திருப்பதி கங்களும் பயனை அடைவதற்கு இடைச்சுவரான தடை களைப் பற்றிப் பேசுவன.

(1) **உலகிற்கு உபதேசம்** 'வீடு மின் முற்றவும்'(1,2) என்ற திருவாய்மொழியால் இது நுவலப் பெறுகின்றது. எம்பெருமானுடைய நன்மையையும் சம்சாரிகள் பற்றிக் கொண்டுள்ள பொருள்களின் அல்பம், நிலையின்மை முதலியவற்றையும் அருளிச் செய்து மற்றைப் பொருள் களில் வைராக்கியத்தை முன்னிட்டு இறைவனிடத்தில் பக்தியைச் செய்யுமாறு உபதேசிக்கிறார்.

பொருள்களிடத்திலுள்ள ஆசை முழுவதினையும் விடுங்கள்; அவ்வாறு விட்டு, உம்முடைய உயிரை, மோட்சவுலகத்தையுடைய இறைவனின் திருவடிகளில் சமர்ப்பியுங்கள் (1)

நிலைபெற்ற உயிர்கள் தங்கியிருக்கின்ற உடல்கள் தோன்றி மறையும் மின்னலைக் காட்டிலும் நிலையில்லா தனவாம் என்று சொல்லுமிடத்து, நீங்களே அதனைச் சிறிது நினைத்துப் பாருங்கள். (2)

'யான்' 'எனது' என்னும் செருக்காகிய இவற்றைப் பக்க வேருடன் அடியோடு அழித்து, இறைவனைச் சேர் மின்; அவ்வாறு சேர்தற்கு ஒத்ததும் மிக்கதும் இல்லை (3)

இறைவனுடைய வடிவம், அழிந்து போகின்ற உடலும் அழியாததான உயிருமாகிய இவற்றின் தன்மை யினையுடையதன்று எல்லையில்லாத ஆனந்தமயமானது; ஆகையால் வெளிப் பொருள்களிடத்துள்ள ஆசையினை நீக்கி அவனைப் பற்றுங்கள். (4)

புறம்பேயுள்ள ஆசை நீங்குமாயின், உயிரானது மோட்சத்தையடைந்ததாம்; நிலைபெற்ற மோட்சத்தை அடைய விரும்பினால், அந்தக் கைவல்ய இன்பத்தினையும் அழித்து, அவ்விறைவனுக்கே தீர்ந்து அவனைப் பற்று வாயாக. (5)

இறைவனும் பற்றையுடையவனாகி உலகத்துப் பொருள்களெல்லமாகவும் நின்றான்! ஆதலால் நீயும் பற்றையுடையையாய் அவ்விறைவனுடைய தொண்டுகள் அனைத்திலும் சேர்க. (6)

கட்டடங்க அழகினதான செல்வம் முழுவதையும் பார்த்து அஃது இறைவனுக்கு அடங்கிய செல்வமென்று நினைத்து அச்செல்வத்திற்குள் நீயும் அடங்குக. (7)

மனம் வாக்குக்காயம் ஆகிய மூன்றையும் ஆராய்ந்து பார்த்து, மற்றைப் பொருள்களினின்றும் மீட்டு இறை வனிடத்திலே சேர்ப்பாய் (8)

அவ்விறைவனிடத்தில் சென்று சேரவே, உங்களிடத்தில் வந்து சேர்ந்திருக்கின்றனவெல்லாம் தாமாகவே விட்டு நீங்கும்; அதற்கு மேல் உயிர் உடலை விட்டு நீங்கும் காலத்தை எண்ணி இருப்பாயாக. (9)

எண்ணாலே மிக்கிருப்பனவாய் (மிகப்பவாய்) ஞானத்திற்கு நிலைக்களமாய் ஞானமயமாய் அழிவற்றனவாய் இருக்கின்ற உயிர்களையும், அழிவற்ற வளவிய புகழ்களையுடைய நாராயணனது உறுதியான திருவடிகளைச் சேர்வாய். (10)

**(2) மானிடரைப் பாடாது மாதவனை ஏத்தும் எனல்.** இது 'சொன்னால் விரோதம் இது'(3.9) என்ற திருவாய்மொழியால் விளக்கம் அடைகின்றது 'கவிபாடும் உங்கள் திறமையைக் கீழான விஷயங்களில் பயன்படுத்தி அதோ கதி அடைவது தகுதியன்று; உயர்வற உயர்நலமுடையவனான எம்பெருமான் விஷயத்தில் உங்கள் கவன சாதுரியத்தைச் செலுத்துதே தக்கது' -என்று உபதேசிக்கின்றார்

நான் இந்த நன்மையைச் சொன்னால் உங்களுக்கு விரோதமாகவே இருக்கும்; ஆயினும் சொல்லுவன் கேளுங்கள்; வண்டுகள் 'தென்னாதென்னா' என்று ஒலிக்கின்ற திருவேங்கடத்தில் எழுந்தருளியிருக்கின்ற என் யானை என் அப்பன் எம்பெருமான் உளனாயிருக்க, என் நாவினின்றும் சுரக்கும் இனிய கவிகளை யான் ஒருவருக்கும் கொடேன். (1)

குளங்கள் நிறைந்திருக்கின்ற கழனிகள் சூழ்ந்துள்ள இடமகன்ற நல்ல குறுங்குடியில் சௌலப்பியம் முதலிய குணங்களைப் பிரகாசிப்பித்துக் கொண்டு நித்திய வாசம் பண்ணுகின்ற எந்தையை எந்தைக்குப் பெருமானையொழிய, தன்னை உளனாகவே கொண்டு ஒரு பொருளாக

எண்ணித் தன் செல்வத்தை மிக உயர்ந்ததாக மதித்திருக்கும் இம்மானிடத்தைக் கவிபாடுவதால் பயன் யாது? (2)

புலவீர்காள்! சிறிதும் இடையீடு இல்லாத பலப்பல ஊழிக் காலமெல்லாம் நிலைநின்று அநுபவிக்கும்படி செல்லுகின்ற வழியைத் தருகின்ற, நம்முடைய வானவர் தலைவனையொழிய, புறம்பே சென்று, மிகமிக நல்லதான உயர்ந்த கவிகளைக் கொண்டு, உங்களைத் தாழ்வாக நினைத்துச் சிறிய பனிதர்களைப் பாடுவதால் யாது பயன்? (3)

புலவீர்காள்! ஆவது என்? அழிந்து போகின்ற மனிதர்களைப் பாடிப் படைக்கும் பெரிய பொருள் எத்தனை நாட்களுக்குப் போதும்? ஒளி பொருந்திய மணி முடியைத் தரித்த விண்ணவர் தந்தையைப் பாடினால் தனக்கே உரியவனாக நினைத்துப் பிறவி அறும்படியும் செய்வான். (4)

நீங்கள் அடையக் கூடிய பயன் ஒன்றும் இல்லை; குப்பையைக் கிளறினாற் போன்ற இழிக்கத் தக்கதான செல்வத்தைப் மிக அதிகமாகப் புகழ்ந்து உங்களுடைய வாக்கின் வன்மையை இழக்கின்ற புலவீர்காள்! கவிபாடுவதற்குப் பொருளாகக் கொள்ளுவதற்கு வேண்டிய குணங்கள் எல்லாம் குறைவில்லாதவன்; நீங்கள் விரும்பின அனைத்தையும் தருவான்; குற்றமில்லாத வள்ளல் மணி போன்ற நிறத்தினை உடையவனான இறைவனைக் கவி சொல்ல வாருங்கள். (5)

புலவீர்! வாருங்கள்; உங்கள் உடலை வருத்திக் கைத்தொழில் செய்து உயிர் வாழுங்கள்; நிலை பெற்ற இந்த உலகத்தில் செல்வமுடையார் இலர்; இப்போது நோக்கி

னோம்; உங்களுடைய இனிய கவிகளைக் கொண்டு உங்கட்கு விருப்பமான தெய்வத்தைத் துதித்தால் அக் கவிகள் மிகச் சிறந்த ஒளி பொருந்திய முடியையுடைய என் திருமகள் கேள்வனுக்குச் சேரும். (6)

தகுதியான கொடையும் புகழும் எல்லை இல்லாமல் இருக்கின்றவனை, ஒப்பற்ற ஆயிரம் திருப்பெயர்களையும் உடைய பெருமானை அல்லாமல், கைகள் மேகத்தைப் போன்றவை வலிய தோள்கள் பெரிய மலைகளை ஒத்தவை என்று பூமியில் தூறுபோல் பயன் அற்று இருக்கின்ற ஒருவனைப் பார்த்து மெய் கலவாத பசும் பொய்களைப் பேசுவதற்கு யான் தகுதியுடையேன் அல்லேன் (7)

பசுமையாலும் திரட்சியாலும் செவ்வையாலும் மூங்கிலைக் காட்டிலும் மேம்மட்டுத் தனக்குத் தானே ஒத்த தோளையுடையவளான நப்பினைப் பிராட்டிக்குக் கேள்வனான இறைவனுடைய எல்லையில்லாதனவான பொருந்திய பெரிய புகழைப் பாடிக் கொண்டே சென்று உடலைக் கழித்து அவனுடைய தாளிணையில் புகுகின்ற காதலையுடையவனான யான் அழியக் கூடிய இம்மனிதர் களை என் வாய் கொண்டு என் சொல்ல வல்லேன்? (8)

வாயால் மனிதர்களைப் பாடவல்ல கவிஞன் யான் அல்லேன்; ஆராயப்பட்ட குணங்களைக் கொண்டே வள்ளலாகிய ஆழிப்பிரான் எனக்கே இருக்கின்றான். ஒளியையுடைய இவ்வுலகத்தில் இன்பத்தையும் கொடுத்து, 'பரமபதத்தையும் நீ கண்டுகொள்வாய்' என்று கைங்கரிய சுகத்தையும் முறையாகக் கொடுப்பான். (9)

காலம் உள்ளவரையிலும் இடைவிடாது நின்று இன்பதுன்பங்களை அநுபவிக்கின்ற இவ்வுடலை நீங்கிச் சென்று, பலகாலம் கழிந்த பின்னராயினும் நம்மைக்

கண்டு பிறப்பினை இவர்கள் நீக்க வேண்டும் என்று நினைத்துப் படைக்குந்தோறும் பொருந்தி உலகைப் படைத்தவனுடைய கவிஞனான எனக்குக் காலம் உள்ள வரையிலும் மற்றொருவரைக் கவிபாடுதல் தகுமோ? (10)

**(3) செல்வம் நிலையாமையும் திருமாலடிமையின் நிலை பேறும்** : இது *'ஒரு நாயகமாய்' (4.1)* என்னும் திருவாய் மொழியால் விளக்கப் பெறுகின்றது. முன் திருவாய் மொழியில், 'பிறரைத் துதி செய்யாமல் சர்வேசுவரனைத் துதி செய்யப் பாருங்கள்' என்றார். இத்திருவாய்மொழி யில் 'அங்ஙனம் துதி செய்வது சில பயனுக்காகத்தானே' என்று அவற்றினுடைய சிறுமை, நிலையின்மை முதலிய குற்றங்களின் மிகுதியை அருளிச் செய்கின்றார். இங்கு ஐசுவரியம் கைவல்யம் இவற்றின் குற்றங்களைச் சொல்லி அவற்றைத் தவிர்க்குமாறு உபதேசிக்கின்றார்.

செல்வம் அற்பமானது, நிலையாதது முதலிய குற்றங் களையுடையதால் தண்ணிது (இழிந்தது) ஆன்ப லாப மாகிய கைவல்யம் நிலைத்து நிற்பதாயினும் புருஷார்த்தம் அல்லது ஆகையாலே தண்ணிது, ஆகவே இவற்றை விட்டு எல்லா நற்குணங்களையுடையவனாய், விருப்பியவை அனைத்தையும் கொடுக்கக் கூடியவனாகிய பகவானைத் துதி செய்யுமாறு பரோபதேசம் செய்கின்றார்.

ஒற்றை வெண்கொற்றக் குடையின் நிழலிலே தன் ஆணையானது நடையின்றிச் செல்லும் படி உலகத்தை யெல்லாம் ஒரு சேர ஆண்ட பேரரசர்கள், கரிய நாயால் கவ்வப் பெற்ற காலையுடையவர்களாய்ப் பெரிய நாட்டி லேயுள்ள மக்கள் எல்லாரும் காணும்படியாக இப்பிறவியி லேயே இரந்து உண்ணும் நிலையை அடைவார்கள்; ஆதலால் திருமகள் கேள்வனான நாராயணனுடைய திரு

வடிகளைக் காலம் நீட்டிக்காமல் (மிக விரைவில்) மனத்தால் நினைத்து உய்யப் பாருங்கள். (1)

திறைப் பொருளைக் கொணர்ந்து கொடுத்து உயிர் வாழ்ந்து போமின் என்று கூறி, உலகத்தையெல்லாம் ஒரு குடையின் கீழே ஆண்ட பேரரசர்கள் இன்பத்தை அளிக்கின்ற தம் பெண்களை இப்பிறவியிலேயே பிறர் கொள்ளும்படியாகத் தாமே விட்டு, கொடிய மின்ஒளி பரக்கின்ற அடவிக்குச் சென்று,அங்கும் பகைவர்களாலே துன்புறுத்தப் படுவார்கள்; ஆகையால், ஒளி பொருந்திய திருமுடியைத் தரித்த திருமகள் கேள்வனுடைய திருவடிகளை விரைந்து சேர்மின். (2)

தம்முடைய அடிகளிலே பொருந்திய முடியினையுடையவர்களாகிய அரசர்கள் தொழா நிற்க, இடியைப் போன்ற முரசங்கள் ஒலித்துக் கொண்டிருக்க வீற்றிருந்த பேரரசர்கள் (அந்நிலை கெட்டு) பொடியோடு சேரந்த தூளியாய்ப் போவார்கள்;[1] ஆகையால், வாசனை சேர்ந்திருக்கின்ற திருத்துழாயினைத் தரித்த முடியினையுடைய கண்ணபிரானது திருவடிகளை விரைவில் நினையுங்கள். (3)

1. முடிசார்ந்த மன்னரும் மற்றும் உள்
ளோரும் முடிவில் ஒரு
பிடிசாம்ப ராய் வெந்து மண்ணா
வதும் கண்டு பின்னும் இந்த
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல்
லால் பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாம் உய்ய வேண்டும் என்
றே அறிவர் இலையே

என் பட்டினத்தார் பாடல் ஈண்டு அநுசந்திக்கத் தக்கது.

நினைப்பதற்குப் புகுந்தால், பல யுகங்களும் இந்த உலகத்தையெல்லாம் ஆண்டு இறந்து போனவர்கள், கடல் எக்கரிலே உள்ள நுண்மையான மணல்களைக் காட்டிலும் பலர் ஆவர்; அவர்கள் அனைவரும் தாங்கள் வாழ்ந்த வீடுகள் இருந்த இடமும் தெரியாதபடி அழிந் தார்களேயன்றி, வேறு ஒன்றையும் பார்த்தோம் இல்லை; ஆதலால், பனைமரம் போன்ற கால்களையுடைய மதம் பொருந்திய யானையைக் கொன்ற கிருட்டிணனது திருவடிகளை வணங்குங்கள். (4)

திருவருள் புரிதல் வேண்டும் என்று கூறுகின்ற அழகிய மிருதுவான கூந்தலையுடைய பெண்களோடு அழகிய குளிர்ந்த பரந்த பூக்களாலான படுக்கையிலே சேர்க்கை யால் உண்டான இன்பமாகிய அமுதை உண்டவர்கள் அந்நிலை கெட்டு, துணி முன்னே தொங்கவும் பெண்கள் பலர் இழித்துக் கூறவும் செல்லுவார்கள்; ஆதலால் நீல மேனியையுடைய நம் மாயவனது திருநாமத்தைச் சொல்லி வாழுங்கள். (5)

வாழ்ந்திருந்தவர்கள் வாழ்ந்தது பெரிய மழை நீரிலே தோன்றுகின்ற குமிழி போன்று[2] அழிந்து அழிந்து நரகத் திலே விழுந்து அழுந்தினார்கள் என்பதே; அஃது அல்லாமல், அன்றுமுதல் இன்றுவரையிலும் வாழ்ந்த வர்கள் ஒரே தன்மையாக வாழ்ந்தே இருந்தார்கள் என்பதும் இல்லை; ஆதலால் நிலை பெற்ற பேற்றினைப் பெற வேண்டும் என்று இருந்தீர்களாகில், ஆழ்ந்து நிறைந்திருக்கின்ற கடலைப் படுக்கையாகவுடைய இறை வனுக்கு அடியவர் ஆகுங்கள். (6)

2. 'படுமழை மொக்குளில் பல்காலும் தோன்றி
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணி'
என்பது நாலடியார், 27

பொருந்திய இனிய அந்த அறுசுவையோடு கூடின உணவை உண்டு வயிறு நிறைந்த பின், தூய்மை பொருந்திய மெல்லிய சொற்களைப் பேசுகின்ற பெண்கள் இரந்து கூறப் பின்னரும் உண்பார்கள்; அவ்வாறு உண்டவர்கள், அந்நிலை கெட்டு, "எமக்கு ஒரு பிடி அன்னம் கொடுமின்" என்று தட்டித் திரிவார்கள்; ஆதலின் திருத்துழாய் மாலையைத் தரித்த திருமுடியையுடைய ஆதிஅம் சோதியான இறைவனுடைய கல்யாண குணங்களை அநுபவிக்கப் பாருங்கள். (7)

நல்ல குணங்கள் பொருந்திய நிறைந்த புகழையுடைய மன்னர்கள் தர்மம் செய்தலாகிய கடமையை மேற்கொண்டு உலகத்தாரோடு பொருந்தியிருந்து உலகத்தையெல்லாம் தனக்கே உரியதாக ஆக்கி அரசாண்டாலும், அந்த அரசச் செல்வம் இறைவன் திருவருளால் வந்தது என்று நினையாதவர்கள் செவ்வையை உடைத்தான இன்பத்திலே நிலை பெற்றிருப்பார்களேயாயினும் அந்த இன்பத்தினின்றும் நீங்குவார்கள்; ஆதலால் படத்தைக் கொண்ட பாம்பினைப் படுக்கையாகவுடைய இறைவனது திருநாமத்தை நாவினால் நவிற்றுங்கள்; அங்ஙனம் நவிற்றினால், பின்னர் மீண்டு வருதல் இல்லாத அந்தமில் இன்பத்து அழிவில் வீட்டினை அடையலாம். (8)

பூமியையும் பொருந்திய பல ஆபரணங்களையும் அவற்றிலுள்ள வாசனையோடு நீக்கி ஐந்து இந்திரியங்களையும் வென்று தூறு மண்டும் படி இவ்வுடலை ஒறுத்துத் தவம் செய்தவர்களும் அவ்விஷயத்தில் அவனது திருவருள் இல்லாதவர்கள். குடிகள் பொருந்தியிருக்கின்ற இனிமையையுடைய சுவர்க்க மோகத்தை அடையினும் மீண்டு வருவார்கள்; ஆதலால், நிலைபெற்ற கொடியிலே கருடப்பறவையையுடைய திருவடிகளைச் சேருங்கள்;

சேர்ந்தால், மீண்டு வருதல் இல்லாத தன்மையையுடைய உலகத்தைப் பெறலாம். (9)

(மனம்) தன்னைச் சார(தம்) வசப்பட்ட அம்மனத்தினை ஞான சொரூபமாக உள்ள ஆன்மாவோடு சேர்ந்து நன்றாகப் பார்த்து எல்லாப் பற்றுகளையும் அடியோடே விட்ட, குறுகிய ஆன்ம அநுபவத்தையே மோட்சமாக நினைத்திருக்கும் ஞானிகளுக்கும் பகவானை உபாயமாப் பற்றுதல் இல்லையாகில் சிறிய பேறுகளை நினைப்பதற்குக் காரணமான ஒரு பற்று உண்டாகும்; அதற்கு மேல், அந்த மோட்சமும் இல்லை; ஆனபின்பு, ஒருவித குற்றமும் இல்லாத இறைவனை அடைந்து அகலா தொழிவானேயானால் அதுவே பரமபுருஷார்த்தமான மோட்சமாகும்; ஆதலால் மேற்பாசுரத்தில் கூறிய 'அண்ணல் கழல்கள்குறுகுமினோ' என்ற அதுவே மோட்சமாகும். (10)

(4) **கர்ம வசத்தால் கிட்டிய பந்துக்களை விட்டு எல்லா வகையிலும் உறவினனான திருமாலைச் சேரும் எனல். இது** 'கொண்ட பெண்டிர்' (9.1) என்ற திருவாய்மொழியில் விளக்கம் பெறுகின்றது.

சர்வேசுவரனே இயல்பாக உள்ளபந்து; அவனைத் தவிர எல்லோரும் ஒருக் காரணம் பற்றி வந்த பந்துக்கள். ஆகவே மற்றையோரைவிடுத்து அவனையே பற்றி உய்ய வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார் இப்பதிகத்தில்.[3]

3. மற்றையோர் இரட்சகர் அல்லர்; நாராயணனே இரட்சகன் என்றார் இதுகாறும். இனி, மற்ற உபாயங்களும் உபாயம் அன்று; அவனே உபாயம் என்கின்றார். சித்தோபாயத்தை வற்புறுத்திய படி.

மணம் செய்து கொள்ளப்பெற்ற பெண்களும் மக்களும் உறவினர்களும் தாயாதிகளும் நட்பினர்களும் ஆகிய அனைவரும், கையில் உள்ள பொருள் உண்டாகக் கண்டபோது அன்புள்ளவர்களாகக் காணப்படுவார்கள்; அஃது இல்லாத போது அன்புள்ளவர்களாக இருப்பது இல்லை; ஆதலால் பத்துத் திசைகளிலுமுள்ள எல்லாப் பொருள்களையும் பிரளய காலத்தில் உண்டு காப்பாற்றிய உபகாரகனாகிய எம்பெருமானுக்கு அடியாராகி உய்யுங்கள்; இன்றேல், பொருந்திய துணை வேறும் ஒன்றும் இல்லை. (1)

தாயாதிகளும் மற்றையோரும் துணையாயும் சார்வாயும் இருப்பவர்கள் போலக் காட்டி, சேர்ந்திருக்கின்ற செல்வம் இருக்குமேயானால் அட்டைகளைப் போன்று ஈரம் அறச் சுவைத்துவிடுவார்கள்; ஓர் அம்பினால் மராமரங்கள் ஏழனையும் துளைவி செய்த காளமேகம் போன்ற எம்பெருமானைத் தஞ்சமாகப் பற்றி உய்விக்கப் போமின்; அவ்வாறு இன்றி வேறு சிலரைப் பற்றினால் ஒரு பயனும் இல்லை. (2)

கையிலே பொருள் இருப்பதைக் கண்டால் வணக்கம் என்று கூறி, யாதாயினும் ஒன்றினைப் பெற்றுக் கொண்டு அகன்று போவர்; அறிவின்மையையும் துன்பத்தையும் உண்டாக்குகின்ற வறுமையைக் கண்டால் 'அந்தோ!' என்று இரங்குவாரும் இல்லை; ஆதலால் கண்டவர் அனைவரும் கலங்கும்படியான தொழில்களைச் செய்கின்ற அசுரர்கள் அழியும்படியாக வடமதுரையிலே அவதரித்த கண்ணபிரானுக்கு[4], அருளைப்பெறுவதற்குரிய அடியவர்

4. ''வடமதுரைப் பிறந்த'' (பாசுரம் 3,4,5,6.7,8, 9,10) என்று வருவதால் இப்பதிகத்தை வடமதுரையை மங்களாசாசனம் செய்ததாகக் கொள்ளலாம்.

களாகி உய்வதே நலம்; அங்ஙனம் இன்றேல், பாதுகாவல் வேறு இல்லை. (3)

செல்வம் நீங்கி வறியர் ஆகுங்காலத்தில் நமக்குப் புகல் ஆவர் என்று நினைத்து, (செல்வம் உள்ள காலத்திலே) செல்வம் முதலியவற்றால் வசப்படுத்திக் கொள்ளப் பட்டவர்சள், கடனைத்திரும்பப் பெற்றவர்கள் போன்று ஓர் உதவியும் செய்யமாட்டாதே அல்பர் ஆவார்கள்; நம்மால் செல்வம் முதலியன கொடுக்கப்படாவிட்டாலும் உதவி செய்யமாட்டாத அந்த அல்பரே ஆவர்; ஆதலால் நன்றி கெட்டவர்களைப்பற்றிப் பேசுவதால் பயன்யாது? வடமதுரையின் கண்ணே வந்து அவதரித்த கண்ண பிரானுடைய சீரிய கல்யாண குணங்களே நமக்குத் தஞ்சம் என்று நினைத்தும் கூறியும் உய்ந்து போமின்; அங்ஙனம் போவது ஒழிய வேறு பயன் இல்லை. (4)

சதிரை உடையோம் என்று தங்களைத் தாங்களே இசைந்து இனிய வார்த்தைகளைப் பேசுகின்ற மகளிரிடத்தில் இனிய இன்பங்களை அநுபவித்தவர்களே, அவ் இனிய போகம் அவர்களை விட்டுக் கழிய (நீங்க என்றபடி) வேறு ஒரு துன்பத்தை அடைவார்கள்; ஆதலால், கண்டார் அஞ்சத்தக்க காரியங்களையே செய்கின்ற அசுரர் அழியும்படி வடமதுரையிலே அவதரித்தவனான கண்ணபிரானுக்கு எதிர் கொள்ளுகின்ற அடியவர்களாகிப் பிழைத்துப் போவதே இன்பமாவது; அதனை ஒழிய வேறு இன்பம் இல்லை. (5)

இவ் உலகத்தில் இன்பம் என்பது சிறிதும் இல்லை; அந்தோ! நிலை நின்ற பேற்றினை நினையாமல் பழங்காலத்தில் இருந்தவர்கள் எத்தனை பேர் பிறந்து இறந்து ஒரு பயனும் இன்றிக் கழித்தார்கள்? ஆதலால், பழைய நகரமாகிய வளப்பம் பொருந்திய வடமதுரையிலே வந்து

அவதரித்த கண்ணதரானுடைய சீரிய கல்யாண குணங் களையே சொல்லி உய்ந்து போதலை ஒழிய, சுருங்கச் சொல்லலாவது வேறு ஒன்று இல்லை. (6)

இதனைப் போன்றது ஒரு பெரிய உபாயம் வேறு ஒன்று இல்லை; சுருங்கச் சொல்லுகின்றோம்; வேறு வழி களைத் தேடித் திரிந்து அலைய வேண்டா; பெரிய இவ் வுலகத்திலே உள்ள எல்லா உயிர்கட்கும் இறைவனைப் பற்றிச் சிந்தித்தலாகிய இஃது ஒன்றே போதியதாம்; ஆதலால். வடமதுரைப் பிறந்தானாகிய எங்கள் கோபால கிருஷ்ணனுடைய குற்றம் இல்லாத கல்யாண குணங்களை நாள் தோறும் சொல்லிக் கொண்டு வாழ்தலே குணமாகும்; இவ்வாறு சொல்லிக் கொண்டு வாழ்தல் குற்றம் ஆகாது. (7)

மேல் பாசுரத்தில் கூறியபடி வாழ்தலாகின்ற இஃது அன்றோ குணமாவது; ஐயோ! மாயவனாகிய இறைவ னுடைய திருவடிகளைத் துதித்துக் காலத்தைக் கழிக்க நினைக்க கூடியவர்களான பெரியோர்களுடைய வாழ்ச் சிக்குத் துணை ஆவதற்காக வடமதுரையிலே வந்து திரு வவதரித்தவனுடைய வளவிய புகழையே ஆசைப்படும் துணையாகக் கொண்டு வாழ்வதே மேலான வாழ்வாம்; இவ்வாழ்வினைக் காட்டிலும் மேம்பட்ட வாழ்வு யாது ஒன்றும் இல்லை. (8)

பகவானுக்கு வேறுபட்டதாய் இருப்பது ஒரு விஷயத்தைப பற்றிக் கொண்டு, அதனைக் காட்டிலும் மேம்பட்டதாய் இருப்பது ஒரு விஷயம் வேறு இல்லை என்று அதனையே காக்கும் கடவுளாக நினைத்து, காது களின் தொளையைப் பெருக்கப் புக்கு மூளி ஆக்கிக் கொள்வதைப் போன்று, தண்ணிய முறையையுடைய வாழ்க்கையையும் இழந்து விடுவர்; பெரிய துகிற்கொடிகள் கட்டப்பெற்றிருக்கும் மாடங்களையுடைய வடமதுரை

யின்கண் அவதரித்த மாலை அணித்த தோள்களையுடைய கண்ணபிரானை அல்லாமல் பாதுகாக்கக் கூடிய பொருள் வேறு ஒன்றும் இல்லை. (9)

கண்ணபிரானாகிய அவன் அன்றிப் புகல் ஆவார் வேறு ஒருவரும் இலர் என்னும் அந்த உண்மை நிலை நிற்பதற்காகவும், பூபாரத்தைப் போக்குவதற்காகவும் வந்து வடமதுரையிலே அவதரித்தான்; மானிடர்காள்! உங்களுடையதாக நினைத்திருக்கின்ற பொருள் உளதாகில் உறுதியாக அதனை அவன் திருவடிகளில் சேர்த்து உய்ந்து போமின்; வேறு ஒன்றும் ஆலோசிக்க வேண்டா; உங்களுடையனவாக நீங்கள் நினைத்திருக்கும் எல்லாப் பொருள்களும் அவனுடையனவேயாகும்; அங்ஙனம் அன்றி இதற்கு மாறாக ஒன்றும் இல்லை. (10)

## திருப்பாவை

தடைகளை நீக்க வேண்டுமானால் எம்பெருமானையே பற்ற வேண்டும். திருவாய்மொழிப் பாசுரங்கள் இதனையே வற்புறுத்துவதை மேலே கண்டோம். திருப்பாவையில் 16 முதல் 20 பாசுரங்கள் பகவத் சொரூபமாகிய இரட்சகத்துவத்தையே குறிப்பிடுவதாக நம் முன்னோர் குறித்துப் போயினர். இக்கருத்துகளை ஈண்டு விளக்குவோம்.

'நாயகனாய் நின்ற' (16) என்ற பதினாறாம் பாசுரம் ஆயச் சிறுமிகள் நந்தகோபர் திருமாளிகை வாசலில் சென்று சேர்வதைக் குறிப்பிடுகின்றது. திருக்கோயில் காப்பானையும் திருவாயில் காப்பானையும் நோக்கித் திருக்காப்பு நீக்குமாறு' இரங்குவதைக் குறிப்பிடுகின்றது.

கோபுரவாசல் போன்ற வெளிப்புறத்து வாசலைக் காப்பவன்-கோயில் காப்பான் என்றும், கொடி மரத்தின் அருகிலுள்ள வாசல் போன்ற உட்புறத்து வாசலைக் காப்பவன் வாசல் காப்பான் என்றும் இவண் கூறப் பெறுகின்றனராகக் கொள்ள வேண்டும். பெரிய இடத் துக்குப் போகின்றவர்கள் துவார பாலகர்களின் புருஷ காரம் முதலில் தேவைப்படுவதை அறிவதைப் போல இவர்களும் அறிகின்றனர். ஆகவே, அவர்களின் தயவை வேண்டி நிற்கின்றனர்.

திருப்பாவையில் 'நீராட்டம்' என்ற குறிப்பு ஐந்து பாசுரங்களில் வருகின்றது. 'நீராடப் போதுமினோ' (1), 'நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்' (3), 'நாங் களும் மார்கழி நீராட மகிழ்ந்து' (4), 'இப்போதே எம்மை நீராட்டு' (20), 'மார்கழி நீராடுவான்' (26) என்று வந்துள்ளமையைக் காணலாம். ஆக, இவற்றில் ஆயச் சிறுமிகளின் குறிக்கோள் 'நீராடுதல்' என்பது தெரிய வந்தாலும், அவர்கள் நீராடும் இடமான பொய்கைக்கோ யமுனை ஆற்றுக்கோ சென்றதாகப் பாசுரங்களில் குறிப்பு இல்லை.

ஆனால் நந்தகோபருடைய திருமாளிகைக்குச் சென்று அங்கு 'நப்பின்னைக் கொங்கைமேல் வைத்துக் கிடந்த மணிமார்பனை' (19) உணர்த்தி, அவர்களைத் தோத்தி ரம் செய்து, 'சிற்றஞ்சிறு காலை' எழுந்து இங்கு நாம் வந்தது எதற்காகவென்னில், 'உன்றன்னோடு உற்றோமே யாவோம், உனக்கே நாம் ஆட் செய்வோம்' (29) என்று விண்ணப்பம் செய்வதற்காகவே என்று தலைக்கட்டியுள்ள தைக் காண்கின்றோம். இங்ஙனம் திவ்விய தம்பதிகளிடம் சென்று சேவிப்பதுதான் இவர்கள் கொண்ட 'மார்கழி நீராட்டம்' என்பது தெளிவாகின்றது. ஆகவே, பாசுரங் களில் குறிப்பிடப் பெற்ற நீராட்டம் தண்ணீரில் தோய்

வது அன்று எனவும், பகவானோடு சேர்தலையும், பாகவதர்களோடு சேர்வதையுமே நீராட்டம் என்று சொல்லப்பட்டுள்ளது என்பதை அறுதியிடுவதாக அமை கின்றது. மூவாயிரப்படியில் பெரிய வாச்சான் பிள்ளை யும் ஆறாயிரப்படியில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் இக் கருத்தைத் தெளிவாக விளக்கியுள்ளனர்.

'அம்பரமே தண்ணீரே' (17) என்ற பதினேழாம் பாசு ரத்தில் நந்தகோபர், யசோதைப் பிராட்டி, கண்ண பிரான், நம்பி மூத்த பிரான் (பலராமன்) ஆக நான்கு பேர் எழுப்பப்பெறுகின்றனர். இங்கு ''உம்பியும் நீயும் உறங்கேல்'' என்பது பகவத் சேஷத்துவமும் பாகவத சேஷத்துவமும் ஒன்றை விட்டு ஒன்று பிரிந்திரா என்கிற தத்துவத்தை நினைவூட்டுவதாக அமைகின்றது.

'உந்துமத களிற்றன்' (18) என்ற பதினெட்டாம் பாசுரத்தில் கண்ணபிரானின் திவ்விய மகிஷியான நப்பின்னைப் பிராட்டியை எழுப்புகின்றனர். கிருட்டிணா வதாரத்தில் நப்பின்னைப் பிராட்டியே பிரதான மகஷி யாகக் குலாவப்படுகின்றாள். ஆழ்வார் பாசுரங்களில் உருக்குமிணிப் பிராட்டியைப் பற்றி மூன்கு நான்கு இடங் களில் மாத்திரமே உள்ளது; நப்பின்னை பற்றிய குறிப்பு பல நூறிடங்களில் வருகின்றது. நப்பின்னை கும்பர் என்பாரின் மகள் 'கும்பர் திருமகளாரே' என்றழைக் காமல் 'நந்தகோபாலன் மருமகளே' என்றழைத்தமைக்குக் காரணம் என்ன? பெண்டிர்க்குப் பிறந்தகத்துச் சம்பந்தத்தைக் காட்டிலும் புக்ககத்துச் சம்பந்தமே பெருமையுடைய தாயிருக்கும் என்பதால்.

'குத்துவிளக்கெரிய' (19) என்ற பத்தொன்பதாம் பாசுரத்தில் நப்பின்னை, கண்ணன் என்ற திவ்விய தம்பதி

களின் காலிலும் விழுந்து இரக்கின்றனர் ஆயச் சிறுமிகள். நப்பின்னைப் பிராட்டி கோபியர்மீது இரக்கம் கொண்டு (சாதிப்பற்று காரணமோ?) கதவைத் திறக்கப்புக, அதனைக் கண்ணபிரான் "இவர்கள், 'உம்பர்கோமானே. உறங்காதெழுந்திராய்' (17) என்று என்னையன்றோ முதலில் எழுப்பினார்கள்? நாமன்றோ முதலில் இவர் கட்குக் காரியம் செய்யவேண்டும்? இவள் முற்படுவது சரியன்று" என்று அவளை எழுந்திருக்க வொட்டாமல் தகைந்து தான் எழுந்திருக்கத் தொடங்கினான். அவள் கண்ணனை நோக்கி, 'பிரானே! நீ வீண் சண்டைக்கு வருவது நியாயமன்று; உன்னை எழுப்பின உடனே நீ எழுந்து காரியம் செய்யத் தொடங்கியிருந்தால் அது தகுதியுடையதாயிருக்கும்; அப்போது நீ வாளா கிடந்தாய்; இப்போது 'நந்தகோபாலன் மருமகளே! நப்பின்னாய்... கடைதிறவாய்'(18) என்று என்னை எழுப்பினபோது 'நான் எழுந்து திறக்க முற்படும்போது நீ என்னைத் தடுப்பது தகுதியன்று' என்றாள். அதற்குக் கண்ணபிரான் 'நீ சாத்திரப் பொருள் உணராமல் வீண் வழக்குத் தொடர்வது தகாது; எப்போதும் உனக்குப் புருஷகாரச் செயலில் சம்பந்தமேயன்றி, காரியம் செய்வதில் எனக்குத் தான் உரிமையுள்ளது; உனக்கு இல்லை' என்றான். அதற்குப் பின்னைப் பிராட்டி, 'வீடுபேறு நல்குவதாகின்ற பெரிய காரியத்தில் எனக்குத் தகுதி இல்லையாயினும், கதவைத் திறப்பதாகிற இச்சிறு செயலில் கூடவா எனக்குத் தகுதி இல்லை? வீண் வம்புப் பேச்சு பேசாதே; என்னை அழைத்தவர்கட்கு நான்தான் திறப்பேன்' என்று சொல்லி வன்மையாக எழுந்திருக்கப் புக்காள். 'என் அடியார்க்கு நான்தான் காரியஞ்செய்வேன்' என்று சொல்லி அவளைத் தகைகின்றான் கண்ணபிரான். இங்ஙனம் அறைக்குள்ளே சிறுபோர் நிகழ்த்திக்கொண்டிருக்கும் காட்சியை ஆயச் சிறுமியர் கதவுத் தொளையின் வழியே காண்கின்றனர்.

உடனே அந்தத் திவ்வியத் தம்பதிகளான இருவர் காலிலும் விழுந்து இரக்கின்றனர் என்பது ஈண்டு அறியப்படும்.

**மெத்தென்ற பஞ்ச சயனம்** :மென்மை, குளிர்ச்சி, நறுமணம், வெண்மை, விரிவு என்றவகைச் சிறப்புகள் பொருந்திய படுக்கைக்குப் 'பஞ்ச சயனம்' என்று பெயர். இந்த ஐவகையில் மெத்தென்றிருத்தல் சேர்ந்திருந்தாலும் தனிப்பட 'மெத்தென்ற' என்று சிறப்பிக்கப் பெற்றதற்குக் காரணம் அதன் முக்கியத்துவத்தைக் காட்டுவதற்காக. 'மிக்க இறை நிலையும் மெய்யாம் உயிர் நிலையும்'என்ற பாசுரத்தால் தெரிவிக்கப் பெற்ற அர்த்த பஞ்சகமே இங்கு மெத்தென்ற பஞ்சசயனமாகக் கருதப்பெற்றதாகவும் கொள்ளலாம். இந்தப் பஞ்ச சயனம் சாத்திரங்களால் தாங்கப் பெறுகின்றது என்பதைக் கோட்டுக்கால் கட்டில் என்ற தொடர் குறிப்பிடுகின்றது.

'முப்பத்து மூவர்' (20)என்கின்ற இருபதாம் பாசுரத்திலும் கண்ணபிரான், பின்னைப் பிராட்டி என்ற இருவரையுமே எழுப்புகின்றனர் ஆயச்சிறுமியர்கள். இதற்கு முன்னுள்ள பாசுரத்தில் கண்ணபிரானுடைய சிருங்கார ரசவிதக்தனாயிருக்கும் தன்மையைச் சொல்லி அநுபவித்தார்கள். இப்பாசுரத்தில் அவனது பெரு மிடுக்கைச் சொல்லி அநுபவிக்கின்றார்கள். விசிறியையும் கண்ணாடியையும் உன் மணாளனையும் தந்து நீராட்டுவிக்கவேண்டுமென்று வேண்டுகின்றனர். நீராட்டு என்பது 'சேர்ப்பி' என்பது பொருள். பகவத் சந்நிதியில் கைங்கரியமே புருஷார்த்தம் என்பது காட்டப் பெறுகின்றது.

'செப்பன்னமென்முலை'என்று தொடங்கி நப்பின்னைப் பிராட்டியின் உறுப்புகளின் அழகு பேசப் பெறுகின்றது. ஸ்ரீவசனபூஷணத்தில் பிராட்டி'சேதநனை அருளாலே

திருத்தும்; ஈசுவரனை அழகாலே திருத்தும்' என்று அருளிச் செய்திருப்பதை ஈண்டு நினைவு கூரலாம்[5]. ஸ்ரீவசனபூஷணத்தில் சாதித்தது பெரிய பிராட்டியைப் பற்றியே அன்று என்று ஐயுற வேண்டாசபடி 'நப்பின்னை நங்காய்! திருவே! என்று அருளிச் செய்யப்பட்டது. இவளையும் திருவின் அம்சபூதையாகக் கொள்ள வேண்டும் என்பது குறிப்பு.

**இறுவாய்** : இங்ஙனம் அர்த்த பஞ்சக ஞானம் பிறந்து, முமுட்சு நிலையை அடைந்து சம்சாரத்திலே இருக்கும் சேதநனுக்கு வீடுபேறு அடையும் அளவும் மீண்டும் சம்சாரம் மேலிடாதபடி காலட்சேபம் பண்ணும் முறையையும் பிள்ளை உலக ஆசிரியர் விளக்குகின்றார்.

வருணாசிரம முறையிலும் வைணவத்துவ முறையிலும் தீதின்றி வந்த பொருள்களைச் சம்பாதித்து அவற்றைப் பகவத் விஷயத்திலே நிவேதித்து தானும் உகந்து கொண்டு பாகவதர்கட்கும் விநியோகித்து உடலைப் போற்றுவதற்கு மாத்திரம் பிரசாதமாகக் கொண்டு வாழ்க்கை நடத்த வேண்டும்.

மிக்க சிரமத்துடன் தத்துவ ஞானம் பிறபித்த ஆசாரியன் சந்நிதியிலே மிகவும் பணிவுடன் அவனுடைய விருப்பத்திற்கிணங்க இருந்து வருதல் வேண்டும்; தன்னுடைய ஞானமின்மையை அநுசந்திக்க வேண்டும்.

எம்பெருமான் சந்நிதியில் தன்னுடைய தாழ்வை அநுசந்திக்க வேண்டும். வைணவர்கள் சந்நிதியில்தான் பகவானுக்கு வசப்பட்டிருத்தலைப் புலப்படுத்திக் கொள்ள

5. ஸ்ரீவசனபூஷணம்—சூத்திரம்—14 (புருடோத்தம நாயுடு பதிப்பு)

வேண்டும். சம்சாரிகளின் முன்னிலையில் தன்னுடைய உயர்ந்த நிலையை அநுசந்திக்க வேண்டும். அடைய வேண்டிய விஷயத்தில் விரைவும், உபாயத்தில் நம்பிக்கையும், விரோதியில் பயமும், உடலில் பற்றற்ற நிலையும், ஆர்த்தியும், சொரூபத்தில் உணர்த்தியும், தன்னைக் காத்துக் கொள்வதில் ஆற்றலின்மையும், உத்தேசிய விஷயத்தில் கௌரவமும், உபகார விஷயத்தில் நன்றியுடனிருத்தலும், ஈடேற்றுவதால் அறிவுடைமையும், அநுவர்த்திக்கையும் வேண்டும்.

இங்ஙனம் ஞான அநுட்டானங்களுடன் கூடி வாழ்க்கை நடத்துபவன் ஈசுவரனுக்குப் பிராட்டிமாரிலும், நித்திய முக்தரிலும் விசேஷ விருப்பமுடையவனாகக் கருதப்பெறுவான்.

# பின்னிணைப்பு—1

## பயன்பட்ட நூல்கள்

### (அ) தமிழ் நூல்கள்


*அண்ணங்கராசாரிய சுவாமிகள்:* **நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம் - திவ்வியார்த்த தீபிகை** *(கிரந்தமாலா அலுவலகம், சின்ன காஞ்சிபுரம்)*

*அழகிய மணவாளப்பெருமாள் நாயனார்:* **ஆசாரிய ஹிருதயம் - மணவாள மாமுனிகள் வியாக்யானம்-தமிழாக்கம்** *(சென்னைப் பல்கலைக்கழகம் சென்னை - 5)*

*ஆழ்வார்கள்:* **நாலாயிரத்திவ்விய பிரபந்தம்** *(மர்ரே கம்பெனி, ராஜம் பதிப்பு)*

*ஆழ்வார்கள்:* **நாலாயிரத்திவ்விய பிரபந்தம்** *(கி. வேங்கடசாமி ரெட்டியார் பதிப்பு, திருவேங்கடத்தான் திருமன்றம் 32, பெருமாள் முதலித் தெரு, சென்னை - 14)*

*கிருஷ்ணவேணி அம்மையார்:* **செம்பொருள்'** *(திருமலை - திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி - 517 001*

*சீராமதேசிகாசாரியார், எஸ்:* **தேசிகப்பிரபந்தம்** *(ஒப்பிலியப்பன் சந்நிதி, கும்பகோணம்)*

*சுப்புரெட்டியார், ந:* **மலைநாட்டுத் திருப்பதிகள், பாண்டி நாட்டுத் திருப்பதிகள், சோழநாட்டுத் திருப்பதிகள், (இரண்டு பகுதிகள்), தொண்டைநாட்டுத் திருப்பதிகள், வடநாட்டுத் திருப்பதிகள்** *(பாரி நிலையம் 184, பிரகாசம் சாலை, சென்னை - 108)*

| | | |
|---|---|---|
| சுப்புரெட்டியார், ந | : | முத்தி நெறி (பாரிநிலையம் சென்னை—108) |
| சுப்புரெட்டியார், ந | : | கவிதை சம்பந்தம் (பாரி நிலையம், சென்னை—108 |
| பாரதியார் | : | பாரதியார் கவிதைகள் எஸ். ஆர். சுப்பிரமணியபிள்ளை 5. பிலிம்ஸதெரு, சென்னை-600 001) |
| பிள்ளை உலக ஆசிரியர் | : | அஷ்டாதசசஇரகசியங்கள் ஸ்ரீ வைஷ்ணவ சுதர்சனம், புத்தூர் அக்கிரஹாரம் திருச்சி-17) |

**ஆங்கில நூல்கள்**

| | | |
|---|---|---|
| Srininasa chari | : | Philosophy of Visistaduaitha (adyar) Libray Madras -20) |
| Subbu Reddiar N. | : | Religion and Philosophy of Nalayira Divya Prepandham with Special Reference to Nammalvar (S.V.Uninersity, Tirupati-2) |
| Subbu Reddiar N. | : | Collected Papers. (Paari Nilayam Madras-108) |

## பின்னிணைப்பு—(2)
## பொருட்குறிப்பு அடைவு

### அ



### ஆ



### இ



### ஈ



### உ

# பிழை—திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 10 | பகலத்கீதை | பகவத்கீதை |
| 7 | 21 | அடையதற்கு | அடைவதற்கு |
| 8 | 1 | பிறந்தஊவாறும் | பிறந்தவாறும் |
| 9 | 9 | தந்தியங்களாகின்ற | தந்திரியங்களாகின்ற |
| 14 | 26 | சுடர்இல | சுடர்இலகு |
| 16 | 16 | செய்வனாக | செய்வேனாக |
| 21 | 6 | படைப்பிறம் | படைப்பிற்கும் |
| 26 | 2 | அர்ச்சாவதரம் | அர்ச்சாவதாரம் |
| 41 | 21 | நாம்மாழ்வாரை | நம்மாழ்வாரை |
| 46 | 4 | திருமதிசையாழ்வார் | திருமழிசையாழ்வார் |
| 51 | 2 | பெற்றவர்சுள் | பெற்றவர்கள் |
| 53 | 21 | கிவபெருமான் | சிவபெருமான் |
| 59 | 13 | பொருன் | பொருள் |
| 70 | 11 | பரலௌசிகம் | பரலௌகிகம் |
| 71 | 6 | பரவதநுபவம் | பகவதநுபவம் |
| 73 | 15 | இறச் கின்ற | இறக்கின்ற |
| 75 | 1 | திளியுருவனை | ஒளியுருவனை |
| | 8 | நிலமேகம் | நீலமேகம் |
| | 26 | சொல்லிப்படுகின்ற | சொல்லப்படுகின்ற |
| 81 | 4 | மேதய்ப்பதற்கி | மேய்ப்பதற்கு |
| 84 | 14 | கைகளிறே | கைகளிலே |
| 85 | 2 | சிறப்புகாளைச் | சிறப்புகளைச் |
| 88 | 9 | அநுபவித்து | அநுப்வித்தது |
| 90 | 14 | பிரத்தியாகாரம் — புலன்களைத் தடுத்து நோக்கி இருத்துதல் | |
| 91 | 10 | ஐத்தும் | ஐந்தும் |
| 96 | 11 | தார்ந்திருக்கும் | சார்ந்திருக்கும் |
| 97 | 9 | 'அவர் | 'அவா, |
| 122 | 7 | உனக்கேநாய் | உனக்கே நாம் |

## பேராசிரியர்
## டாக்டர் ந. சுப்புரெட்டியாரின் நூல்கள்

**ஆசிரியம் :**

1. தமிழ் பயிற்றும் முறை
2. கவிதை பயிற்றும் முறை
3. அறிவியல் பயிற்றும் முறை
4. கல்வி உளவியல் கோட்பாடுகள்
5. யுனஸ்கோ: அறிவியல் பயிற்றும் மூலமுதல் நூல்

**இலக்கியம் :**

6. கவிஞன் உள்ளம்
7. காலமும் கவிஞர்களும்
8. காதல் ஓவியங்கள்
9. அறிவுக்கு விருந்து
10. முத்தொள்ளாயிர விளக்கம் (பதிப்பு)
11. பரணிப் பொழிவுகள்
12. அறிவியல் தமிழ்
13. திருக்குறள் கருத்தரங்கு மலர்—1974 (பதிப்பு)
14. கம்பனில் மக்கள் குரல்
15. காந்தியடிகள் நெஞ்சுவிடு தூது (பதிப்பு)
16. திருவேங்கடமும் தமிழ் இலக்கியமும்
17. தமிழ் இலக்கியத்தில்—அறம், நீதி, முறைமை
18. புதுவை(மை) கவிஞர் (சுப்பிரமணியபாரதியார் - ஒரு கண்ணோட்டம்

19. பாவேந்தர் - பாரதிதாசன் ஒரு கண்ணோட்டம்
20. திருக்குறள் தெளிவு
21. வாய் மொழியும் வாசகமும்
22. பல் சுவை விருந்து

**சமயம், தத்துவம் :**

### (அ) விளக்க நூல்கள்

23. முத்திநெறி (தமிழக அரசு பரிசு பெற்றது)
24. சிலநோக்கில் நாலாயிரம்
25. வைணவமும் தமிழும்
26. சைவ சமய விளக்கு
27. ஆன்மிகமும் அறிவியலும்
28. வைணவ உரைவளம் (ஐதிகம், இதிகாசம், சம்வாதம்)
29. கலியன் குரல்
30. கீதைக் குறள் (பதிப்பு)
31. கண்ணன் எழில் காட்டும் கவிதைப் பொழில் (பதிப்பு)
32. ஆண்டாள் பாவையும் அழகு தமிழும் (பதிப்பு)
33. கீதைப் பொழிவுகள்
34. கண்ணன் துதி
35. இராமர் தோத்திரம்
36. முருகன் துதியமுது
37. நவவித சம்பந்தம்
38. அர்த்த பஞ்சகம்
39. திருமழிசையாழ்வாரின் பாசுரங்கள்—ஓர் ஆய்வு (பதிப்பு)
40. திருப்பாவை விளக்கம்—முதற்பகுதி
41. திருப்பாவை விளக்கம்—இரண்டாம் பகுதி

### (ஆ) திருத்தலப் பயண நூல்கள் :

42. மலைநாட்டுத் திருப்பதிகள்

43. தொண்டை நாட்டுத் திருப்பதிகள்
44. பாண்டிநாட்டுத் திருப்பதிகள்
45. வடநாட்டுத் திருப்பதிகள்
46. சோழநாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி (த. அ. ப. பெற்றது)
47. சோழநாட்டுத் திருப்பதிகள் - இரண்டாம் பகுதி (டை
48. தம்பிரான் தோழர்
49. நாவுக்கரசர்
50. ஞானசம்பந்தர்
51. மாணிக்கவாசகர்

திறனாய்வு :

52. கவிதையநுபவம்
53. பாட்டுத் திறன்
54. கம்பன் படைத்த சிறு பாத்திரங்கள்
55. அகத்திணைக் கொள்கைகள்
56. புதுக்கவிதை - போக்கும் நோக்கும்
57. கண்ணன் பாட்டுத் திறன்
58. பாஞ்சாலி சபதம் - ஒருநோக்கு
59. பாரதீயம் (த. அ. ப. பெற்றது)
60. குயில்பாட்டு - ஒரு மதிப்பீடு
61. உயிர் தந்த உத்தமன் (பதிப்பு)
62. ஆழ்வார்கள் ஆரா அமுது
63. விட்டு சித்தன் விரித்த தமிழ்
64. பரகாலன் பைந்தமிழ்
65. சடகோபன் செந்தமிழ்
66. தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை.
67. பாவேந்தரின் பாட்டுத்திறன்
68. பாண்டியன் பரிசு—ஒரு மதிப்பீடு

**வரலாறு, தன் வரலாறு :**

69. நினைவுக் குமிழிகள் - முதற் பகுதி
70. நினைவுக் குமிழிகள் - இரண்டாம் பகுதி
71. நினைவுக் குமிழிகள் - மூன்றாம் பகுதி
72. நினைவுக் குமிழிகள் - நான்காம் பகுதி
73. நினைவுக் குமிழிகள் - ஐந்தாம் பகுதி
74. மலரும் நினைவுகள்
75. நீங்காத நினைவுகள்
76. வேமனர்
77. குரஜாட
78. சி. ஆர். ரெட்டி
79. தாயுமான அடிகள்
80. பட்டினத்தடிகள்
81. வடலூரர் வள்ளல்
82. பிரதிவாதி பயங்கரம்

**அறிவியல் :**

83. மானிட உடல்
84. அணுவின் ஆக்கம்
85. இளைஞர் வானொலி
86. இளைஞர் தொலைக்காட்சி
87. அதிசய மின்னணு
88. தமது உடல் (த. அ. ப. பெற்றது)
89. இராக்கெட்டுகள் (த. அ. ப. பெற்றது)
90. அம்புலிப் பயணம்
91. தொலை உலகச் செலவு
92. அணுக்கரு பௌதிகம் (செ. பல்கலைக் கழகப் பரிசு பெற்றது)
93. இல்லற நெறி
94. வாழையடி வாழை
95. அறிவியல் விருந்து (தமிழ் வளர்ச்சிக் கழகப்பரிசு

96. தமிழில் அறிவியல்—அன்றும் இன்றும் பெற்ற)
97. வானமண்டலக் காட்சி
98. விண் வெளிப் பயணம்

**ஆராய்ச்சி :**

99. கலிங்கத் துப்பரணி ஆராய்ச்சி
100. வைணவச் செல்வம் (தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு)
101. வடவேங்கடமும் திருவேங்கடமும்
102. Religion and Philosaphy of Nalayiram with special reference to Nammalvar
102. Studies in Arts and Sciences (61 st birtn Day commemoration: volume)
104. Collected Papers;

# இந்நூலாசிரியரைப் பற்றி...



79-அகவையை எட்டிய இந்த நூலாசிரியர் பி. எஸ்சி., எல். டி., வித்வான், பி. ஏ., எம். ஏ., பிஎச்டி., பட்டங்கள் பெற்றவர். ஒன்பதாண்டுகள் துறையூர் உயர்நிலைப் பள்ளியில் தலைமை ஆசிரியராகவும்(1941—1950), பத்து ஆண்டுகள் காரைக்குடி அழகப்பர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் தமிழ்ப்பேராசிரியராகவும் (1950-60), பதினேழு ஆண்டுகள் திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துறைத் தலைவராகவும் பேராசிரியராகவும் (1960-77) பணியாற்றி ஓய்வு பெற்றவர். 1978-இல் சென்னையில் குடியேறி பதினைந்து மாதங்கள் (1978 பிப்ரவரி-1979 ஜூன்) கலைக்களஞ்சியத் தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றியவர். நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் நம்மாழ்வார் தத்துவத்தை ஆராய்ந்து டாக்டர் (பிஎச்.டி.) பட்டம் பெற்றவர். தமிழிலும் ஆங்கிலத்திலும் பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதி வெளியிட்டவர். பெரும்பாலும் இவை நூல் வடிவம் பெற்றன; பெற்றும் வருகின்றன. தவிர, ஆசிரியம் (5) இலக்கியம் (18), சமயம்(27), திறனாய்வு (16), அறிவியல் (17), ஆராய்ச்சி (6)' வாழ்க்கை வரலாறு (13) —என்று102 நூல்களின் ஆசிரியர். இவர்தம் அறிவியல் நூல்களில் இரண்டும், சமய நூல்களில் மூன்றும், திறனாய்வுநூல்களில் ஒன்றும் தமிழக அரசு பரிசுகளும்; அறிவியல் நூல்களில் ஒன்று சென்னைப் பல்கலைக் கழகப் பரிசும், ஒன்று தமிழ் வளர்ச்சிக் கழகப் பரிசும்-ஆக எட்டு நூல்கள் பரிசுகள் பெற்றவை. இவர்தம் அறிவியல் பணியைப் பாராட்டி குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் 'அருங்கலைக் கோன்' என்ற விருதையும், பண்ருட்டி வைணவசபை இவரது சமயப் பணியைப் பாராட்டி 'ஸ்ரீ சடகோபன் பொன்னடி' என்ற விருதையும், இவர்தம், தமிழ்ப்பணியைப் பாராட்டித் தமிழக அரசு திரு. வி. க. விருதையும், மதுரை காமராசர் பல்கலைக் கழகம் 'தமிழ்ப் பேரவைச் செம்மல் என்ற விருதையும் வழங்கிச் சிறப்பித்தன. இனிமை, எளிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச் சிறப்புகளாகும்.